எனது தோழிக்குக்கூட கொடுக்கிறதற்கு இல்லையே, நானே தனித்துத்தின்றால் எனக்கு திருப்தி ஆகுமா? என்றாலும் எனக்குப் பசிபொறுக்க முடியாமல் இருப்பதால், தின்னத் தான் வேண்டும் என்று பழத்தைச் சாப்பிட்டாள். அது அதிகமதுரமாயும் பெரிதாயும் இருந்ததால் ஒன்றுக்குமே சாப்பிடமுடியவில்லை, மற்றொருபழத்தை மடியில் கட்டிக் கொண்டு, இவ்வளவு சிரிங்காரமாக இருக்கிற இந்தசோட்டம் யாரோ ஒரு பெரிய பிரபுவுக்குச் சொந்தமாகத்தான் இருக்கும் இதற்குக் காவலர்களும் இருப்பார்கள், ஆனால் நா வரும் பொழுது தோட்டத்தின் வாசலில் ஒருவரையும் காண வில்லை, காலை 5-மணி முதல் நடந்துவந்த சிரமத்தோடு வெயிலும் உக்கிரமாய் இருந்ததால் நிழலிலாவது தங்குவோ மென்று இத்தோட்டத்தில் நுழைந்துவிட்டேன், காவலாளிகள் பழம் திருடின என்னைக் கண்டால் தண்டியாமல் விடார்கள். சரீரதண்டனை செய்தாலும் செய்யட்டும், பாதகமில்லை, ஒருசமயம் சிறையில் கிடைக்கும்படியாக ஆகிவிட்டால் நான் என்ன செய்வது? என் சகியின் காரியம் அல்லவோ வியர்த்த மாகும். பாழும் பசியல்லவோ இப்படிப்பட்ட தப்பிதமான காரியத்திற்கு என்னை உள்ளாக்கிவிட்டது! நல்லது! இதோ இருக்கிற தென்னை எவ்வளவு சிறப்பாகக் காண்கிறது, இது சிறுகன்றாய் இருப்பதால், குலையும் இப்பொழுது வைத்தது தெரிகிறது. இதல் உள்ள தேங்காய்களும், முற்றிலும் இளசாகவே இருக்கலாம் என்று, தன்கைக்கு எட்டின இரண்டு இளநீர்களைப் பிடுங்கி இதை எப்படி உரித்து சாப்பிடுகிறது என்று சுற்றிலும் பார்த்தாள்.

சர்வேயர்களால் நிலங்களின் அத்துக்காகப் புதைக்கப் பட்ட கருங்கல் ஒன்று அந்தத்தோட்டத்தின் வேலியோரமா தென்பட்டது. அந்த கல்லில்தேங்காயைக் கொண்டுபோ மோதி இரண்டையும் உரித்து, ஒன்றை தலையில் ஒரு குச்சி

ளுல் குத்திவிட்டு அதிலுள்ள இளநீரைச் சாப்பிட்டாள். இள நீர் முழுவதும் குடிக்கமுடியவில்லை. அவ்வளவு ஜாஸ்தியாக இருந்தது. பிறகு அதை உடைத்து, அதிலுள்ள வழுக்கலை கையால் சுறண்டி சாப்பிட்டுவிட்டு, மற்றொருகாயை, முன் போல் மடியில்கட்டிக்கொண்டாள். சுவற்ணும்பாளுக்கு பசி, தாகம் இரண்டும் முற்றிலும் அடங்கிவிட்டது. அவ்விடம் விட்டு சற்று முன்னுக்குகையில், சிறிய படிக்கட்டுகளோ டும், அழகிய மதில்களோடும், நிறைந்த தாமரைப் புஷ்பங்க ளோடும், அதிக சீதளமான ஜலத்தைவகித்த தடாகமும், பக்கத்தில் மண்டபமும், பூஞ்சோலைகளும், பார்ப்பவர்களை தன்னிடத்தில் வாருங்கள் என்னிடம் வந்து உட்காருங்கள் என்று கூப்பிடுவதுபோல, அங்கு பிளாச்சினுல் பின்னப்பட் டுள்ள படல்களின்மேல் படர்ந்திருக்கும் முல்லை சம்பங்கி கொடிகள் இளங்காற்றினுல் ஆடவும் மயில்கள் கிளிகள் எதேச்சையாக அத்தடாகத்தின் சமீபமாக ஓடுகிறதையும் கண்டு, நாம் களைப்பாறுகிறதற்கு ஏற்ற இடமிதுதான் என நினைந்து, அவ்விடம்போய் ஓர் மண்டபத்தின்கீழ் போட்டிருக் கும் சலவைக்கல்லின்மேல் உட்கார்ந்து யோசிக்கலானுள்.

நான் முந்தியே ஒரு தப்பிதம் செய்ததற்கு என்ன சம்ப விக்குமோ என்று மனவருத்தம் அடைந்தேன். இப்பொழுது இரண்டு விதமான பிழைகள் செய்தவளாகினேன், இதுவரை யில் இங்கு ஒருவரையும் காணேன், ஒருக்கால் வருவார்களா கில், என்னைக்கண்டு ஏதாவது இம்சை செய்யாமல் போகார் கள். எது வந்தாலும் நான் அனுபவிக்கத்தானே வேண்டும் வேறு என்னசெய்வது! யாராவது என்னை காணுமுன் ஓடி விடுவோ மென்றாலும், வழியில் நான் அவர்களைச் சந்தித்து விட்டால், ரொம்பகொடுமை உண்டாகி நான் திருடி என்றே மதிப்பார்கள். இரண்டாவது எனக்கு எழுந்துபோக முடி யாதுபோலிருக்கிறது. உடம்பு மிகக் களைப்பாயிருக்கிறது.

சற்று படுத்துத் தூங்கி கொஞ்சம் சிரமபரிஹாரம் அன பிறகுதான் நான் எழுந்து போகவேண்டும். அதற்குள் எது வந்தாலும் வரட்டும், என்று அந்தக் கல்லின்மேல் படுத்துத் தூங்கிவிட்டாள்.



## இரண்டாம் அத்தியாயம்.



நாட்டார்க்கு நல்லசெயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக்கொளல்

தோட்டக்காரன் — எடீ ஏ சண்டாளி என்னை இத்தனைகாலமாக என் எழுப்பவில்லை?

தோட்டக்காரி — நீங்க தூங்க நீங்களே எழுப்பலுல் வைவீங்க என்று பயந்திருந்தேன.

தோட்டக்காரன் — நான எத்தனை நாழிகைக்கு தோட்டம் போகவேண்டுமென்பது உனக்குத் தெரியாதா?

தோட்டக்காரி — 10 மணிக்குப் போவீங்க. இன்று ஏதாவது விடுமுறையாக இருக்கலாம் என்று நினைத்தேன்.

தோட்டக்காரன் — எனக்கு இன்று சரியாய் பயமாய் பிடித்தது, இத்தனை நாழிகையாக, நமது எஜமான தோட்டத்தில் உள்ளபழங்களை யார், யார், பறித்துக்கொண்டு போனார்களோ, தெரியவில்லை; திருட்டுப்போன பொருள்களுக்கு எனக்கு பாக்கி இருக்கும் சம்பளமும் போதாது, அல்லது எனக்குள்ள ஆஸ்தியும போதாது. இந்தப் பாழுந் தூக்கம் வந்து என்குடியை இப்படிகெடுக்குமா? எனறாலும் போய்ப் பார்க்கிறேன், தடிக்கம்பும் வெற்றிலைப் பெட்டியும் எடுத்துவா யென்று சொன்னான். உடனே அவனுடைய பெண்சாதி எடுத்துவந்து கொடுத்தாள். அதை வாங்கிக்

கொண்டு தோட்டம் பார்க்கச்சென்றான். தோட்டத்தின் வாசல் கதவு திறந்துகிடந்தது. அவனுக்குவயிறு பகீரென்று எரிந்தது. அடி ஆசதே! நான் என்னடிசெய்வேன்!! காரியம் மிஞ்சி அலையோ போச்சுது, என்றுசொல்லி தோட்டத்திற்குள் விர்ரென்று போனான். அங்கேமண்டபத்தின் சலவைக் கல்லின்மேல் படுத்து அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த பெண்ணைப் பார்த்து திடுக்கிட்டு யார் இந்தக் கல்லின்மேல் படுத்திருப்பது. ஒருக்கால் நமது எஜமானரும் எஜமானியும் தோட்டம்பார்க்க வந்திருக்கலாமோ.

எஜமானி மட்டும் சலவைகல்லின்மேல்படுத்து அயர்ந்து தூங்குகிறாள் போல் காணப்படுகிறது, என்று சமீபமாக போய்பார்த்தான். இவன் நினைத்தபடி அல்லாமல் வேறொரு ஸ்திரீ சளைப்பினால படுத்துக்கொண் டிருப்பதையும் மடியிலும், தலைமாட்டிலும் மூட்டைகள் கட்டிக்கொண்டிருப்பதினால், இவள் ஒரு யாத்திரியாய் இருக்கவேண்டு மென்றும அனுமானித்து எழுப்ப எண்ணங்கொண்டான். மறுபடியும் இவ்வளவு சிரமத்தோடு தூங்கும்இப்பாக்கியவதியை எழுப்புவோமானால், இந்த அம்மாளுக்கு ரொம்ப தொந்தரவுண்டாகும், அவள்தானே எழுந்திருக்குமட்டும் நான் தோட்டத்தை சுற்றிப்பார்த்து அதில் ஏதாவது களவுபோயிற்றோ என்று பார்த்து வருகிறேன் என்று சொல்லி, தோட்டம் பார்க்கப் போய்விட்டான். சலவைக் கல்லின்மேல் படுத்திருந்த சாரதாம்பாள் 2 மணிக்குமேல தூங்கிவிட்டு, கண்ணை விழித்துக்கொண்டு, நாலுபக்கமும் பார்த்தாள். சற்றுநேரத்திற்கெல்லாம் யாரோ மனிதர் வருகிற காலடிச் சத்தம் கேட்டது. சற்று ஊக்கமாய்ப்பார்க்கையில் மரத்தின் இடையில் ஒருவர் வருகிறதைக்கண்டு இவன்யாராய் இருக்கலாம், ஒரு சமயம தோட்டத்துக்கு காவலாளியாய் இருக்கலாமோ? அல்லது இங்கு பழங்கள் திருடவந்தவனாக இருக்கலாமோ?

என்று யோசிக்கையில், தோட்டக்காரனும் நாலாபக்கமும் சுற்றிப்பார்த்து தோட்டத்தில் ஒன்றும் களவு போகாததை கண்டு மெத்த சந்தோஷித்து, இந்த அம்மாள் எழுந்துவிட்டதாகக் காண்கிறது போய்ப்பார்ப்போம் என்று நெருங்கி சுவர்ணம்பாள் கிட்டவந்தான். இவள், அப்புருஷனைக்கண்டு ரொம்ப பயந்தவளாய் இருந்தாலும், தனது தைரியத்தை விடாமல், நீயார்? என்று கேட்க, தோட்டக்காரன் இவ்வளவு ரூபவதியான பெண்ணை, இதுவரையில் பாராமல் இருந்ததினால் இவனுக்கு உடம்பு சிலிர்த்துப்போய் பேசவும் வாய்குளற, நான் தோட்டத்திற்கு காவலாளி, என்பெயர் சொக்கப்ப ரெட்டி, நீங்கள் யார்? என்று கேட்டான்.

சுவர்ணம்பாள் — எனது இருப்பிடம் பக்ஷிராஜபுரம்.

தோட்டக்காரன் — இங்கு ஏன் வந்தீர்கள்?

சுவர்ணம்பாள் — வெகுநாள் முந்தி, என் புருஷன் பணம் சம்பாதிக்க பரதேசம்போனார். அவர் உடம்பு அசௌக்கியமாய் சென்ற ஞாயிற்றுக்கிழமை எங்கேயோ இருந்து வந்து இவ்விடம் இருந்து 10 மயில் தூரத்திலிருக்கிற சௌந்தர்ய புரத்தில் இருக்கிறதாக எனக்கு சமாசாரம் வந்தது, பார்த்து வரப்போகிறேன் என்றாள்.

தோட்டக்காரன் — நீங்கள் தனியே வந்திருக்கிறீர்களா வேறு யாராவது துணை உண்டா?

சுவர்ணம் — நான் ஒருவரையும் துணைக்கு அழைத்து வர இல்லை. நான் ஏகாங்கியாகத்தான் வந்தேன்.

தோட்டக்காரன் — ஏகாங்கி என்று சொன்னதும் இவனுக்கு அதிக சந்தோஷமாச்சுது. நல்லது இந்த தோட்டத்திற்குள் என் அனுமதியன்றியில் ஏன் வந்தீர்கள்?

சுவர்ணம் — நான் அதிகாலையில் ஊரைவிட்டு கிளம்பினேன். அதிகதூரம் நடந்து வந்ததனால் உடம்பு சிரமமாக

இருந்ததுந்தவிர இத்தோட்டத்தின் வாசற்கதவும் திறந்திருந்தது. அதனால் உள்ளே யாராவது இருப்பார்களா பார்ப்போம் என்று வந்தேன். அப்பொழுது இங்கு ஒருவரையும் காணேன். எனக்குப் பசி அதிகமாய் இருந்ததால் அதோ இருக்கிற ஒட்டுமாங்காயில் இரண்டுபழமும், இந்தப்பக்கத்திலிருக்கிற தென்னையில் இரண்டு இளநீரும் பறித்து ஒவ்வொன்று சாப்பிட்டுவிட்டு பாக்கியை எனது மடியில் வைத்திருக்கிறேன். இதோபாரும்! என்று மடியை அவிழ்த்துக் காண்பித்தாள் யதார்த்தவாதியான சுவர்ணம்.

தோட்டக்காரன் — தோட்டத்திற்குள் நுழைந்ததே தப்பு தவிர பழமும் திருடிவிட்டாய் உன்னை நான் கொஞ்சத்தில் விடப்போகிறதில்லை! என்ன சொல்லுகிறாய்?

சுவர்ணம் — நான் நடந்ததைச் சொல்லிவிட்டேனே, வேறு என்ன சொல்வது.

தோட்டக்காரன் — நீ சொல்லாவிட்டால் நான் கண்டு பிடிக்க மாட்டேனோ?

சுவர்ணம் — நானே ஒண்டியாய் தங்களிடம் அகப்பட்டுக்கொண்டேன். தாங்கள் எப்படி செய்தாலும் சம்மதி தான், தயவுபுரிந்து என்னை விட்டாலும் விடுங்கள், அல்லது சிறைக்கு அடையும்படி செய்தாலும் செய்யுங்கள்.

தோட்டக்காரன்—நீ என்ன, ரொம்ப நயப்படுத்துகிறாய்ப்போல் இருக்கிறது? (மனதிற்குள் இவள் நம்மிடம் சிக்கிக் கொண்டாள்). அதெல்லாம் என்னிடம் பலிக்காது; எனது எஜமானனிடம் அழைத்துப்போகாது விடேன் கிளம்பு.

சுவர்ணம் — ஐயா தங்களுக்கு தயையில்லையா? அனாதை புருஷனுடைய அசௌகரியத்தைப் பார்க்கப்போகிறவள் என்னுடைய பேதமையால் இங்கே தவறி நுழைந்துவிட்டேன் மன்னிக்கவேண்டும், இதோ ஓடியேவிடுகிறேன்.

தோட்டக்காரன் — உன் புருஷன் எத்தனை வருஷ காலமாச்சு உன்னை விட்டுப்பிரிந்து?

சுவற்ணம்—சுமார் 10-வருஷத்திற்குமேல்இருக்கலாம்.

தோட்டக்காரன் — 10-வருஷமாய் புருஷனில்லாமலேயா இருப்பாய்?

சுவற்ணம் — உத்தமஸ்திரீகள் ஏன் இருக்கமாட்டார்கள்?

தோட்டக்காரன் — சாப்பாட்டிக்கு என்ன செய்கிறாய்?

சுவற்ணம் — கொஞ்சம் நகைகள் இருந்தது, அதை வித்துச்சாப்பிட்டேன். இப்பொழுது எனக்கு ஒருதோழி ஒருவள் அன்னவஸ்திரம் கொடுக்கிறாள்.

தோட்டக்காரன் — வேறு யாராவது அன்னவஸ்திரம் கொடுத்தால்?

சுவற்ணம் — எனக்குவேண்டாம்.

தோட்டக்காரன் — ஏன் வேண்டாம் என்கிறாய். மனதிற்குள் சம்மதந்தான், வெளிக்கு சம்மதமில்லாதபாவனையாய் காட்டுகிறாப்போல் இருக்கிறது.

சுவற்ணம் — என் மனப்பூர்வமாய் நான் சம்மதிக்கேன், எனக்கு விடைகொடுங்கள் போகவேண்டும்.

தோட்டக்காரன் — உன்னைவிட்டுவிடுகிறேன், நீ திருடினதை ஒருவருக்கும் சொல்லவில்லை. அப்புறம் நம்ம சேதி என்ன?

சுவற்ணம் — தங்களுக்கு உதவிபுரிய என்னிடம் ஒருகாசும் கிடையாது, வழியில் கட்டமுது கொண்டுவரவும் வழியில்லை. நான பரம ஏழையாச்சுதே, என்செய்வது?

தோட்டக்காரன் — நீயோ அதிரூபவதியாயிருக்கிறாய் உனக்கு எத்தனையோ பிரபுக்கள் வேண்டியது கொடுத்து

ஒற்றுமைசெய்ய இருக்க, நீ இப்படி ஏழையென்றும் அனு கையென்றும் சொல்வது கொஞ்சமகூட சரியாய் இல்லையே?

சுவர்ணம்—பிறர் தயவை விரும்புகிறவளல்லவென்று முன்னமேயே சொல்லிவிட்டேனே.

தோட்டக்காரன்—உன்னைப்பார்த்தால் எனக்கு அதிக வருத்தமுண்டாகிறது. உன்னை விட்டுவிடவும் எனக்கு மனம் வரவில்லை. எனக்கு வீட்டில் அவலக்ஷணமான ஒரு பெண்டாட்டி இருக்கிறாள் வேணுமானாலும் அவளைக்கூடத் துரத்திவிடுகிறேன். நீ சொன்னபடியெல்லாம் நான் கேட்கிறேன். இது அன்றி, உன்னை ஒருநாளும் நான் கைவிடேன், வேண்டியது கொண்டு வந்து கொட்டி விடுகிறேன். வெகு சௌகரியமாய் நம்மிடத்திலேயே நீ இருக்கலாம், போவோம் வீட்டுக்கு வா.

சுவர்ணம்—என்னுடைய பிராணநாதனைவிட என்னைக் காப்பாற்றுகிறவர் உலகில் உண்டா? தாங்கள் சொல்வது என செவிக்கு ஏறுமா? அனாவசியமாய் பிதற்றவேண்டாம்.

தோட்டக்காரன்—உன் புருஷன் உன்னைவிட்டு பத்து வருஷமாய் ஓடிப்போனவன் உன்னை ரக்ஷிப்பண்ணுவானா? அப்படி ரக்ஷிப்பண்ணினாலும் அவனிடம் பணம் ஏது? பிறகு நீயும் அவனுமாய் திண்டாடி நிற்கவேண்டியவர்கள் தான்.

சுவர்ணம்—பரம ஏழையாயிருந்தாலும் பதியே ஸ்திரீகளுக்கு ஆஸ்தி. அவரிடம் பணம் இல்லாவிட்டாலும் நான் வேலைசெய்தாவது அவரை ரக்ஷிக்கவேண்டியது. இது உத்தமஸ்திரீகளின் லக்ஷணம்.

தோட்டக்காரன்—ஆனால் நீ என்னோடு வீட்டிற்குவரமாட்டாயோ?

சுவர்ணம்—அனாவசியமாய் பேசாதேயும். ஒருநாளுமில்லை.

தோட்டக்காரன் — நீ என்னோடு வாராமல் வேறு எங்கு தப்புகிறது, புறப்படுகிறாயா இல்லையா ?

சுவர்ணம் — நான் இதுவரையில் பர புருஷனையே திரும்பிப் பாராதவள். பதிவிருதையை பங்கப்படுத்தவேண்டாம். உமக்கு ஆகாது! என்னை வேணுமானால் உம்முடைய எஜமானனிடம் அழைத்துப்போம்.

தோட்டக்காரன் — நான்கண்ட உன்னை எஜமானனிடமா கொண்டுபோய்விடுவேன். பேஷ்! பேஷ் !! வாடிபோகலாம், என்று கிட்ட நெருங்கி கையைப்பிடிக்க முயன்றான்.

சுவர்ணம் — அடேபாவி! என்னைத் தொடாதேயடா, நான் உத்தமியடா, நீ சொல்லுகிறவார்த்தை என் சரீரத்தை பிளக்குதடா, உனது சகோதரியடா, பரஸ்திரீகளை பலவந்தப்படுத்தலாகாதடா, நான் யாருமற்ற பாவியடா, சண்டாளா என்னை விட்டுவிடு.

தோட்டக்காரன் — பலே! சண்டி பேர்வழி! கீலித்தனம் உன்னிடம்தான்பிறந்ததோ? என்ன சாலக்கு, என்ன வார்த்தை அசறு தக்கபடி அழகை; யாரிடம் இவ்வளவும் கற்றுக்கொண்டாய் ?

சுவர்ணம் — நான் இந்த மகாபாவி கையில் அகப்பட்டுக்கொண்டேன். தெய்வமே! தப்புவதற்கு எனக்கு ஒருவழியும் தோன்றவில்லை. இந்த குளத்தில் விழுந்துவிடுவோமென்றாலும் ஒருநொடியில் என்னைக் கரையில் தூக்கிவிடுவான். இதற்கு நான் என்னயோசனை செய்கிறது, ஒன்றுந்தோன்றவில்லையே ஆ ஈஸ்வரா! உம்மைத் தவிர வேறு துணை ஒருவரையும் நான் நம்பவில்லை. என்னுடைய சகியோ! என் விஷயமாய் கவலைப்பட்டுக்கொண்டு ஒருவேளை, ஆகாரமும் சாப்பிடாமல் இருப்பாள். அவள் காரியத்தை முடித்துவிட்டு வந்த பிறகு இப்படிப்பட்ட அசம்பாவிதமான காரியங்கள்

எனக்கு வரலாகாதா தோழி! நான் என்னசெய்வேனடி! பாவி எதிரில் நின்றுகொண்டு கற்ணகடூரமான வார்த்தைகளைச் சொல்லுகிறானே! என உயிர்போகிறதே, என்புருஷன் தேசாந்தரம் போகும்பொழுது என்னையும் அழைத்துப்போயிருக்கலாகாதா? அல்லது உடனே என்பிராணன் தான போகக்கூடாதா. அபாக்கியவதியாய் போய்விட்டேனே, ஆ தெய்வமே! இப்படிப்பட்ட பாபஹிம்சையில் என்னை விட்டாயே என் தலையில் இடியென்று ஒரு இடி விழாதா? நான் இறக்கமாட்டேனோ அம்மா! அம்மா!! என்று கதறினள். அந்தச்சத்தம் தோட்டத்தின்வெளியே போய்க் கொண்டிருந்த குதிரைவீரன் ஒருவன் காதில் விழ, அவ்வீரன் குதிரையைவிட்டிறங்கி இவ்விடம் யாரோ ஸதிரீயின் சத்தம் மாதிரிகேட்கிறது! இது எங்கு இருந்து வரலாம் தோட்டத்திற்குள்ளிருந்து அழுகிறதாகத் தெரிகிறது என்று குதிரையை கையில்பிடித்துக் கொண்டபடியே தோட்டத்தில் நுழைந்ததும் ஒருஸதிரீயை ஒரு புருஷன் கைபிடித்து இழுப்பதைக்கண்டான். உடனே போர்வீரனுக்கு அதிக கோபமுண்டாகி குரூரத்தன்மையான இந்தப்பயல் இவனது மீசையும், தாடியும், நரைத்தகண்டும், கோரப்பல்லும் இந்த அதிரூபவதியான இவளை இழுப்பதைப்பார்த்தால் மோசமான எண்ணங்கொண்டு இழுப்பதாய்த் தெரிகிறது. நல்லது இவனை நான் கொலைபண்ணுமல் விடுகிறதில்லையென்று தன் கத்தியை உருவிக்கொண்டு, அந்த தோட்டக்காரன் கிட்டப் போய், ஏ பரமத்ஷ்டா? என்றதும் தோட்டக்காரன் நடு நடுங்கி திடீரென கீழேவிழுந்தான். அவனைப் போர்வீரன் தூக்கிநிறுத்தி இந்தப்பெண்ணை ஏன பலவந்தப்படுத்தினாய், உண்மையைச் சொல்லுகிறாயா அல்லது இந்தக்கத்தியால் உன்னை ஒரேவெட்டாய் வெட்டிப்போடட்டுமா? என்று கேழ்க்கவும், தோட்டக்காரனுக்கு உயிர்போனதுபோல் ஆய்விட்டது. சுவர்ணம்பாள் பார்த்து சுவாமியே நமக்கு

உதவி செய்ய வந்தவராகக் காண்கிறது. தோட்டக்காரன் தெரியாதவனுக் நம்மிடம் உளரினால் அதற்குநானும் கோபித்துக்கொண்டு இவனை போர்வீரனிடம் காட்டிக்கொடுக்கக் கூடாது. பிச்சைக்காரன்மேல் பிரம்மாஸ்திரம் தொடுக்கிறதா? என்று எண்ணிக்கொண்டு ஏ பிரபுவே! தாங்கள் அவரை ஒன்றும் செய்யவேண்டாம் விட்டுவிடுங்கள், நான் ஒருவழிப்போக்கி இந்த இடத்தில் தவறிவந்தேன், தவிர இத்தோட்டத்தில் இருக்கிற மாம்பழத்தையும் தேங்காயையும் திருடித்தின்றேன். அதை இந்தக்காவலர் கண்டு நான் திருடின குற்றத்திற்காக என்னை அவர் எஜமானனிடம் இழுக்கிறார், நான் வரமாட்டேன் என்னைவிட்டுவிடும் என்று தான் அழுதேன், ஆகையால் அவரை தாங்கள் வெட்டிவிட நியாயமில்லை, வேணுமானால் திருடினஎன்னை வெட்டிவிடுங்கள் ரொம்பசம்மதந்தான் என்று சொன்னாள். இவ்வார்த்தையைக்கேட்டதும் தோட்டக்காரனுக்கு கொஞ்சம் தைரியம் பிறந்தது. ஆம் ஐயா இவள் திருடினாள் அதற்காக இவளை என் எஜமானனிடம் கூப்பிடுகிறேன் என்றான். உடனே சிப்பாய் அந்தப் பெண்ணைப் பார்த்து உன்னைப் பார்த்தால் யோக்கியமானவளாய்க் காண்கிறது நீ என் இப்படிப்பட்டகாரியம் செய்யவேண்டும்? என்று கேட்டான் அதற்கு சுவர்ணாம்பாள் என் வயிற்றுப் பசியின் கொடுமையால் இப்படிச்செய்தேன் என்றாள். வயிற்றுப்பசியா? இவள் பலே பேர்வழி. அடே தோட்டக்காரா? இவளை பின்கட்டாகக்கட்டி ஒருநொடியில் பந்துலு சேஷய்யகாருவிடம் கொண்டுபோய்விடு. அவர் போலீஸ்காரரிடம் இவளை ஒப்பிவிப்பார் நாளையதினம் நான்போய் திரும்பிவருவேன், அப்பொழுது இவளை கோர்ட்டில் பார்த்துக் கொள்ளுகிறேன் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். தோட்டக்காரன் சுவர்ணாம்பாளின் நல்லகுணத்திற்குமெச்சி, அம்மா! தங்களுடைய நன்மையைப்பற்றி நான் என்னசொல்வேன், பரம

சண்டாளன் நான், தங்களைபெண்டுக்கிபூக்க அதைஅந்தசிப்பாயிடம் நீங்கள் சொல்லவேண்டியதைவிட்டு, என்னைக்காப்பாற்ற எண்ணங்கொண்டீர்களே; தங்களைப்போல் தயாளுயார் இருப்பார்கள், என்னைரக்ஷித்த தங்களைவிடுவதற்கும், முடியாதவனாகி விட்டேன்? தாங்கள் எப்படி உத்தரவளிக்கிறீர்களோ அப்படியே செய்கிறேன் என்று சுவற்ணாம்பாள் காலில் விழுந்தான். தங்களை நிர்பந்தப்படுத்தின நான் சிக்ஷை அடைய வேண்டியது அவசியம், ஆகையால் நீங்கள் போய்விடுங்கள். அதனால் என்ன சங்கடங்கள் வந்தாலும் நான் அனுபவித்துக்கொள்ளுகிறேன், தாராளமாய் போவதுதான் நல்லது என்று காலைப்பிடித்துக்கொண்டு நான் செய்த தப்பிதத்திற்கு மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டான். சுவற்ணாம்பாள் அண்ணே! எழுந்திரும், சிப்பாய் காணுவதற்கு முந்தியே என்னைவிட்டிருந்தாலும் நலமாய் இருக்கும், அவன்பார்த்து உம்மை எஜமானனிடம் பின்கட்டாய் கட்டிக்கொண்டுபோ என்று சொல்லிப்போய் இருக்கிறான், அப்படிக்கு நீர் செய்யாமல் என்னை இப்பொழுது விட்டுவிட்டால் சிப்பாய் நாளையதினம் வந்து உமது எஜமானரிடம் சங்கதிகளைச்சொல்லி வேலையைவிட்டு நீக்கிவிடுவார். ஒருசமயம் திருடினவர்களை விட்டுவிட்டதற்காக உம்மை சிறையில்வைத்தாலும் வைப்பார். அந்த தொந்தரவுக்கு நீர் உள்ளாவது நல்லதன்று. ஆகையால் உம்முடைய மேல் வேஷ்டியால் கட்டும். என்னை எஜமானரிடம் இழுத்துச் செல்லும், நீர் ஒன்றுக்கும் யோசிக்கவேண்டாம், எதுவந்தாலும் நான் மகாபாவி அனுபவிக்கவேண்டியதுதான் என்று சொன்னாள் தோட்டக்காரன் எழுந்து ஒன்றும் செய்யாமல் வருத்தத்தோடு நின்றான். நின்றால் பொழுது போய்விடுகிறது, சீக்கிரமாக என்னைக் கட்டும் என்று சுவற்ணாம்பாள் கட்டாயப்படுத்தவே, தோட்டக்காரன் மகாபதிவிரதை நீங்கள், உம்மை சுவாமி காப்பாற்றுவார். எஜமானர் தங்களை

அவதிப்படுத்தாமல் இருக்கும்பொருட்டு இந்த ஊரில் என் எஜமானருக்கு விரோதியான ஒருபிரபு இருக்கிறார். அவரிடம்போய் நான் சொல்லி தங்களை தப்புவிக்க என்னால் ஆனமட்டும் முயலுகிறேன் என்று தனது மேல்வேஷ்டியால் அதிகமாய் இறுக்காமல் தளர்ச்சியாகவே சுவற்றும்பாள் கைகளை பின்கட்டாகக்கட்டி, இந்தப்பாவி உத்தமமான தங்களை அழைத்துப்போகிறேன் சிறைக்கு, என்று விசனத்தோடு எஜமானர்வீடு இருக்கிற சிங்கபுரம் டவுனுக்கு அழைத்துப்போனான். போகும்பொழுது வழியில் கண்டவர்கள் என்னடா இந்த அம்மாளைக் கட்டிக்கொண்டுபோகிறாய் என்று பட்டணத்திலுள்ள ஒவ்வொருவரும் கேட்க, இவள் தோட்டத்தில் பழம் திருடினாள் என்று தோட்டக்காரன் சொல்லவும், பாவி! ஒருபழம் பசிக்குப் பறித்துத் தின்றால் தான் என்ன அதற்காக உத்தமியாய் காணப்படுகிற இந்த அம்மாளை அந்தமகாபாவி பந்துலுப்பயலிடமா காட்டிகொடுக்கவேணும் அவன் பரமதுஷ்டனாச்சுதே, இலேசுவில் விடமாட்டானே என்று ஒவ்வொருவரும் தோட்டக்காரனை வைதார்கள். தோட்டக்காரன் முன்னிலும் அதிகமான வருத்தத்தோடு எஜமானர் வீட்டுவாசலில் கொண்டுபோய் நிறுத்தி சங்கதியைத்தெரியப் படுத்தினான். அப்பொழுது சாயரக்ஷை சுமார் 5-மணி இருக்கும். பந்துலுவுக்கு சமாசாரந் தெரிந்ததும், நம்முடைய தோட்டத்தில் கூட திருடுகிறவர்கள் உண்டா? நல்லது! நான் இதை கொஞ்சத்தில் விடுகிறதில்லை, இதற்குத் தகுந்தபடி நான் பிரயத்தனம் எடுத்துக்கொள்ளாவிட்டால் இந்த ஊரில் குடியிருக்கவேண்டியதில்லை, என்று சொல்லிவிட்டு தன்னுடைய லேவாதேவியைப் பற்றிக் கவனித்துக் கொண்டிருந்தான்.



## மூன்றும் அத்தியாயம்.



*அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வம் இகநலம்*
*பெற்றாடமியாளை மூத்தற்று.*

பந்துலு சேஷய்யகாரு என்பவர் சிங்கபுரம் டவுனுக்கு ஒருபெரியபிரபு. இவருக்கு எதேஷ்டமான பூமியும் ரொக்கமும் இருக்கிறது. இவன் எப்பொழுதும் பணமே லக்ஷியமாய் நினைக்கிறவன். இந்த ஊருக்கு எந்த பெரிய உத்தியோகஸ்தர்கள் வந்தாலும் இவனை முதலில் வந்து கண்டுவிட்டுத்தான் போவார்கள். உத்தியோகஸ்தர்கள் தாங்கள் வசிக்க இவனுடைய பங்களாக்களைத்தவிர வேறு குடியிருக்க இடம் அகப்படாது. அல்லாமல் ஏதாவது பணம் வேண்டுமென்றாலும் இவனைவிட வேறு கடன்கொடுப்பவர்கள் ஊரில் ஒருவரும் இல்லை.

இவன் பெண்டாட்டி பெண்கள் ரொம்பபேர்போனவர்கள். வேறு பிரபுக்கள், துரைமார்கள் வீட்டிற்கு சாயரக்ஷை ஆனதும் வண்டிகட்டிக்கொண்டு புருஷர் அன்றியில் தாங்களே போய் சிநேகமாய் பேசிக்கொண்டு அவர்கள் இஷ்டம் போல் சாவகாசமாய் வருவார்கள், இதைப்பற்றி பந்துலு கேழ்க்க வாயில்லை. தப்பித்தவறி ஒரு சமயம் தனது பெண்டாட்டியைக் கேட்டுவிட்டாலோ பந்துலுவுக்கு பிடித்தது சனியன், கொஞ்சத்தில் அவனை விடாதகள், தலையில் துணியைப் போட்டுக் கொண்டு ஓடிப்போகவேண்டியதுதான்

இப்படிக்கிருப்பது அவனுக்கு ஒரு பெரிய சிபார்சு. எப்படியும் நமக்குப பணமதானேவேண்டியது. இதுகள் எக்கேடுகெட்டாலுமென்னென்று தண்ணியைத்தெளித்துவிட்டுவிட்டான். இவன் உத்தம பிராமணஜாதியாய் இருந்தாலும் அந்த அனுஷ்டானத்தை கொஞ்சமும் கையாடுகிற

தில்லை. சிலசமயங்களில் இவனுக்கு வேலை அதிகமாயிருந்தால் தகப்பன் தாய் திதிகள்கூட பண்ணமாட்டான். பந்துலு என்றால் ஊரெல்லாம் நடுக்கம், இவன் துலையானு என்றே ஊரில் உள்ளவர்கள் நினைக்கிறார்கள். இவனுக்கு விரோதமாய் அந்தவூரில் வெகுநாளாய் வாழ்ந்து இப்பொழுது சனைத்த பிரபு ஒருவர் இருக்கிறார் இவரைத்தான் முந்தி தோட்டக்காரன் சொன்னது. இவர் ரொம்ப தர்மிஷ்டர், எந்த ஏழைகளுக்கும் உதவிபுரிவார். பணக்காரர்களை இவர்லக்ஷியம் பண்ணுகிறதில்லை. பந்துலு எந்த காரியம் ஊருக்குப்பொதுவில் செய்ய பிரயத்தனப்பட்டாலும் அதற்கு மாறாகவே இவர் நடக்கமுயலுவார். ஒரு சமயம் இவர்சொல்படி அனுகூலமாகுவுமாகும். ஆனால் உத்தியோகஸ்தர்களின் உதவி இவருக்கு கொஞ்சங்கூட இல்லை. லஞ்சம்கொடுத்து ஒரு காரியத்தையும் சாதிக்கிறது இல்லை.

இவருக்கு ஊரில் உள்ள ஜனங்களின் உதவியே ஜாஸ்தி. ஒருசமயம் பந்துலு வீட்டை இடித்து கொட்டைபோடவேணுமென்று நினைத்தாலும் அப்படியே ஒருநொடியில் முடிந்துவிடும். இப்படிப்பட்ட துஷ்டகாரியத்தில் இவர் பிரவேசிக்கிறதேயில்லை.

நிற்க, பந்துலு ராத்திரி 8-மணிவரையில் தன்காரியத்தைப் பார்த்துக்கொண்டிருந்து அதற்குமேல் வெளியேவந்தான். அதுவரையில் சுவற்றும்பாள் பின்கட்டு முறையாகக் கட்டினபடியே வாசலில் சேவகனோடு நின்றுகொண்டிருந்தாள். எஜமான் பந்துலுகாரு வெளியேவந்ததும் ஆரடா சேவகா என்னடாவிசேஷம்? என்றுகேட்க தோட்டக்காரன் ஐயா இதோநிற்கிற இந்த அம்மாள் இன்று 12-மணிசுமாருக்கு நமது தோட்டத்திற்குள் புகுந்து இரண்டு ஒட்டுமாங்கனியும் இரண்டு தேங்காய்களும் பிடுங்கி தின்றுவிட்டு சலவைக்கல் மண்டபத்தில் படுத்துத்தூங்கினாள் நான் கண்டு

பிடித்து தங்களிடம் இழுத்துவந்தேன், இதோ இருக்கிறாள் இந்தஸ்திரீயென்று அவன் முன்னிலையில் சுவற்ணம்பாளை நிறுத்தி கைகட்டை அவிழ்த்தான்.

பந்துலு இவளைப் பார்த்ததும் மனம் பேதித்து, இவளைப்பார்த்தால் நல்ல யுவதியான பெண்மாதிரி காண்கிறது, அதிர்ஷ்டம்தான் இவள் நம்மிடம் சிக்கிக்கொண்டாள் என்று மனதில் எண்ணிக்கொண்டு ஏ லண்டி ஏண்டி நம்முடைய தோட்டத்தில் பழம் திருடினாய்? என சுவற்ணம் அதிக வார்த்தை பேசவேண்டாம், நான் திருடினது வாஸ்தவம் தான், தாங்கள் என்னை என்ன சிக்ஷை செய்யவேண்டுமோ அதைச் செய்யுங்கள் என்றாள். பந்துலு உடனே ஒரு சேவகனைக் கூப்பிட்டு (தனியே இவளை நமக்கு சரிப்படுத்து) இவளை அழைத்துப்போய் நமது பங்களாவுக்கு பக்கமாய் இருக்கிற கிடங்கில் வெகு ஜாக்கிரதையாய் வைத்துக்கொள். காலையில் இவளை போலீஸ்காரர்களிடம் அனுப்பிவிடுகிறேன் என்று சொல்லிவிட்டு தோட்டக்காரனை நீ போய்வா தோட்டத்தை பத்திரமாய் பார்த்துக்கொள் என்று உத்திரவளித்து விட்டு வீட்டிற்குள் சென்றான். தோட்டக்காரன் விடைபெற்றுக்கொண்டு சேவகனைக் கூப்பிட்டு தனித்து சொன்னதைப் பார்த்தால் எஜமானன் வித்தியாசமான எண்ணங் கொண்டிருப்பதாய் தெரிகிறது, இதற்குத்தகுந்த ஏற்பாடு இப்பொழுதே செய்யவேண்டும். என் உயிரைக் காப்பாற்றின இந்த பாக்கியவதிக்கு ஒரு தொந்தரவும் உண்டாகாதபடி சுவாமி ரக்ஷிப்பார் என்று ஓட்டமாக பெரிய பண்ணை அண்ணாப்பிள்ளை வீடு நோக்கிச் சென்றான்.

அப்பொழுது பிள்ளைவாள் சாப்பிட்டுவிட்டு தேசாந்திரம் இருந்து போலீஸ் இன்ஸ்பெக்டராய் வந்திருக்கிற தனது பழையபந்துவும் சிநேகிதருமான சௌரிராஜ் பிள்ளையிடம் வெற்றிலைபாக்குபோட்டுக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்.

இந்த சமயத்தில் தோட்டக்காரன் ஓடிவந்து திடீரென கீழே விழுந்து, அனைதைப்பெண்ணை ரக்ஷிக்கவேண்டும்! அனைதை! அனைதை! என்று அலறினன். பிள்ளைவாள் என்னடா சங்கதி ஏண்டா கத்துகிறாய்? என்று கேழ்க்க தோட்டக்காரன் நடந்த விர்த்தாந்தங்களை ஆதியோடந்தமாய் சொல்லி முடித்தான். கேட்டுக்கொண்டிருந்த சௌந்தராஜபிள்ளை நாம் இப்பொழுதே போய் அதற்குத் தக்க முயற்சி செய்யவேண்டும் என்று அண்ணுபிள்ளையைக் கூப்பிட்டார். இப்பொழுது அவள் என்னமாதிரி இருப்பாள் என, தோட்டக்காரன் பந்துலுகாரு பங்களாவின் பக்கத்திலிருக்கிற கிடங்கில் இருப்பாள், பந்துலு சாப்பிட்டுவிட்டு 10 மணிக்குமேல் கட்டாயம் போவான். அப்பொழுது அந்தப்பெண்மணி பந்துலுவுக்கு உடன்படாது பிராணனைத்தான் விடப்போகிறாள் என்றதும், பிள்ளைவாள் தன்னுடைய பெரிய குதிரையை வண்டியில் கட்டச்சொல்லி 10 ஆள்களோடு உடனே கிளம்பி பங்களாவுக்குப் போனார்.

இவர்கள் போகும்பொழுது இன்றேடே பந்துலுவை தீர்த்துவிடுகிறது. இந்தமாதிரியான துஷ்டகாரியங்கள் வெகுசாக இந்த ஊரில் நடத்திக்கொண்டிருக்கிறான். தண்டப்பிரயோகம் செய்ய இது ஏற்ற சமயம், கூடியவரையில் சண்டையில்லாமல் அந்த பெண்பிள்ளையை தப்புவிக்க முயலுவோம், இல்லாவிட்டால் இருக்கவே இருக்கு பார்ப்போம் என்று போனார்கள். தோட்டக்காரன் வீடுபோய்ச் சேர்ந்தான்.

கிடங்குக்கு கொண்டுபோன சேவகன், போகும்பொழுது வழியில் சுவற்றும்பாளைப் பார்த்து உங்கள் அதிர்ஷ்டம்தான் இன்று எங்கள் எஜமானனைக் கண்டீர்கள். அவர் உங்களிடம் வெகு பிரியமாய் இருக்கிறார் வேண்டியதைக் கொடுப்பார் வெகு சௌக்கியமாய் நீங்கள் வாழலாம் என, சுவற்றும்பாளுக்கு உடம்பு படபடத்து மயிர் கூச்சல்

அன்றிருந்தது. நான் அகப்பட்டுக்கொண்டேன், தப்பும் வழி யில்லை, தோட்டத்தில் காப்பாற்றின தெய்வம் இப்பொழுது எங்கேபோயிற்று! என்று மனதை திடப்படுத்திக்கொண்டு சேவகனைப்பார்த்து, உன் எஜமானர் அபிப்பிராயப்படி இருக்கத் தடையென்ன, நேற்று ராத்திரி சாப்பிடாததால் ரொம்ப களைப்பாய் இருக்கிறது. உன் எஜமான் அவசிய மாய் பங்களாவுக்குவரப்போகிறார் அப்பொழுது பிராமணப் பிள்ளையிடம் சொல்லி எனக்குக் கொஞ்சம் சாதம் கொண்டு வரும்படிசொல், அதற்குள் நான் எங்கேயாவது ஓடி விடு வேன் என்று உனக்கு சமுசயம் உண்டானால் கிடங்கில் என்னை அடைத்து கதவைவேணுமானாலும் பூட்டிக்கொண்டு போ என்றாள். சேவகன் அப்படியே செய்கிறேன் அம்மா, என்று சொல்லி சுவற்றுப்பாலை கிடங்கில் கொண்டுபோய் விட்டு கதவைச்சாற்றி பூட்டிவிட்டு எஜமான் வீட்டுக்கு ஓடி வந்தான். பந்துலுகாரு இவன் வருவதைப்பார்த்து என் னடா விசேஷம்? என்று கேட்க ஐயா! காரியம் கொஞ்சத் தில் முடியவில்லை.

நான் சாமானியமானவனா? விட்டுவிடுவேனா? அப் புறம் வேண்டியமட்டும் போகும்போதெல்லாம் குழைஅடித் தேன். கடைசியாக சரிதான் என்று ஒப்புக்கொண்டாள். தனக்கு ரொம்ப பசியாய் இருக்கிறது உன் எஜமான் வரும் பொழுது பரிசாரகன்வசம் கொஞ்சம் சாதம் கொண்டுவரும் படி சொன்னாள் என்றான். பந்துலுவுக்கு சந்தோஷம் பொறுக்கமுடியவில்லை. நம்முடைய கௌரவமே கௌரவம்! உடனே பரிசாரகனைக் கூப்பிட்டு, வெள்ளித்தட்டில் சாதம் கறி குழம்பு முதலானவைகள் ஒருவருக்குக்காணும்படியாய் எடுத்துக்கொண்டுவா என, அவன் அப்படியே நிமிஷத்தில் கொண்டு வந்தான். பந்துலுகாரு வண்டியைக் கட்டிக் கொண்டுவரச்சொல்ல வண்டிக்காரன் பெரியமாடுகள் சவா

ரிக்குப் போயிருந்ததால் உழவுமாட்டைத்தவிர வேறு மாடு கள் இல்லை அதை கட்டிக்கொண்டுவந்து நிறுத்தினன். பந்துலுகாரு இந்தமாடு நடந்து பங்களாவுக்குப் போய்ச் சேர ராத்திரி முழுதிலும் செல்லுமே! இதுவும் ஒரு உபத்திர வமா என்று சொல்ல, வண்டிக்காரன் அதற்கு யோசிக்க வேண்டாம காலமணியில் பங்களாவில் சேர்ப்பித்து விடுகி றேன் என்ருன். பந்துலு கொஞ்சம் திருப்தி அடைந்து வண்டியில் உட்கார்ந்து சென்ருர்.

10 ஆள்களோடு புறப்பட்டுப்போன அண்ணுப்பிள்ளை சௌந்தரராஜபிள்ளை இருவரும் ஆள்களை தூரமாக நிறுத்தி விட்டு, பங்களாபக்கத்திலிருக்கிற கிடங்குபக்கமாய் போசை யில், சுவற்ணும்பாள் கிடங்கின் சுவற்றில் இருக்கிற சன்ன லின்மேல் தலையை வைத்துக்கொண்டு பாழும தெய்வமே! என்னை இப்படி சோதிக்கிருயே! என் புருஷன் போன வழியோ தெரியவில்லை; தோழிக்கு உதவி செய்யக் கிளம் பின என்கதி இப்படியா ஆகவேணும்! நான அவமானபபடு வதை என் பதி பார்த்தால் சகிபபாரா? ஒருவருக்கும் ஒரு விதமான உபத்திரவம் இதுவரையில் நான் செய்யவில்லையே! என்னை இப்படி பங்கப்படுத்த எண்ணங்கொண்ட துஷ்டர் களை சிக்ஷிக்கமாட்டாயோ! அந்த மகாபாதகன் வருவதற்கு முன் என் உயிரை விட்டுவிடவேண்டியதுதான் உத்தமமான காரியம், ஏதாவது கயிறு அகப்பட்டால் அதை என் கழுத் தில் கட்டிக்கொண்டு இறந்துவிடலாம் ஒன்றும் காணவில் லையே? இந்த கல் சுவற்றில் மோதிக்கொண்டால் என் மண் டை பிளந்து நான் இறக்கமாட்டேனு? அல்லது நாக்கைப் பிடுங்கிக்கொண்டால் என்பிராணன் போகாதா? பதியிழந்த பாவி! பதிவிரதாதர்மமும் இழந்து என் உயிர் இருக்க வேண்டுமா? அன்னியபுருஷர்களின் கை என்மேல் படுமா? எனக்கு என்னவோ செய்கிறதே! ஒன்றும் தோன்றவில்

லேயே? ஆ தெய்வமே! என்று அலறிக்கொண்டு, சன்னல் இரும்புக்கம்பியில் தன் தலையை மோதிக்கொண்டாள். கேட்டுக்கொண்டிருந்த அண்ணுபிள்ளையும் சௌந்தரராஜ பிள்ளையும் இனி தாமதித்தால் மோசம் வந்துவிடும் என்று எதிரே வந்து அம்மா பயப்படாதே! உன்னுடைய விர்த்தாந்தத்தை தோட்டக்காரன் எங்களிடம் ஓடிவந்து தெரிவித்தான். நாங்கள் க்ஷணமே புறப்பட்டுவந்தோம், உன்னைக் காப்பாற்றுவதில் தடையில்லை, எங்களை உன் சகோதரர்களாக பாவித்துக்கொள், விகல்பமாய் நாங்கள் சுவப்பனத்திலும் நினைக்கோம், என்றதும் அண்ணன்மார்களே! நீங்கள்தான் எனக்கு துணை, நான் அனாதி, பரதேசி என்று அழுதாள். அழவேண்டாம் பந்துலு கதவைத் திறந்து உள்ளே வந்ததும் நீ சற்று பேசிவிட்டு வெளிக்கு போய்வருகிறேன் என்று சொல்லி செம்பில் ஜலம் எடுத்துக்கொண்டு கிடங்கின் ஓரமாய் அந்த மூலைக்குவா, அப்பொழுது பார்த்துக் கொள்கிறோம் பயப்படாதே. அப்படி நீ வெளியேவர முடியாவிட்டாலும் பிறகு நாங்கள் பார்த்துக்கொள்கிறோம் தைரியமாய் இரு என்று சொல்லிவிட்டு இவர்கள் போனதும் பந்துலு வண்டி வந்து சேர்ந்தது.

பந்துலுகாரு வண்டியைவிட்டு கீழே இறங்கி வண்டிக்காரனைப் போகச்சொல்லிவிட்டு சாதத்தை தானே எடுத்து வந்து பங்களாவில் வைத்தான். சேவகனைக் கூப்பிட்டு சீக்கிரம் இந்த லஸ்டர் குளோப் எல்லாவற்றையும் துடைத்து விளக்கேற்று. கிடங்குத் திறவுகோலை கொண்டுவா நான் போய் அந்தப் பெண்ணை அழைத்து வருகிறேன் என்று சொல்லி திறவுகோலை வாங்கிக்கொண்டுபோய் கிடங்கின் கதவைத்திறந்து அம்மா? என்று கூப்பிட, சுவற்ணம் மெலிந்த குரலோடு ஏன் என்றாள். சாப்பாடில்லாமல் மிகவும் களைப்படைந்ததாக காண்கிறதே! என ஆம் துரையே நேற்று

ராத்திரி சாப்பிட்டது என்று முன்னிலும் அதிகமான மெலிந்த குரலோடு சொன்னாள். இந்த வார்த்தைகள் பந்துலு காதில் விழுந்ததும் திரேகம் புளகாங்கிதமாக ஆய்விட்டது. சகியே என்னுடைய ஆஸ்திகள் முழுவதும் உன்னுடையதே, என் சரீரமும் உன்னுடையதுதான், இது சத்தியம் சாப்பாடு கொண்டுவந்திருக்கிறேன் பங்களாவிற்குப் போய் கால்கை அலம்பிக்கொண்டு சாப்பிடலாம்வா என்றான். நல்லதென்று சுவற்றைம்பாள் பங்களாவிற்குப்போனாள். அவ்விடம் போனதும் இந்த லஸ்டரைப் பார்த்தாயா! இது சீமையிலிருந்து நேராக தருவித்தது. அதோ இருக்கிற நிலைக்கண்ணாடி எவ்வளவு பெரியதுபார்! இந்தமாதிரி இவ்வுலகத்திலேயே ஒருவரிடத்திலும் இல்லை. இந்த கட்டிலுக்கு ஸ்பெஷலாக யானைதந்தம் தருவித்து வேலை செய்தேன்! இது 1500 ரூபாய் அடங்கியது. புலிமாதிரி யானைமாதிரி பொம்மைகளைப் பார்த்தாயா! தத்ரூபம் அப்படியே இருக்கிறது. கீழே விரித்திருக்கிற இரத்தன கம்பளம்பார்! அதின் ஓரத்தில் நன்முத்தே கோர்த்திருக்கிறேன். இதைப்பார் இந்த வாத்தியப்பெட்டி 24 ராகம்வரையில் வாசிக்கும். பியானவாத்தியம் இது, என் பெரியபெண் ரொம்ப நன்றாக வாசிப்பாள். துரைகள் எல்லாரும் என் பெண்ணினிடம் வாத்தியம் கேட்பதற்காகவே அடிக்கடி இவ்விடம் வருவார்கள். உனக்கு இதில் பழக்கம் உண்டோ? இல்லை பிரபோ! கொஞ்சம் அப்பியசித்தேன்; என் புருஷன் தேசாந்திரம் போனதும் நிறுத்திவிட்டேன். பாட்டில் உனக்கு பழக்கமும் இருக்குமோ? எனக்குப் பாட்டுத்தான் ஒருகுறை! ஏதோ பாடுவேன் இப்பொழுது பசி அதிகமாய் இருப்பதால் சற்று உத்திரவு கொடுங்கள் சாப்பிட்டுவிட்டு சாவகாசமாய்ப் பேசிக்கொள்வோம் என்றாள்.

உடனே பந்துலு ஜலம் செம்பில் கொண்டுவந்து கொடுக்க, வெளியே போக எங்கே போகலாம் என்றாள்.

அம்மா கிடங்குக்குப் பக்கமாய் போங்கள் வெகு சௌகரிய மான இடம் இருக்கிறது, நான் விளக்கு கொளுத்திக்கொண்டு வரட்டுமா என்றான். அடாடா! தாங்கள் என்பேரில் இருக்கும் அன்பிற்கு பாத்திரமாக நான் தங்களை திருப்தி செய்ய முடியவில்லையே யென்று துக்கிக்கிறேனே! அப்படிக்கிருக்க, தாங்கள் எனக்கு பணிவிடைசெய்தால் அதை நான் சகிப்பேனு! வேண்டாம் யாராவது வேலைக்காரிகள் இருந்தால் வரச்சொல்லுங்கள். இந்த வேலைக்காரிகள் ஒருவரும் இல்லையே! அவசியமில்லை நானே வருகிறேன் போகலாம்.

சுவற்ணம்பாள் — வேண்டாம்! வேண்டாம்! நான் மெள்ளமெள்ள போய்வருகிறேன், தாங்கள் சற்றுதேசகாலம் இவ்விடமே வாத்தியப்பெட்டியில் நல்ல ராகம் ஒன்று வாசித்துக்கொண்டிருங்கள் என்று சொல்லிவிட்டு செம்பில் ஜலத்தோடு கிடங்குப்பக்கமாய்ப் போனாள். அவ்விடம் செம்பை கீழே எறிந்துவிட்டு பிரபுக்கள் நிற்கிற இரும்பு வேலி பக்கமாய் போனாள். அங்கே சௌந்தரராஜபிள்ளையும் அண்ணப்பிள்ளையும் இன்னமும் அந்தப்பெண் வரக்காணும்! ஏதோ பிசகுகள் நேர்ந்துவிட்டதோ தெரியவில்லை. ஆள்களைக்கூப்பிட்டுக்கொண்டாவது பங்களாபக்கம் போய்ப் பார்ப்போமா? என்று பேசிக்கொண்டிருக்கையில், சுவற்ணம் ஐயா! நான் வந்தேன், எப்படியாவது என்னை ரக்ஷியுங்கள் என்றாள். உடனே பிரபுக்கள் அம்மா உனது வரவை எதிர்பார்த்து நீ வராததால் பலவிதமாக யோசித்துக்கொண்டு இருந்தோம். இப்பொழுது இந்த இரும்புவேலியைத் தாண்டவேண்டுமே, அது எப்படி உன்னால் முடியும் என்று கேட்க சுவற்ணம்பாள் கீழே கட்டப்பட்டிருக்கிற கட்டையின்மேல் ஏறிக்கொள்கிறேன், அந்த கொலைக்காரன் வந்துவிடுவான், அதற்குள் என்னை தாங்கள் தூக்கிவிடுங்கள், ஆபத்துகாலத்தில் உதவிசெய்யும்பொருட்டு என்னைத் தொடு

வதால் ஒரு தோஷமும் இல்லை, தூக்கிவிடுங்கள் என அப்படியே இவள் கட்டையின்மேல் ஏறிக்கொண்ட உடன் பிரபுக்கள் இருவரும் அந்தப்பெண்ணின் இரண்டு புஜத்தையும் பிடித்து தூக்கிவிட்டார்கள். இவள் இரும்பு வேலியைத் தாண்டி வந்ததும், பக்கத்தில் தயாராய் நின்றுகொண்டிருந்த குதிரை வண்டியில் தக்ஷணம் மூவருமாய் ஏறிக்கொண்டார்கள். உடனே வண்டிக்காரன் குதிரையை சவுக்கால் ஒரு அடி அடிக்கவே குதிரை பிடிங்கிக்கொண்டது அதிவேகமாய் ஓட ஆரம்பித்தது.

இவர்கள் குதிரைவண்டியில் போகும்பொழுது சௌந்தரராஜபிள்ளை நமது வீட்டுக்குப் போகவேண்டாம். 25 மைல் தூரத்திலிருக்கிற தன் மைத்துனன் வீட்டுக்குக் கொண்டுபோய் இந்தப் பெண்ணை சேர்த்துவிடுவோம். அங்கே அனுகூலமாய் நடத்தப்படுவாள். பிறகு அவள் போகும் இடத்துக்கு போகட்டும் என்றார். நாம் போகிற ஊர் வண்டிக்காரனுக்குத் தெரிந்தால் ஒருசமயம் வெளியே தெரிந்தாலும் தெரியும், அப்பொழுது பந்துலு மறுபடியும் இந்தப் பெண் நம்வசம் விட்டுப் போகும்பொழுது கொண்டுபோய் விடுவான் என்று இவர்கள் எண்ணங்கொண்டு வண்டிக்காரனை வீட்டுக்குப் போகச்சொல்லிவிட்டார்கள்.

சௌந்தரராஜபிள்ளை வண்டியோட்டும் வேலையில் அமர்ந்தார். குதிரைவண்டி இவருக்கு செம்மையாய் ஓட்டத் தெரியும். ஆதலால், குறுக்குமார்க்கமாய் தன்மைத்துனன் இருக்கிற கள்ளப்பாளையத்திற்கு ஓட்டிக்கொண்டு போனார். இவர்கள் மூவரும் வண்டியில் போகுங்காலம் ராத்திரி சுமார் 12 மணி இருக்கும். இதற்குமேல் 20 மைல் தூரம் போகவேணும். அப்பொழுது அண்ணுப்பிள்ளை சுவர்ணம்பாளைப் பார்த்து உனக்கு எந்தஊர் தாயே என்றுகேட்க சுவர்ணம்பாள் பிரபுக்களா என்னை ஆபத்துகாலத்தில் ரக்ஷித்தீர்களே?

உங்களைப்போல் தர்மசாலிகள் யார் இருப்பார்கள்! நீங்கள் செய்த உபகாரத்திற்கு பேதைப்பெண் நான் என்ன உதவி புரியப் போகிறேன்! நான் இருப்பது பக்ஷிராஜபுரம். பக்ஷிராஜபுரம் எனவே சௌந்தரராஜபிள்ளை பக்ஷிராஜபுரமா? அந்த ஊரில் யார் நீங்கள்? என்று கேட்க அவ்வூரில் ஒரு பெரியபிரபு ஒருவர் இருந்தார். அவருக்கு நான் வாழ்க்கைப்பட்டேன் பாபி அதிர்ஷ்டவசத்தால் என் புருஷனுடைய திரவியங்கள் யாவும் தாசிவேசிகளுக்குப் போய்விட்டது. பிறகு நாங்கள் சாப்பாட்டுக்குக்கூட சிரமப்படவேண்டியதாய் இருந்தது. இந்த நிர்ப்பாக்கியமான நிலைமையைக் கண்டு அவருக்கு சகிக்க முடியாததோடும், அவருக்காக நான் கஷ்டப்படுவதையும் கண்டு மிகுந்த வியாகூலமுடையவராய் வீட்டைவிட்டு வெளியேபோகாமல் இருந்தார். இப்படி இருக்கையில் ஒருநாள் நீ படுகிற கஷ்டத்தை என்னால் பார்க்க முடியவில்லை, நான் எங்கேயாவது ஓடிவிடுகிறேன் என்று சொன்னதும், அவரைப் பாதுகாப்பதிலேயே கண்ணாய் இருந்தேன். தவறிப்போய் ஒருநாள் நான் பகலில் செய்த வேலையினால் ராத்திரி அயர்ந்து தூங்கிவிட்டேன். அப்பொழுது அவர் எனக்கு கட்டிக்கொள்ள வஸ்திரம் இல்லையே என்ற எண்ணத்தால், தான் கட்டிக்கொண்டிருந்த நல்ல வஸ்திரப் ஒன்றை போட்டுவிட்டு பாக்கி அவரிடம் இருந்த ஒரேஒரு கந்தலோடு ஓடிப்போய்விட்டார். அப்புறம் அவர் கதி என்ன ஆயினவோ என்று சொல்லும்பொழுதே கண்ணீர் பலபல என உதிர்ந்ததை அண்ணாப்பிள்ளை இருட்டானதால் தெரியாதவராய் இருந்தாலும், பக்கத்தில் உட்கார்ந்திருந்தவரானதினால் அவர்மேல் தெளிபட்டு தனது மேல் வஸ்திரம் நனைந்துவிடும்போல் இருந்தது. அம்மா அழவேண்டாம் பிறகு உங்கள் கதி என்னவாச்சுது என்று கேட்கையில் சௌந்தரராஜபிள்ளை அடடா! நமது பெண்டாட்டியா இவள்! இந்த அலங்கோலமான ஸ்திதியோடு நான் என்கண்

மணியைப் பார்க்கிறது? நல்ல வேளையாய் நம்மை சுவாமி சமயத்தில் கூட்டிவிட்டது என்ற எண்ணமும், மனதில் பொறுக்கமுடியாத ஒரு கமறலும் உண்டாகி வண்டி ஓட்டுவதிலும் கவனமில்லாதவராய் வண்டியின் பக்கத்தில் சாய்ந்து விட்டார். உடனே, ஆகா! இது என்ன இது! வினைப்பயனை அனுபவிக்கவேண்டியதைத் தடுக்கமுடியுமா? நான் என்ன இவ்வளவு அனாதியுமடைந்தேன் என்று தொண்டையைக் கனைத்துக்கொண்டு தைரியமாய் சுவர்ணாம்பாள் சொல்லைக் கேட்டுக்கொண்டபடியே வண்டியையும் ஓட்டிக் கொண்டிருந்தார்.

சுவர்ணாம்பாள் அண்ணா! ராத்திரி 3 மணி சுமாருக்கு நான் கண்ணை விழித்துப்பார்த்தேன், பக்கத்தில் படுத்திருந்த எனது பிராணநாதரைக் காணாமல் வந்துவிட்டதே மோசம் என்று வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு அந்த நிமிஷம்முதல் பக்ஷிராஜபுரம் முழுவதும், மறுநாள் முழுமையும் அன்னம் ஆகாரம் இல்லாமல் தேடினேன் காணவில்லை என்னை சாப்பிட உபசாரம் பண்ணுகிறவர்களும் இல்லை என்னுடைய மனவருத்தத்தைக் கேட்டு சாந்தப்படுத்துவாரும் இல்லை. பட்டினியோடே 15 நாள்வரையில் தண்ணியை அள்ளிக் குடித்துக்கொண்டு ஊர் ஊராய் தேடினேன், அகப் படவில்லை. பிறகு பக்ஷிராஜபுரம் வந்தேன் என் வீட்டிலோ ஒரு அரிசிகூட இல்லை. வேலை செய்து சாப்பிடுவோமென்றால் 15 நாள் பட்டினிகிடந்த என் அவயவங்கள் ஒரு துரும்பைக்கூட தூக்கமுடியவில்லை. நான் வீட்டின் கதவைத் திறந்து உள்ளேவந்ததும் வீடு முழுமையும் ஒரே குப்பையாகக் கிடந்தது. அதைக்கூட்டவும் முடியாதவளாய், மேல் தலைப்பினால் தாழ்வாரத்தில் ஒரு அங்கணம் தட்டிவிட்டு படுத்துக்கொண்டேன். பிறகு ஒருநாள் முழுவதும், என் ஸ்மரணை எனக்கே இல்லை. இப்பொழுது யாருடைய காரிய

மாய் புறப்பட்டு வந்தேனே அந்தப்பெண் என்னிடம் எப்போதும் பிரியமுடையவள், என் புருஷன் இருக்கும் காலத்திலும் என்வீட்டில் என்னோடுகூட இருப்பாள். அவள் நான் இல்லாத காலத்தில் எங்கேயோ போய்விட்டார்களே என்று மனவருத்தப்பட்டவளாய் இருந்ததாக பிறகு எனக்கு தெரிந்தது. என்வீடு திறந்துகிடந்ததைப் பார்த்துவிட்டு மறுநாள் காலையில் வீட்டிற்குள் வந்தாள். என்னுடைய அலங்கோலத்தைப் பார்த்து என்னடி? என்னடி? உனக்குவந்த விபத்து என்று படுத்துக்கொண்டிருந்த என்னை கூப்பிட்டுகேட்கவே? எனக்கு பேசமுடியவில்லை, கையைமாத்திரம் தாகத்திற்கு வேண்டும் என்ற பாவனையாய்க் காண்பித்தேன் உடனே எனது தோழி வீட்டுக்கு ஓடிப்போய், கல்சட்டியில் கொஞ்சம் சாதமும, செம்பில் தண்ணியும எடுத்துக்கொண்டு ஓடிவந்தாள். நான் படுத்துக்கொண்டபடியே கரைக்கப்பட்டிருந்த சாதத்தை வாங்கி கொஞ்சம் கொஞ்சமாய் சாப்பிட்டு, சற்று களை தெளிந்தது, எழுந்திருக்க முயன்றும் முடியவில்லை, பேசவும் நாக்கு சுவாதீனப்படவில்லை, அதுமுதல் எனது தோழி என் உடம்பு நல்ல நிலைமைக்கு வாத மூன்று நாள்வரையில் ஆகாரம் கொடுத்துக்கொண்டு என்னோடு கூடவே இருந்தாள். என அலங்கோலமான ஸ்திதியைப்பற்றி அவளும் என்னோடு வியாகூலப்பட்டு, உன் தலைவிதி இப்படி ஆச்சுது நீ வியசனப்படுவதால் என்னபிரயோஜனம? கூடிய சீக்கிரம் உன்புருஷனை காணுவாய். அவா உன்னிடம் வந்து சேருமட்டும் உனக்கு அன்னவஸ்திரம் என தமயனிடம் சொல்லி கொடுக்கச் செய்கிறேன், உனக்குக் தெரிந்த சங்கீதஙகளையும் படிப்பையும எனக்கு சொல்லிக் கொடுத்துக் கொண்டு என்னோடுகூடவே இரு. உன்னைவிட்டு இனி அரை நிமிஷமாகிலும் நான தனித்து இரேன் என்றாள்.

அதுமுதல் என் புருஷன் போன 10 வருஷகாலமாய் நான் அவளிடமே இருக்கிறேன். அவள் தமையன் பட்

டணத்தில் படிக்க போயிருந்த காலத்தில் இவளும் சிலசம
யம் சென்னை போவாள் நானும் கூடவே போவேன். இப்
பொழுது அவளுக்கு 18 வயது ஆச்சுது. சடங்காய் சுமார்
3 வருஷத்திற்குமேல் இருக்கும் அவளைக் கலியாணம் பண்
ணிக்கொள்ள அனேக ஜமீன்தார்கள், பிரபுக்கள் ஆசைப்படு
கிறார்கள். அவளிடம் சென்னையில் அன்பு பாராட்டின அவ
ளுடைய தமையன் சினேகிதன் ஒருவனைத் தவிர வேறு ஒரு
வரையும் மணம்புரியப் போகிறதில்லை அதுவிஷயமாகத்தான்
நான் ஒருவருக்கும் தெரியாமல் புறப்பட்டுவந்தேன். புறப்
படும்பொழுது வழிச்செலவுக்கு எனக்கு உதவிபுரிய முடியா
தவளாய் இதோ இருக்கிற கடிதத்தைமட்டும் சில கடிதாசி
டுளோடு என்னைப் பார்த்து எடுத்துக்கொள்ள வேண்டு
மென்ற எண்ணத்தோடு மேல் உப்பரிகையில் இருந்தபடியே
சன்னல் வழியாய் கீழேபோட்டாள். அந்த சமயம் நானும்
மற்ற யாரும் அவளோடு பேசக்கூடாது என்ற பந்தோபஸ்
த்தில் இரண்டுமூன்று நாளாகத்தான் வைக்கப்பட்டிருப்பதா
லும், ஏற்கனவே அவளும் நானும் கலியாணவிஷயமாய் முடி
வாய்ப் பேசிக்கொண்டிருப்பதாலும், அந்த ஜாடை தெரிந்து
கடிதாசு தாள்களை சற்றுநேரம் கழித்து வந்து பார்க்கையில்
இந்த காகிதம் அகப்பட்டது அதை எடுத்துக்கொண்டு வீடு
போய் ராத்திரி முழுவதும் தூக்கம் வராமல் படுத்திருந்து
விடிய இரண்டுமூன்று நாழிகைக்கு புறப்பட்டு அதிவேக
மாய் ஒருவர் கண்ணுக்கும் தெரியாமல் புறப்பட்டு சிவந்த
னூர் கிராமம் இருக்கிறதே அது எந்தப்பக்கமாய் இருக்கி
றது எவ்வளவுதூரமிருக்கும் என்று வழியில் தென்படுகிற
வர்களைக்கேட்கையில் அது இவ்விடமிருந்து சுமார் 20 மைல்
களுக்குமேல் இருக்கும். இதோ போகிற ரோட்டின்வழியா
ய்ப் போனால் சிங்கபுரம் போகலாம் அவ்விடமிருந்து வழி
கேட்டுக்கொள் என்றார்கள். அப்படியே புறப்பட்டு வரும்
பொழுது எனக்குச் சத்துருவான தோட்டம் தென்பட்டது.
அதின்பிறகு நடந்த விஷயம் தோட்டக்காரன் சொல்லி
இருப்பான் என்றாள்.

சௌந்தரராஜபிள்ளை மனவருத்தத்தோடு யாரிடமாவது கொஞ்சம்பணம் கடன்வாங்கிக்கொண்டு வாடகைக்கு ஒருவண்டி வைத்துக்கொண்டு வரலாகாதா ? அயோக்கியமான உன்புருஷன் உன்னைவிட்டபிறகு நீரொம்பவும் இளைத்துப்போனவளாகக் காண்கிறதே! என்றுகேட்க சுவர்ணம்பாள் கடன்வாங்க முடியாமல் அல்ல, தாங்கள் இப்பொழுது வண்டிக்காரனைப் போகச் சொன்னீர்களே ஏன்? அப்படிப் போலதான் தவிர நான் இளைத்துப்போனதினால் என்புருஷருக்கு அயோக்கியதைப்பட்டம் உண்டாகுமா? நன்றாகசாப்பிட்டால் உடம்புபெருக்கிறது? ஆகாரம்குறைந்தால் இளைக்கிறது அங்கபாரத்தைப் பார்த்து கௌரவம் அகௌரவம் கண்டு பிடிப்பது புத்திமான்கள் யோசனை அல்ல.

சௌந்தரராஜபிள்ளை, உன் புருஷன்வந்தால் அவனை நீ லக்ஷியமே பண்ணவேண்டாம் ! சுத்தநாடுமாறிபோல் நீ சொல்வதால் தெரிகிறது என, சுவர்ணம் அப்படி தாங்கள் சொல்லலாகாது. காலவித்தியாசத்தால் அவருக்கு அந்த மாதிரி யோசனை வந்து போனாரே தவிர சுபாவத்தில் அவர் மகாபுத்திமான், நன்றாகப்படித்தவர், ஒரு அக்ஷரமாவது பொய்சொல்ல அவருக்கு நா எழாது, என்னிடத்தில் உண்டான பிரீதியால் நான் கஷ்டப்படுவதைப் பாராமல் சென்றாரேஒழிய வேறில்லை. அவரிடம் எனக்கு உண்டான அன்பு என் உயிர் போனாலும் என்னைவிட்டு பிரியுமா? ஏன் அப்படி சொல்லுகிறீர்கள் என்றாள்.

சௌந்தரராஜபிள்ளை — நீ சொல்வதுசரிதான் உன்னை அனாதியாய் விட்டுப்போனானே அதுமாத்திரம் சரியோ ? உன்னை வேறு அவருடைய பந்துக்கள்வீட்டில் விட்டுவிட்டு அப்புறம் எங்கேயாவது அவன் தொலைகிறதுதானே ?

சுவர்ணம் — மகாராஜராய், மகப்பிரபு என வாழ்ந்த என் நாதன் நான் சளைத்தும்போய்விட்டேன் ! எனது பத்

கினி இவள்! நான் தேசாந்தரம்போய் பணம் சம்பாதித்து வருகிற வரையில உங்களிடம் இருக்கட்டும் என்று அவருடைய கௌரவமான வாயால் சொல்லுவாரா? அல்லது நான்தான் போவேனு? நன்ருகச் சொன்னீர்கள் என,

சௌந்தரராஜபிள்ளை — இப்படிப்பட்ட பீடை பிடித்த புருஷனைபற்றி ரொம்ப பரிந்துபேசுகிறுயே? உன்னிடம் சொல்லாமல் புறப்பட்டு ஓடி வந்துவிட்ட நான் இந்த ஊரில் இருக்கிறேன் என்று உன்சிலவுக்குப் பணம அனுப்பினுனு? அல்லது காகிதம்தான் எழுதினுனு? என,

சுவர்ணம் — ஐயா! அவர் என்னைப்போல் எப்படி எங்கே கஷ்டப்படுகிறுரோ? என்சிலவுக்குப் பணம்அனுப்ப முடியாமல் இருக்கலாம். வெறும்கடிதாசு மட்டும எழுதினுல் அந்த இடம் விசாரித்துக்கொண்டு நான் வந்துவிடுவேன் அப்பொழுது முன்போலவே கஷ்டப்படவேண்டியதாய் இருக்கும் என்று எழுதாமல் இருப்பாரே ஒழிய வேண்டாம் என்ற எண்ணம் அவருக்கு ஒருநாளும் உண்டாகாது என்றுள்.

சௌந்தரராஜபிள்ளை — பணம் அனுப்பினுல் சுவஸ்தமாய்சாப்பிட்டுவிட்டு இருப்பாயோ? அப்பொழுது புருஷனை விசாரிக்கமாட்டாய் போல் காணகிறது. எல்லாம் பணம இருந்தால்தான், புருஷன், பெண்டாட்டி. தெரியாமலா 'இல்லானை, இல்லாளும் வேண்டாள் ஈன்றெடுத்த தாய்வேண்டாள்' என்று ஔவை சொன்னுள்.

சுவர்ணம்பாள — என்ன, தாங்கள மெத்தாந்தவாகளாய் காண்கிறது. தெரியாத பச்சைக்குழந்தையைப்போல் பேசுகிறீர்கள், வெறும் காகிதம் எழுதினுல் நான் வந்துவிடுவேன் என்று நினைத்த என்புருஷர் பணம்அனுப்பினுல், நான் அதை சிலவுபண்ணிக்கொண்டு போகமாட்டேனு, பணம் அனுப்பக் கூடிய நிலைமையில் இருக்கிற அவர் என்னை ரக்ஷிக்கமாட்டாரா எல்லாம் கஷ்டப்படும் நிலைமையை அனுசரித்து சொன்னேனேயொழிய மற்ற விவகாரத்தைப்பற்றி அல்ல.

சௌந்தரராஜபிள்ளை — புருஷன் விஷயமாய் அணுவளவாவது இடங்கொடாது பேசுகிறாயே அவர் இந்தக்ஷணம் உன்னைக் கண்டுவிட்டால் உனக்கு எப்படி இருக்கும்.

சுவர்ணம் — கண்டாலா? நான் காணவா போகிறேன் தெய்வம் என்கண்ணில் அவரைக் காட்டவாபோகிறது அப்படிப்பட்ட பாக்கியத்தை நான் அடையவில்லையே கண்டால் — என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு எனக்கு அந்தப் பேச்சை எடுத்ததும் ஒன்றும் பதில் சொல்ல முடியவில்லை அதை விட்டுவிடுங்கள்.

அண்ணுப்பிள்ளைக்கு சுவர்ணம்பாள் தன் வரலாறு சொல்லிக்கொண்டு வரும்பொழுதே சௌந்தரராஜபிள்ளை கையால் அழுத்தின ஜாடையால் பேசாமல் கேட்டுக்கொண்டே இருந்துவிட்டார். இவர்கள் பேசிக்கொண்டிருந்த விஷயங்களைப் பார்த்து சௌந்திரம் கபடமாகப் பேசுகிறான், சுவர்ணம்பாள் நிஷ்கபடியாய் பேசுகிறாள் இனி நான் வெறுமையே இருக்கலாகாது, சங்கதிகளை வெளிப்படுத்தவேண்டியதுதான் என்று எண்ணினார். குதிரை ஒரே ஓட்டமாய் வந்ததால் ரொம்ப களைத்துப்போய் ஓடமுடியாமல் தடுமாறிற்று. சாலையோரமாய் ஒரு குளத்தையும் இவர்கள் கண்டதால் அதில் குதிரைக்கு தண்ணீர் காட்டிவிட்டு அப்புறம் வண்டியில் கட்டுவோம் என்று குதிரையை சௌந்தரராஜபிள்ளை அவிழ்த்து குளத்திற்கு ஓட்டிப்போய் தண்ணீர்காட்டி கால் கைகள் அலம்பிக்கொண்டு வந்தார், அப்படியே அண்ணுப்பிள்ளையும் கால்கை அலம்பிக்கொண்டு சௌந்தரம் உனது பத்தினியைப் பார்த்தாயா அவளுடைய குணங்கள் என்ன மேன்மையாய் இருக்கிறது, உன்னுடைய துரதிர்ஷ்டத்தால் இத்தனைநாள் நீ அவளை விட்டு நீங்கி இருந்தாய் நல்ல வேளையாய் நம்கண்ணில் தென்பட்டாளே, எல்லாம் கடவுள்செயல் உன் முகத்தை இதுவரையில் அவள் பார்க்கவில்லை, பார்த்தி

ருந்தால் மிகுந்த சந்தோஷத்தோடு இருப்பாள். அவள் துக்கமெல்லாம் பறந்துபோய்விடும். இப்பொழுதோ சூரிய உதயமாக இரண்டுநாழிகைகூட இராதுபோல் இருக்கிறது. நாம் யோசித்தபடி சுவற்ணம்பாளை உன் மைத்துனர் வீட்டுக்கு அழைத்துப்போனால் அங்கே உன் தங்கை முதலானவர்கள் உங்களைப்பார்த்து வெகுநாளானதால் கொஞ்சத்தில் விடமாட்டார்கள் இந்த நிலைமையில் போவதும் தப்பு. இவ்விடமிருந்து சிவந்தனூர் 4 மைல்தான் இருக்கிறது. இப்படியே வண்டியைகட்டிக்கொண்டுபோய் சுவற்ணம்பாள் வந்த காரியத்தை முடித்துக்கொண்டு உடனே புறப்பட்டுவிட்டால் எல்லோருமாய் சிங்கபுரம்போய் அப்புறம் பார்த்துக் கொள்வோம் என்றார்.

சௌந்தரராஜபிள்ளை தன் தங்கையையும் அவள் புருஷனையும் பார்த்து வெகு நாளாச்சுதே பார்க்கவேணுமென்று ஆவல் எனக்கு ரொம்ப இருக்கிறது என்றார். அதற்கு அண்ணுப்பிள்ளை அவர்கள் க்ஷேமமாய் இருக்கிறார்கள் என்றசமாசாரம் எனக்கு மூன்றுநாள் முந்தி வரையில் தெரியும், தவிர நமது சுவற்ணம்பாளை ஆபரணாதிகள் ஒன்றுமில்லாமல், இப்படிப்பட்ட நிலைமையில் அழைத்துப்போவது எனக்கு வெட்கமாய் இருக்கிறது என்றார். சௌந்தரராஜபிள்ளை ஆனால் சரிதான் என்று ஒத்துக்கொண்டார். வண்டியிலிருந்த சுவற்ணம்பாள் கீழே இறங்கி குளத்திற்கு வந்து கால்கை சுத்தி செய்துக்கொண்டு நம விஷயத்தில் இந்த பிரபுக்களுடையதயவு பூரணமாய் இருக்கிறது, இவர்கள் என்னை அந்த ஊரில் விட்டுப் போய்விட்டால் அப்புறம் நான் என்ன செய்கிறது, அந்த ஊரிலேகூட எனக்கு நாத்தி ஒருவள் இருக்கிறதாக என் ஞாபகத்தில் வருகிறது. ஒருசமயம் அவர்கள் யாராவது இருந்து என் கண்ணில் தென்பட்டால் நான் என்ன செய்வேன், ஒருவேளை அவர்கள் தன் வீட்டிலேயே நிறுத்தி

விட்டாலும் விடுவார்கள், இவ்வளவு பிரயாசைபட்டு வந்து என் தோழிக்கு உபகாரம் பண்ணமுடியாமல் போய்விடுமே என்று யோசித்துக் கொண்டிருந்தாள். அந்தசமயம் சூரியன் உதயகாலமானதால் ஜாஸ்தியான வெளிச்சம் உண்டாயிற்று. அந்தபிரபுக்களும் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது பக்கத்திலிருக்கிற பிரபுக்களின் ரூபங்களை செம்மையாகப் பார்த்தாள். இதோ உயர்ந்த சட்டை போட்டுக்கொண்டு நல்லலக்ஷணமுடையவராய் இருக்கிறாரே இவர் நமது புருஷன் மாதிரி காண்கிறது! ஒருக்கால் அப்படியே இருக்கலாமோ! ஆமாம் உயரமானவர்களையும் லக்ஷணமுடையவர்களையும் நான் பார்க்கும்பொழுதெல்லாம் இந்த பாழும் யோசனைதான், அவரும் இப்படியே என்கண்ணில் அகப்பட்டுவிடுவாரா? வீண்யோசனைதான் என்று நினைத்துக்கொண்டிருக்கையில், சௌந்தரராஜப்பிள்ளை எனது சுவர்ணமே! நாம் எல்லோரும் சிங்கபுரமேபோவோம். அங்கே உனது தோழியின் காரியத்தைப் பார்த்துக்கொள்ளலாம், என்றதும் சுவர்ணம்பாள் இவர்சொல்லுகிறவார்த்தைகளின் கம்பீரத்தையும், முகத்தையும் பார்க்கையில் எனது புருஷன்தான்! நிச்சயமாயும் சொல்லமுடியவில்லை! பேச்சுக்குரலாலும் கண்டுபிடிக்கக்கூட இல்லை. ராத்திரிமுழுவதும் அவர் பிரஸ்தாபத்தையே பேசிக்கொண்டிருந்ததால் என் கண்ணுக்கு அந்தமாதிரிபடுகிறதோ! ஒன்றும் தெரியவில்லையே என்று கண்ணைத் துடைத்துக்கொண்டு மறுபடியும் செம்மையாய் கவனித்துப்பார்த்தாள். சௌந்தரராஜபிள்ளை என்னயோசிக்கிறாய் புறப்படலாமே வண்டியைகட்டி விடட்டுமா? எனவே, சுவர்ணம்பாள் நிச்சயமாகவே இவர் நமது புருஷன்தான், முந்தியே இந்தப்பிரபு இப்போது உன்புருஷனைப்பார்த்தால் உனக்கு எப்படிஇருக்கும் என்று கூடகேட்டாரே! நல்லது ஜலத்தைவிட்டு கண்களைத்துடைத்துக்கொண்டாவது பார்க்கிறேன். என்புருஷரா

கவே இருக்கக்கூடாதா? என்ற எண்ணத்தோடு சீக்கிரமாய் குளத்தில் இறங்கி கண்ணை ஜலத்தைவிட்டு அலம்பிக்கொண்டு வந்தாள். இவள் வந்ததும் அந்தஜாடை சௌந்தரராஜபிள்ளைக்குத்தெரிந்ததால் இன்னமும் யோசனையேன்! என்றார், இவர் நிச்சயமாகவே என நாதன் தான். என் பிரபுவே! என் கண்ணாளா! என்னைக்காப்பாற்றும் தெய்வமே! முன்னமேயே தங்களின் நல்வரவை எனக்குத்தெரியப்படுத்தலாகாதா? அன்னியர்கள் போலவா தாங்கள் என்னிடம் பேசவேண்டும் என்று சொல்லி இறுகக் கட்டிக்கொண்டு அப்படியே இருந்தாள். சௌந்தரராஜபிள்ளை தன்மனம் கலங்கினவராய் என் கண்மணி! உன்னுடைய பதிவிரதாதர்மம் மிகமேன்மையானது உன் நல்ல எண்ணத்தைக்கேற்ற புருஷனை நான் இல்லாததைப்பற்றி துக்கிக்கிறேன்! தனியே உன்னைவிட்டுப் பிரிந்ததுமுதல் உன்ஞாபகமே ஓயாது உண்டாகும், ஆனால் உன்னை அடையமுடியாத நிலைமையில் இருந்தேன். இனி உனக்கு ஒரு குறையும் நான் வைய்யேன்' உன்நிலைமை எப்படி இருக்கிறதோ என்றதை அறியட்டும் தப்பான வார்த்தைகளாடினேன், கண்மணி! உன்னுடைய விஷயங்களெல்லாம் நீ சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்தபொழுது என் மனதுக்கு அதிக வருத்தம் உண்டாகி இருந்தது. உன்னைக் கண்டேன் என்ற சந்தோஷம் அதிகமாகிவிட்டது, ஆனால் நீ இப்படிப்பட்ட கஷ்டதிசையிலிருக்கக் கண்டேனே அந்த துக்கந்தான் எனக்கு பொறுக்க முடியாமல் இருக்கிறது என்று துக்கித்தார்.

சுவர்ணம்—நாதா தாங்கள் என் துக்கப்படவேண்டும்? தாங்கள் என்னுடன் இல்லாதிருந்த குறையேத்தவிர மற்றும் நான் சௌக்கியமாகவே இருந்து விட்டேன். வீட்டை விட்டு வெளியில் தனியாக ஒரு நிமிஷங்கூட போனவளல்ல,

இப்போது ஒரு காரணத்தால் தனியே வரும்படி நேர்ந்தது, சில சங்கடங்களும் நேர்ந்தது. என்னை அன்னியர்களுக்கு காட்டிக்கொடுக்கக்கூடாது என்ற மனப்பூர்வமான எண்ணம் தங்களுக்கு இருந்ததால், சமயத்தில்வந்து உதவினீர்கள் என்றாள். அண்ணாப்பிள்ளையும் அம்மா நீ மகாபாக்கியவதியானதால் சமயத்தில் உன் புருஷன் உன்னிடம் சேர்ந்தார் என்றார். ஐயா எல்லாம் தங்கள் தயவு இருந்ததால்தான் என் பதியை அடைந்தேன் என்றாள்.

பிறகு அண்ணாப்பிள்ளை இப்பொழுது சூரிய உதயமாகி இரண்டுநாழிகை ஆகிவிட்டது, நாம் சாப்பாட்டுக்கு சிங்கபுரத்திற்கே போகவேண்டும், சிவந்தனூருக்கும் போகவேண்டியதாய் இருப்பதால் ரொம்ப தேசகாலமாகிவிடும். என் புருஷன் மைத்துனர் ஊருக்குப் போகிறதாக உத்தேசமில்லையோ? என, உன்னை அவ்விடம் அழைத்துப்போவது சரியல்ல என்று முன்னமேயே தீர்மானித்துவிட்டோம். நானும் அப்படியேதான் நினைத்தேன் என்றாள். அண்ணாப்பிள்ளை வண்டியோட்டும் உத்தியோகத்தில் நான் அமரவேண்டியது தான் என்றார். சௌந்தரராஜபிள்ளை அத்தான் நீங்கள் வேண்டாம் எப்பொழுதும்போல நான் ஓட்டி வருகிறேன் என்றார்.

அண்ணாப்பிள்ளை — அப்படியா ! வெகுநாளாகப் பிரிந்திருந்து இன்று உன் நாயகியைக் கண்டாய் நீங்கள் இருவரும் சந்தோஷமாய் பேசிக்கொண்டு வாருங்கள். நான் வண்டியோட்டுகிறேன், உன்னைவிட எனக்கு அதில் ஜாஸ்தி பழக்கம் உண்டு, என்று வண்டியைக்கட்டி முன்னால் ஏறி உட்கார்ந்தார். இவர்கள் இருவரும் வண்டிக்குள் உட்கார்ந்தார்கள். அண்ணாப்பிள்ளை அதிகவேகமாக வண்டியை ஓட்டினார்.

சௌந்தரராஜபிள்ளை — சுவர்ணாம்பாள் நான் உன்னோடு இவ்வளவு சந்தோஷமாய் வண்டியில் உட்கார்ந்து வரப்போ

கிறேன் என்ற எண்ணம் என் சுவப்பனத்திலும் இல்லையடி என, நானும் சுவப்பனத்தில் கூட நினைக்கவில்லை என்றாள்.

சௌந்தரராஜபிள்ளை — நான் பிரிந்துபோய் இத்தனை நாள் இருந்ததால் இனி என்னைக் காணமுடியாது என்று தானே நினைத்திருப்பாய்!

சுவர்ணம் — காணமாட்டேன் என்ற எண்ணம் இல்லை. இன்னும் கொஞ்சம்நாள் பார்த்திருந்து பிறகு தங்களை ஊர் ஊராய்த் தேடிக் கண்டு பிடித்துவிடுவேன்.

சௌந்தரராஜபிள்ளை — காணுவிட்டால்?

சுவர்ணம் — செம்மையாக விசாரித்து காணமுடியாது என்று எனக்கு நிச்சயமாய்த் தெரிந்துவிட்டால் பிறகு ஊர் திரும்பமாட்டேன், அப்படியே பிராணனை விட்டுவிடுவேன்.

சௌந்தரராஜபிள்ளை—பிராணனைவிடுவாயா! இனி என் காதில் படும்படி அப்படிப்பட்ட வார்த்தையை சொல்லாதே.

சுவர்ணம் — தாங்கள் இத்தனை நாளாய் என் ஞாபகமே இல்லாமல் எவ்விடம் இருந்தீர்கள். அதை எனக்குச் சொல்ல வேண்டாமா?

சௌந்தரராஜபிள்ளை — அது விஷயம் உன்னிடம் சாவகாசமாய்ச் சொல்லுகிறேன், இப்பொழுது நாம் செய்ய வேண்டியது என்ன?

அண்ணுப்பிள்ளை — இதோ தெரிகிற இந்த தோப்புத் தான் சிவந்தனூர் என்றார்.

சுவர்ணம் — சிவந்தனூர் வந்துவிட்டோமா? வெகு வேகமாய் குதிரையை ஓட்டி இருக்கிறீர்கள்.

அண்ணுப்பிள்ளை — குதிரை சாதாரணமான ஓட்டம் தான் ஓடிவந்தது. நீங்கள் சந்தோஷமாய் பேசிக்கொண்டு வந்ததால் காலம்போனது தெரியவில்லை.

சுவர்ணாம்பாள் — தன் புருஷனைப் பார்த்து இந்த ஊரில் ஒரு பெரிய மிட்டாதார் இருக்கிறார். அவர் பெயர் வேதாந்தம்பிள்ளை. அவருடைய மூத்தகுமாரன் சுப்பிரமணியபிள்ளையை தனியே யாரையாவது விட்டு கூப்பிட்டுக் கொண்டு வரச்சொல்லி அவரிடம் இந்த காகிதத்தைக் கொடுத்து பதில் வாங்கிக்கொண்டு ஊருக்குத் திரும்ப வேண்டியது என்றாள்.

பிறகு எல்லோருமாய் சிவந்தனூர் கிராமத்திற்கு போய்ச்சேர்ந்தார்கள். வேதாந்தம்பிள்ளை வீட்டை விசாரித்து அவர் வீட்டைத் தெரிந்துகொண்டார்கள். வண்டியை ஒரு பிராமணர் வீட்டுவாசலில் அவிழ்த்துவிட்டுவிட்டு, அங்கே நின்ற ஒரு குடியானவனை சௌந்தரராஜ பிள்ளை கூப்பிட்டு அப்பா வேதாந்தம் பிள்ளைவாள் வீட்டுக்குப் போய் அவருடைய மகன் சுப்பிரமணியபிள்ளையை அழைத்துவந்தால் உனக்கு ஒரு அணா கொடுக்கிறேன்; நீ அவரிடம் போனதும், பக்ஷிராஜபுரமிருந்து யாரோ சிலர் தங்கள் காரியமாய் வந்திருக்கிறார்கள் உடனே வரச்சொன்னார்கள் என்று நீ சொன்னவுடன் அவர் புறப்பட்டு வந்துவிடுவார் என்றார்.

குடியானவன் — நல்லா இருக்குச் சேதி பெரியபண்ணைக்குப்போய் சின்ன எஜமாங்களைக் கூப்பிட முடியுமா! கூப்பிட்டால்தான் வருவாங்களா? என்றால் முடியாது போய்வாரேன் ஐயா, என்றான்.

சௌந்தரராஜபிள்ளை — அடே குடியானவா! இங்கேவா, நீ பயப்படவேண்டாம். காகிதம் ஒன்று கொடுக்கிறேன் அதைக்கொண்டுபோய் கொடுக்கிறாயா? என குடியானவன் அந்தப்படி செய்கிறேன், எனக்கு இரண்டு அணா கூலி கொடுக்கவேணுமென்றான். சரி, அப்படியே தருகிறேன் என்று சட்டைப்பையில் இருந்த ஒரு துண்டு காகிதத்தில்

சுப்பிரமணியபிள்ளை — அப்படியே உங்கள் ஆசீர்வாதம் இருந்தால் தடையென்ன.

கவற்றாப்பாள் — தங்கள் வீட்டில் தகப்பனார் இளைய தாயார் எல்லோரும் சௌக்கியந்தானே?

சௌந்தரராஜபிள்ளை — ஆம சௌக்கியந்தான் நீங்களும் கொஞ்சம ஆகாரம் பண்ணலாமே என, கவற்றாம்பாள் சரி இப்படியே சொல்லேப்பக்கம் போகலாமோ என, சுப்பிரமணிய பிள்ளை போகலாம் கூட இந்த வீட்டு அம்மாளை வரச் சொல்லுகிறேன்என்று, யார் அம்மா வீட்டில்? என்று கூப்பிட்டார், யார் கேட்கிறது? என்று வீட்டுக்கார அம்மாள், வாசல் படிக்கு வந்து சுப்பிரமணிய பிள்ளையைப் பார்த்துவிட்டு பயந்துகொண்டு உள்ளேபோய் தன புருஷனிடத்தில் சின்னபிள்ளை வந்து திண்ணையில் உட்கார்ந்திருக்கிறார்கள்! யாரோ வழிப்போக்கு திண்ணையில் உட்கார்ந்திருக்கிறார்கள், அவர்கள்தான் பேசிக்கொண்டிருக்கிறார்களாக்கும் என்றல்லவோ நினைத்துக்கொண்டிருந்தேன்! உங்களுக்கு இப்போதும் வெறுமனே உட்கார்ந்து கொண்டு எழவெடுக்கிறதுதான் வேலை, சட்டனு போங்கள் என்று சொன்னதும் கிழபிராமணன் வெளியே வரும்பொழுதே தலைகீழ குனிந்து ஆசீர்வாதம் பிள்ளைவாள். என்ன இப்படி! அடடா என்றதும் சுப்பிரமணிய பிள்ளை நமஸ்காரம் அய்யா இங்கே வந்திருக்கிறவர்கள் நமக்கு ரொம்ப வேண்டுமென்கிறவர்கள், இவாளுக்கு வேண்டிய ஜாக்கிரதை செய்யச் சொல்லும், இப்பொழுது அவர்கள் காப்பி சாப்பிடப்போகிறார்கள், காப்பி வந்திருக்கிறது தாழ்வாரத்தில் உட்கார்ந்துகொண்டு அவர்கள் சாப்பிடட்டுமா? என்றார். பிராமணன் தடையென்ன! எல்லாம் தங்கள் கிரகம் தானே, எங்கே வேணுமானாலும் அங்கே உட்கார்ந்து சாப்பிடட்டும். சுப்பிரமணியபிள்ளை நல்லது போம் என்றார்.

சுவர்ணம்பாள் வீட்டின் கொல்லையில் போய் கால்கை அலம்பிவரப்போனாள். அண்ணாப்பிள்ளை சௌந்தரராஜ பிள்ளை பரிசாரகனோடு கோட்டத்திற்குப் போனார்கள். சுப்பிரமணிய பிள்ளையும் சாறு திண்ணையில் உட்கார்ந்திருந்து விட்டு கோட்டம்பக்கமாய் உலாவிக்கொண்டிருந்தார். வீட்டிற்குள் போன கிழப்பிராமணன் அடியே! சீக்கிரம்ஓடிவா! காழ்வாரத்தை சீக்கிரம் பெருக்கித்தள்ளு, அவாள் வந்துவிடுவாள், காப்பி சாப்பிடப்போகிறார்களாம் என்றார். அப்படியா! நம்ம வீட்டுக்கு என்னதெசை எல்லாரும் பணக்காரர்களாயிருக்கு! என்று பெருக்கச் சொன்னயளா வெள்ளவெளுக்கு இருக்கு உங்களுக்கு தெரிந்தபுதசி அவ்வளவுதான் என்று மெழுக சாணம்எடுக்கப்போனாள். அதற்குள் எல்லோரும் வந்துவிட்டார்கள். கிழவர் இந்த முன்னை அப்படியே துலைந்துபோகட்டும் என்று வாருகோலை எடுத்து வந்து தானே பெருக்கித்தள்ளினார். எல்லோருமாய் உட்கார்ந்துகொண்டு உப்புமாவும காப்பியும சாப்பிட்டார்கள். சுவர்ணம்பாளும் சாப்பிட்டாள். கிழவர் திண்ணையில் ஒரு பாயைக்கொண்டுபோட அதில் உட்கார்ந்தார்கள். சுவர்ணம் ரேழியில் நின்றாள். சுப்பிரமணியபிள்ளை அக்காள் பக்ஷிராஜபுரத்தில் வேறு ஏதாவது விசேஷமுண்டோ? தங்களை அக்காள் என்று கூப்பிட்டு சுமார் 4-வருஷம இருக்கலாம், என்னுடைய அன்பான சகோதரி நீங்களே, சாரதாம்பாள் கோபாலபிள்ளை எல்லோருமே சௌக்கியமா?

சுவர்ணம்பாளின் புருஷன்தான் சௌந்தரராஜபிள்ளை என்று சற்றுநேரம் அவாளுடன் பழகினதைக்கொண்டு சுப்பிரமணியபிள்ளைக்குத தெரிந்துவிட்டதால், பிள்ளைவாள் எப்பொழுது வந்தார்கள்? அந்தக்குறையே உங்களுக்கு பெரிய குறையாய் இருந்தது. அனுகூலமான உங்கள் இருவரையும் பார்க்க ரொம்ப சந்தோஷமாச்சுது? இவாள் யார் எனக்கு

ஞாபகப்படவில்லையே? என்று அண்ணாப்பிள்ளையைக்குறித்துக் கேட்க, சௌந்தரராஜபிள்ளை எனக்கு அத்தான் முறையாகவேணும். வண்டியோடு துணையாக அழைத்து வந்தோம் என்றார். உடனே சுவர்ணாம்பாள் தன் மடியில் வைத்து இறுக கட்டிக்கொண்டிருந்த காகிதத்தை மெதுவாய் எடுத்து தன் புருஷனிடம் கொடுக்க, அவர் சுப்பிரமணியபிள்ளையிடம் கொடுத்தார், அதின் மேல்விலாசத்தைப் பார்த்துவிட்டு சாரதாம்பாள் கையெழுத்தாய் இருந்ததால் வீட்டிற்குப் போய் சாவகாசமாய்ப் பார்க்கவேணுமென்ற எண்ணத்தோடு அப்படியே கையில் மடக்கிக்கொண்டார்.

சௌந்தரராஜபிள்ளை — கடிதாசைப் பிரித்துப்பார்க்க இல்லைபோல இருக்கிறதே? அதைப் பிரித்துப் பார்த்துவிட்டு பதில் சமாசாரம் எங்களுக்குக் கொடுத்தால் நாங்கள் ஊர் போய்விடுவோம் ரொம்பவேலை இருக்கிறது என்று சொல்ல, சுப்பிரமணியபிள்ளை நன்றாய் இருக்கிறது இப்பொழுது ஊருக்கா, நல்லவார்த்தை சொன்னீர்கள், அய்யர் வீட்டிலேயே சீக்கிரம் சமைக்கும்படி சொல்கிறேன், சாப்பிட்டுவிட்டு நமமுடைய வீடு, தோட்டம், பங்களா எல்லாவற்றையும் பார்த்துவிட்டு நாளைக்கு புறப்பட்டுவிடுகிறது என்றார்.

வீட்டு கிழப்பிராமணனைக் கூப்பிட்டு, வீட்டிற்போய் சாமான்களை அனுப்புகிறேன், அம்மாளிடம் நான் சொன்னதாக சீக்கிரம்சமையல் பண்ணச்சொல்லும், என்று சொல்லிவிட்டு கிளம்பினார்.

அண்ணாப்பிள்ளை அப்படிச் சொல்லக்கூடாது, நாங்கள் போகததான்வேணும் தாங்கள் தயவுசெய்யவேண்டியது என, சுப்பிரமணியபிள்ளை கூடாது. நான் வீட்டுக்குப் போய் படுக்கை அனுப்புகிறேன், நன்றாய் படுத்து தூங்குங்கள். அக்காள் தாங்களும் ரேழியில் படுத்துக்கொள்ளுங்

கள், நான் போய் வருகிறேன் என்று சொல்லிவிட்டு கிளம்பி விட்டார். சுப்பிரமணியபிள்ளை வீடுபோனதும், வேலைக் காரனை கூப்பிட்டு அக்கிரஹாரத்தில், குப்பய்யர் வீட்டுக்கு 10 பேர்களுக்கு அரிசி சாமான்கள் பண்ணையில்போய் வாங்கிக்கொண்டுவந்து கொடுத்துவிட்டு சீக்கிரம் வாவென்று உத்தரவு பண்ணினார். பங்களா சேவகனிடம் இவர்களுக்கு படுக்கையை அனுப்பிவிட்டு, நாற்காலியில் உட்கார்ந்தார்.

சாமான்களும் படுக்கையும் சீக்கிரமாய் குப்பய்யர் வீட்டுக்கு கொண்டுபோனார்கள். அண்ணாப்பிள்ளை சௌந்தரராஜபிள்ளை ராத்திரி முழுவதும் கண்விழித்து வந்ததால் திண்ணையில் படுக்கையைப் போட்டுக்கொண்டு தூங்கிவிட்டார்கள். சுவற்றும்பாளும் ரேழியில் படுத்துக்கொண்டாள். சாமான்கள் கொண்டுவந்த வேலைக்காரர்கள், குப்பய்யரிடம் சாமான்களைக் கொடுத்து சீக்கிரமாய் சமையல் செய்யச்சொல்லி உத்தரவு ஆச்சுது என்று சொல்லி போய் விட்டார்கள்.

உடனே குப்பய்யர் அடியே சுருக்காவா, சாமான்கள் வந்திருக்கிறது, ஜல்தியாய் சமையல் செய்யவேணும் நாழியாய்விட்டால் அவாள் கோபித்துக்கொள்வார்.

அம்மாள் — அடியே என்று கூப்பிட்டதும், அடியே யாவது நாணியேயாவது, என்னத்துக்கு கூப்பிடறயள் பேசாமல் விழுந்துகிடக்கிறதுதானே.

கிழவர் — சாமான்கள் வந்திருக்குதடி?

அம்மாள் — வந்தால் உன் தலையில் கொட்டிக்கொள், உமக்கு வேலையென்ன தினம் பொழுதுவிடிந்தால் உம்ம எழவே எழவு.

கிழவர் — ஆனால் நீ இன்று சமைக்கமாட்டாயோ?

அம்மாள் — குழந்தை அழுகிறது வீடுபெருக்கி ஆகலே அடுப்புச் சாம்பல் வாரவில்லை அப்படி அவசரப்பட்டால் கோவணத்தைக் கட்டிக்கொண்டு நீரே பொங்கும்.

கிழவர் — நான் தாண்டி பொங்கணும் இதுக்குத்தான் உன்னை ஏறுணவது இளையாளாய் கட்டித்தொலைச்சேன்.

அம்மாள் — என்னைக் கலியாணம் பண்ணினதால்தான் உமக்கு பிண்டம், பொங்கிக்கொட்டுகிறேன்.

கிழவர் — உன்னெழவுக்கு ஆயிரம் ரூபாய் கொட்டினேனே நீ சொல்லமாட்டாயா?

அம்மாள் — ஆயிரம் ரூபாய் கொடுக்காவிட்டால் உமக்கு கலியாணம் கட்டையிலே தான்.

கிழவர் — இந்தக் குழந்தைக்காகப் பார்க்கிறேன், இல்லாவிட்டால் உன்னை இப்படியே துரத்திவிடுவேன்.

அம்மாள் — நான் இல்லாவிட்டால் நீர் சந்தி சிரிக்கிறது தெரியும், உமக்கு உபசாரம்பண்ண அடுத்தாத்து கிட்டு பஞ்சு எல்லாரும் வரமாட்டாளோ?

கிழவர் — அடிலண்டி? உன்னோடு பேச முடியவில்லை, யாராவது தகுந்த மனுஷியாள் வந்தபோதுதானோ உன்னுடைய சுபாவத்தைக் காட்டணும்.

அம்மாள் — பழிகார எங்க அம்மாவும் அப்பாவும் என்னை ஆன இடம் தேடி அமரப்புதைக்காதே கட்டாந்தரையில் கல்லிப்புதைத்தாளே, ஐயோ! கிழவன் லண்டி என்கிறான், எது வேணுமோ அது சொல்லுவன்.

கிழவன் — அடியே? அவன் இவன் என்று பேச ஆரம்பித்துவிட்டாய் சாமானை எடுத்துக்கொண்டுபோ, சீக்கிரம் சமையல் பண்ணு என்றதற்கு இவ்வளவு கூக்குரலா! திண்ணையில் தூங்குகிறவர்கள் எழுந்து வந்துவிடுவார்கள் போலிருக்கே!

அம்மாள் — குழந்தைக்கு எண்ணை போட்டு இருக்கிறேன், பார்த்துக்கொள்ளும் இனி உமது ஜோலிக்கு வரவில்லை, குழந்தையை கொன்றுவிட்டாலும் கொல்லும், நான் வாசலில் போகிறேன்.

கிழவர் — உன் தோரணையை எடுத்துக் கொள்ளாதே, வேண்டாம்! உன் காலை வேணுமானாலும் பிடித்துக்கொள்கிறேன்.

அம்மாள் — அப்பவே, இந்தமாதிரி சொல்லுகிறது தானே, அடியே என்பானேன், டீ என்பானேன் உமது வாயால் தானே நீர் கெட்டுப்போகிறீர்.

கிழவர் — நான் வாய் பேசுகிறதில்லை, இனி பாழும் தெய்வமே! என்னைக் கொண்டுபோகப்படாதா!

அம்மாள் — பாவியம்! 19 வயது! சாகிறத்துக்கு காலம் வல்லையோ! தொலையறதுதானே.

கிழவர் — எனக்கு சாகிறதற்கு காலம் வல்லையே! தூக்குப் போட்டுக்கொண்டாவது செத்துப்போகிறேன்.

அம்மாள் — என்ன கிடக்கிறது கிடக்கிறது என்று பேசாமல் இருந்தால் என் வாயைப்பிடுங்கி வயத்தெரிச்சல் கொட்டிக்கொள்ளணுமோ! வெறுமனே சாறேன சாறேன என்று பயமுறுத்தினையளே, ஆம்படையான், செத்தவாளை யெல்லாம் எங்கே தள்ளிவிட்டா, கால்சேர், நல்லெண்ணை மீந்தது.

கிழவர் — அம்மா நான் வாய் திறக்கலையடி! போட்டுக்கொள்ளட்டுமா வாயில், பளீர்! பளீர்! என்று.

அம்மாள் — பார்த்தாயா! கிழவன் கல்லுடிமங்கன் வேஷம் போடறதை! கதிகலங்க அடிக்காதேயும்? உமக்கு புண்ணியம் உண்டு, குழந்தை பயப்படுகிறது.

கிழவர் — நீ சமைத்தால் சமை, இல்லாமல் பேசாமல் இருந்தால் இரு, நான் படுத்துக்கொள்ளப்போறேன் உன்னோடு பேசினது என் தலையை வலிக்கிறது.

அம்மாள் — அதற்குள்ளே மணியப்போகாதியும் சுருக்காய் சமையல் பண்ணறேன், வாசலில்போய், கிட்டுவையும், பஞ்சுவையும் சாப்பிடச் சொல்லிவிட்டு வாரும்.

கிழவர் — அவர்கள்தான் ஒன்றுவிட்டு ஒரு நாளைக்கு இங்கே வந்து தின்கிறார்களே இன்றைக்கென்ன அவர்களுக்கு.

அம்மாள் — பருப்பும், பரமானமும் சமைச்சு குழந்தைகளுக்கு போடாவிட்டால் எனக்கு திருப்தி ஆகுமோ நன்றாய் சொன்னீர்! போய் எங்கிருந்தாலும் சொல்லி அழைத்துக்கொண்டுவந்து அப்புறம் உள்ளே நுழையும்.

கிழவர் — ஆகா! போறேன் என் தலையில் எழுத்து 60 வது வயதுக்குமேல்! 3 வயது இளையாளாய் 1500 ரூபா சிலவு செய்து கலியாணம் பண்ணி, எனக்கு உபசாரம்பண்ண யோக்கியதை இல்லை, தடிப்பயல் கிட்டுவும் பஞ்சுவும், குடுத்து வைத்திருக்கிறான்! என்று தானே சொல்லிக்கொண்டு அவர்கள் வேலை செய்துகொண்டிருக்கிற பாகக்கொல்லைக்கு வெய்யலில் தட்டுத் தடுமாறிக்கொண்டு போய் சாப்பிடச் சொன்னதும் அவர்கள் பின்னோடு வந்தார்கள், கிழவன் அவர்களை அழைத்துக்கொண்டே வீட்டிற்கு வந்தார். (இதைப் படிக்கும் பிரபுக்களே! வயதான பிறகு பணத்தின் பெருமையால் இரண்டாவது மூன்றாவது இளையாளைக் கலியாணம் பண்ணிக்கொள்பவர்களின் கதி இப்படித்தான் ஆகும். சில உத்தம ஸ்திரீகளும், இருக்கிறார்கள்; என்றாலும் பெரும்பாலும் சமுசயமே.) இவர்கள் வீடுவந்ததும் அம்மாளுக்கு சந்தோஷம் பிறந்தது. ஸ்நானத்திற்குப் போய்

சீக்கிரம் வந்தாள். இவள் வருவதற்குள், பஞ்சுவும், கிட்டு வும் கறிகாய்கள் நறுக்கிவைத்து தண்ணீர் முதலானது களும் கொண்டுவந்து கொட்டி அடுப்புமூட்டி தயார் செய்து கொண்டிருந்தார்கள்.

அம்மாள் — வந்ததும் சமைக்க எத்தனித்தாள். பஞ்சு வடைக்கு அரைத்தான், கிட்டு அரிசி முதலானது களைந்து, சுத்துக்காரியம் செய்தான். 12 மணிக்கெல்லாம் சமையல் ஆய்விட்டது. அம்மாள் பிராமணனைக் கூப்பிட்டு, அவாளை எழுப்பி ஸ்நாநம் பண்ணச்சொல்லும், சமையல் ஆய்விட் டது அவாள் சாப்பிட்டுவிட்டுப் போகிறவரையில் அடியே, நீ வேண்டாம் ... ஏன் நீ என்று கூப்பிடப்படாது, அப்படிக் கூப்பிட்டால் தெரியும் சேதி. ஆரம்பித்துவிடுவேன்.

கிழவர் — நான் அடியே என்றால் உனக்கு வெட்க மாய் இருக்கிறதோ! ஆனால் எனக்கு நீ பெண்டாட்டி அல் லவோ? என்றார்.

அம்மாள் — ஆம் வெட்கந்தான் எனக்கு முழுசாக 21 வயது நிறையலே. உமக்கு காழதைமாதிரி 69 ஆச்சு உம்மை ஆம்படையான் என்று நான் சொல்லிக்கொள்ளமாட்டேன்.

கிழவர் — ஆனால், கிட்டுவை, ஆம்படையான் என்று சொல்லிக்கோடி! என் வயறு எரியுது அடி!

அம்மாள் — உழக்க பிண்டம் பண்ணாதான் அவாளை எழுப்பிறயளோ? இல்லையோ? என்று சொல்ல, அதற்குள் பஞ்சு ஓடிவந்து அம்மா அம்மா, தாத்தாவை ஏன் சிரமப் படுத்துகிறீர்கள். உங்களுக்கு ஓயாது அவரை திட்டுவது தானா வேலை உள்ளே போங்கள். நான் போய் அவர்களை எழுப்பி ஸ்நாநம் பண்ணச் செய்கிறேன் என்றான். அம் மாள், குடித்தனத்தில் பஞ்சுவுக்கு இருக்கிற பொறுப்பில் 1000 ல் ஒன்று இந்த கிழகட்டாலே போறவனுக்கு இருக்

கோ! என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள். கிழவன் காம்பரா உள்ளுக்குப்போய், இவர்கள் போன பிறகு தான் நான் வெளிக்கு வரவேணும் இல்லாவிட்டால் அந்த முண்டை அவமானப் படுத்துவள் என்று மெத்தையைப் போட்டுக்கொண்டு சுவஸ்தமாய்ப் படுத்துக்கொண்டார்.

பஞ்சு, திண்ணையில் படுத்துக்கொண்டிருந்த இருவர்களையும் எழுப்பி சமையல் ஆய்விட்டது ஸ்நானம் பண்ணப் போகலாமே என்றான். சௌந்தரராஜபிள்ளை, சுவர்ணம் பாலைக் கூப்பிட்டு, எழுந்திரு ஸ்நானம் பண்ணுவோம் என்றதும், நான் விழித்துக்கொண்டு இரண்டு நாழிகை ஆய்விட்டது தாங்கள் அயர்ந்து தூங்கிக்கொண்டு இருக்கிறீர்களே என்று உள்ளே, அம்மாவும் ஐயாவும், விளையமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள், அதைக் கேட்டுக்கொண்டிருந்தேன் என்றாள். பிறகு எல்லோருமாய் அம்மாள் சமாசாரத்தைப்பற்றி சுவர்ணம்பாள் சொல்லைக் கேட்டுக் கொண்டே தோட்டத்தில்போய், ஸ்நானம் பண்ணினார்கள். பாப்பாத்தி அம்மாள் சமாசாரம் கேட்டு சிரித்தால் என்ன! எல்லோருக்கும் வயறு அறுந்துபோயிற்று. சௌந்தரராஜபிள்ளை - சுவர்ணம் நான் கிழவனாய் இருந்தால் நீயும் அப்படித் தானே சொல்லுவாய் என, சுவர்ணம் - நான் கிழவரிடம் வாழ சம்பவித்தால், வாய் திறக்காமல் அவருக்கு சிசுருஷை செய்வேனே ஒழிய இந்தப் பாடு படுத்த மாட்டேன். சௌந்தரராஜபிள்ளை இப்போது அப்படித் தான் சொல்வாய் அந்தமாதிரி, நானும் கிழவனானால் கிட்டு பஞ்சுவைப்போல் நீயும் பத்து பேர்களை சிநேகிதம் பண்ண வேண்டியதாய் இருக்கும். சுவர்ணம் இந்த வார்த்தையைக் கேட்டதும், சிவ சிவ! கோரமாய் தாங்களே சொன்னால், நான் என்ன சொல்வது என்று முகத்தை சுளித்துக் கொண்டாள். அண்ணுப்பிள்ளை நீ பரிகாசமாய் சொல்லுகிறாய், அது சுவர்ணம்பாளுக்குத் தெரியவில்லை, அவள் கோபித்துக்கொண்டுவிட்டாளே! இப்பொழுது நீ என்ன

இப்பொழுது நீ என்ன பண்ணுவாய் என, சௌந்தரராஜப்
பிள்ளை சுவற்ணம் கோபித்துக் கொண்டால் வீட்டிற்கு
போனதும்—சீக்கிரம் — அம்மாளை கூப்பிட்டு—அதற்குள்
சுவற்ணம் இந்த விஷயம் சொல்லிவிடுவீர்களோ? இல்லை
நான் சொல்வதைகேள், சாதம்கொண்டுவரச்சொல்லி நாங்
கள் இருவரும் சாப்பிட்டுப்போகிறோம்! என்றார் அண்ணாப்
பிள்ளை இதற்குத்தானா இவ்வளவு நீட்டல் பலே -பேர்வழி
யடா நீ எப்படியும் உனக்கு சுவற்ணத்தின் பேரில் பிரியம்
தான் என்று சொல்ல இருவரும் சிரித்தார்கள். சுவற்
ணமும் சிரித்துவிட்டாள். எல்லோரும் வஸ்திரங்களை காய
வைக்க எத்தனித்தார்கள், அதற்குள் சுப்பிரமணிய பிள்ளை
இவர்கள் இருவருக்கும் கட்டிக்கொள்ள துப்பட்டாவும்,
சுவற்ணத்திற்கு உயர்ந்த புடவையும் அனுப்பினார்; இதுகள்
கொண்டு வந்த சேவகனை அண்ணாப்பிள்ளை எங்களுக்கு இது
கள் வேண்டாமே என, சேவகன், வேறு வஸ்திரங்கள் அன்றி
யில் கட்டிக்கொண்ட உடைகளோடு வந்திருப்பதாய் எங்கள்
சின்ன எஜமானனுக்கு தெரிந்ததாம், ஸ்நானம் பண்ணினால்
என்ன செய்வார்களோ தெரியவில்லை இதை சீக்கிரம்கொண்டு
போய்கொடுத்துவிட்டுவா என்று என்னை அனுப்பினார் எடுத்
துக்கொள்ளுங்கள். சாப்பிட்டதும் சின்ன எஜமான் இங்கே
வருவார்கள், என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான்.
இவர்கள் வந்த வஸ்திரங்களைக் கட்டிக்கொண்டு, அய்யர்
வீட்டுக்குச் சாப்பிடப் போனார்கள். போவதற்குள் இலை
போட்டுத் தயாராய் இருந்தது. உடனே சாப்பிட உட்கார்ந்
தார்கள். சுவர்ணாம்பாளை, சௌந்தரராஜபிள்ளை நீயும்
சாப்பிட உட்கார்ந்துகொள் என, நீங்கள் சாப்பிட்ட பிறகு
உங்கள் இலையில் சாப்பிடுகிறேன். நீங்கள் சாப்பிடுங்கள்
என்றாள். சௌந்தரராஜபிள்ளை கூடாது நீயும் என்னோடு
கூடத்தான்! வேண்டுமென, ஆனால் உட்காருகிறேன் என்று
ஒரு பக்கமாய் இலை போட்டுக்கொண்டு உட்கார்ந்தாள்

அம்மாள் எல்லோருக்கும் போளி ஆமவடை அப்பளம் பாயஸத்தோடு பரமாறினாள். சம்பிரமமாக சாப்பிட்டு கை அலம்பிக்கொண்டு இவர்கள் முன்போல திண்ணையில் உட்கார, பண்ணையிலிருந்து தங்கத்தட்டில் தாம்பூலம் வந்து தயாராய் இருந்தது. சுப்பிரமணிய பிள்ளை பங்களாவில் இருந்தபடியே அடிக்கடி ஆளனுப்பி இவர்கள் என்ன செய்கிறார்கள் என்றதை தெரிந்துகொண்டே இருந்தார். அய்யர் வீட்டில் இவர்கள் தாம்பூலம் போட்டுக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள்.

காலையில் இவர்களைப் பார்த்துவிட்டு, சாரதாம்பாள் லெட்டரோடு வீட்டுக்குப்போன சுப்பிரமணியபிள்ளை அய்யர்வீட்டுக்கு சாமான்கள் அனுப்பிவிட்டு நாற்காலியில் உட்கார்ந்தாரென்று முன்னமேயே சொன்னோமல்லவா. இவர் நாற்காலியில் உட்கார்ந்ததும் காகிதத்தைப் பிரித்துப்பார்த்தார்; அதில் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது.

"எனது உயிர்த்துணைவரான பிள்ளை அவர்களுக்கு சாரதாம்பாள் நமஸ்காரம். க்ஷேமம், தங்கள் க்ஷேமத்தைப்பற்றி எழுதி அனுப்பப்பிரார்த்திக்கிறேன். என்னை சக்கராய பட்டி ஜமீன் முருகப்பிள்ளைக்கு கலியாணம் செய்து கொடுப்பதாய் நிச்சயித்து, நாளது வைகாசிமீ 12வ யாகிய வெள்ளிக்கிழமையதினம் நடத்துவதாய் முகூர்த்தம் வைத்திருக்கிறார். சென்ற ஆறுகாலமாதமாய் தாங்கள் வருவீர்களென்று முழு நம்பிக்கையோடு இருந்த என்மனம் புண்ணாகியது, ஏதோவேலை தொந்தரவு இருக்கலாம், கலியாண விஷயமாய் என் எண்ணம் தங்களுக்கு தெரிந்திருக்கும். அண்ணா கோபாலனுக்கும் சம்மந்தமே இல்லை, பிடிவாதமாய் என் தகப்பனாரும், பெரிய தாயனும் பணக்காரனுக்கு கலியாணம் பண்ணிக்கொடுக்க வேண்டுமென்ற உத்தேசத்தோடு நிச்சயித்து விட்டார்கள். இந்த காகிதம்

கண்ட தக்ஷணமே தாங்கள் புறப்பட்டுவந்து பந்தோபஸ்தில் வைக்கப்பட்டிருக்கிற என்னை எப்படியாவது அழைத்துப் போனாலாச்சுது, இல்லாவிட்டால் என்னிடம் வயிரம் இருந்ததை பொடிபண்ணித் தயாராய் வைத்திருக்கிறேன். தங்களிடம் சென்னையில் நான் சொன்னபடி, தங்களைத்தவிர வேறுபதியை அடையேன், இதுவிஷயம் தங்களுக்கு உசிதமாய்த் தோன்றாவிட்டால் உடனே எழுதி அனுப்புகிறது, உங்களால் என்கெதி எப்படி ஆகும்படி, சுவாமி விடப் போகிறாரோ? மற்ற விஷயங்கள் யாவும் எனது தோழி சுவற்ணாம்பாள் சொல்ல தங்களுக்குத் தெரியவரும்.

சுபகிருது௵<br>வைகாசிமீ 10௳<br>பக்ஷிராஜபுரம்.

தங்கள் அன்பை<br>என்றும் எதிர்பார்த்த<br>சாரதாம்பாள்."

அதை ஒரு தடவை வாசித்துப்பார்த்து ஜமீன்தாருக்கு கொடுக்க தீர்மானம் செய்திருக்கிற எனது சாரதாம்பாளை நான் அழைத்துவந்து விடுவது சாத்தியப்படுமா? தவிர தான் பந்தோபஸ்தில் வைக்கப்பட்டிருக்கிறதாய் எழுதியிருக்கிறாள், அந்தப்படி பந்தோபஸ்தில் இருக்கிற ஒரு பிரபுவீட்டுப் பெண்ணை நான் அழைத்துவருவது என்றால் எனக்கு துணியவில்லையே! என்றாலும், சாரதாம்பாள் தான் புறப்பட்டு என்னோடு வந்து விடலாம் என்ற தைரியம் இருப்பதால்தான் காகிதத்தில் எழுதியிருக்கிறாள். இல்லாவிடில் எழுதமாட்டாள். எல்லாம் வெகு சீக்கிரத்தில் முடிய வேண்டியிருக்கிறது. நல்லது! சாப்பிட்டுவிட்டு அக்காள் சுவர்ணாம்பாளைக் கண்டு யோசித்தால் எல்லா தகவல்களும் புரிந்துவிடுகின்றது யென்று சாப்பாட்டுக்கு போனார்.

அவ்விடம் இளையதாயார் வாசல்படியிலேயே கண்டு அக்கிரகாரத்து குப்பய்யர் வீட்டுக்கு 10 பேருக்கு சாமான்

கள் அனுப்பச்சொன்னாய் யென்று சேவகன் வந்து பேசா
னான். அனுப்பினேன். யார் வந்திருக்கிறது? என்ன
விசேஷம்? என்று கேட்க சுப்பிரமணியபிள்ளை பட்டணம்
இருந்து எனக்கு சினேகிதர்கள் வந்திருக்கிறார்கள், அவர்
களுக்காகத்தான் அனுப்பச்சொன்னேன் என்றார். இன்று
என்ன உன்முகம் சந்தோஷ களையாய் இருக்கிறதே! அவர்
கள் வந்ததற்காகவா? சுப்பிரமணியன் அவர்கள் வந்தால்
அதற்காக யென்ன சந்தோஷம்! எத்தனையோ சினேகிதர்
கள் வருகிறார்கள் அதைப்போல் இவர்கள் வந்தார்கள் என
இளையதாயார், ஆனால் உன் தகப்பனார் உனக்கு சீக்கிரமாய்
கலியாணம பண்ணப்போகிறதாய் சொன்னாரே அதறகாக
சந்தோஷம்போல் இருக்கிறது அல்லவா எனக்கு ஆளைப்
பார்த்தால் உடனே தெரிந்துவிடுமே! சுப்பிரமணியா சா
தம்போடுவா, அப்புறம் பேசலாம என்றான், சரி என்று உள
ளேபோய் சுப்பிரமணியனுக்கு ரொமப உபசாரம் பண்ணி
சாதம்போட்டாள். இவன் சாப்பிட்டதும் பங்களாவுக்கு
கிளம்பினான். என்ன சுப்பிரமணியா? ஒருநாளைபோல
சாப்பிட்டதும் சாப்பிடாததுமாய் பங்களாவுக்கு போகி
றயே, உனக்கு எங்களை யெல்லாம் பார்த்தால் பேசவேண்டி
யிருக்குமா? இருநதாலும் நீ எனக்கு பிள்ளையல்லவா?
உன்னோடு சில சமாசாரம் பேசவேண்டியிருக்கிறது, சாய
ரக்ஷை சீக்கிரம வந்துவிடு என்றாள். சுப்பிரமணியன் அப்
படியே வருகிறேன் என்று பங்களாவுக்கு வந்ததும சட்
டையை எடுத்துப் போட்டுக்கொண்டு, கொடையைப் பிடித்
துக்கொண்டு அக்கிரகாரம் வந்தான். அங்கே இவர்கள்
திண்ணையில் உட்கார்ந்திருந்தார்கள் இவர்களை கண்டதும்
சாப்பாடு ஆச்சுதா என்று கேட்டான். அண்ணாப்பிள்ளை
நீங்களும் இப்பொழுது தான் சாப்பிட்டாப்போல் இருக்
கிறது என, ஆம் நான் சாப்பிட்டதும் இங்கே வந்தேன் என
றார். அக்காள் சாப்பிட்டாய் விட்டது, இரேழியில் இருக்
கிறாள் என்று சௌந்தரராஜபிள்ளை சொன்னார். அண்ணாப்

பிள்ளை ஊருக்குப் புறப்பட வேணுமே நாழிகை ஆய்விட்டது, இப்பொழுது 2-மணிக்குமேல் இருக்கும். இப்பவே கிளம்பினால்தான் ஊர்போய்ச் சேரலாம் என சுப்பிரமணிய பிள்ளை சரி புறப்படுகிறது என்றார். இரேழியில் யிருந்த சுவர்ணம்பாள் கடிதத்திற்கு பதில் யெழுதினீர்களோ? என்று கேட்க, அதற்கென்ன எழுதிக்கொடுக்கிறேன் என்றார். சுவர்ணம்பாள் வாய்ச்சேதி ஏதாவது உண்டோ? ஏன் தங்களிடம் சமாசாரம் எனக்குசொல்லி அனுப்பியிருந்தால் நானும் அதற்கு பதில் சொல்லுகிறேன் என்றார். சுவர்ணம் சாரதாம்பாள் என்னிடம் இப்பொழுது வரும்பொழுது ஒன்றும்சொல்லவில்லை. 7-8-நாள் முந்தி வரையில் தங்களுடைய பிரஸ்தாபம் தான் பேசிக்கொண்டிருப்போம் என்றாள். சுப்பிரமணியபிள்ளை கடைசியாக உங்களுடைய தீர்மானம் என்ன? எப்படி முடிவு செய்துகொண்டீர்களென், வேறே என்னமுடிவு இருக்கிறது, தங்களைத் தவிர வேறொருவரையும் அவள் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறதில்லை, கூடாது என்று தாங்கள் வேறு இடத்தில் கல்லியாணம் செய்துகொண்டால் அவள் பிராணனை விட்டுவிடுவாளே யொழிய உயிர்வைத்துக்கொண்டு யிருக்கப்போகிறதில்லை இதுதான் முடிவு, தங்களுடைய அபிப்பிராயத்தைச் சொல்லவேண்டியது தான் என்றாள். சுப்பிரமணிய பிள்ளை யாரோ தன்னை பந்தோபஸ்தில் வைத்திருக்கிறதாக எழுதியிருக்கிறாளே அப்படிபந்தோபஸ்தில் வைத்திருக்கிற பெண்ணை நான் எப்படி வந்து கலியாணம் பண்ணமுடியும், அதுதான் பெரிய வியாகூலமாயிருக்கிறது என, சுவர்ணம் ஸ்திரீகள் ஒரு காரியத்தை சாதிக்கவேண்டுமானால் அது முடியாதென்று சொல்வது ஒருநாளுமில்லை. தாங்களேன் யோசிக்கிறீர்கள் என்றாள். சுப்பிரமணியபிள்ளை நான் இப்பொழுது புறப்பட்டு வருவதாயிருந்தால் சகல சொத்தையும் ஒரு பெண்ணுக்காக இழந்து விட்டு வரவேண்டியவனாக யிருக்கிறேன். என்னுடைய சொத்தைக்காட்டிலும் 1000-மடங்கு உயர்ந்த

தாக சாரதாம்பாளிடத்தில் அபிமானமிருக்கிறது. நான அவ்விடம வந்து அவளை காணமுடியாவிட்டால மேல் கொண்டு நடக்கும விததததைப் பற்றிசாரதாம்பாளைபபோல் எனக்கு சொல்லிக்கொள்ள இஷ்டமிலலை என்று கண்களில் ஜலம் ததும்ப சட்டை பையிலிருநத கடுதாசையெடுத்து மசியடைத்து தன்னிட மிருந்த பேனுவால காகிதம எழுதி லகோடா செய்து சுவர்ணுமபாள் கையில் கொடுத்தார். சுவர்ணுபபாள் அதை வாங்கிககொணடு தஙகளுடைய வரவை எப்பொழுது எதிர்பார்க்கலாம? என்று கேழ்க்க, நாளையதினம் ராத்திரி 8-மணிக்குள வநது விடுகிறேன், வராவிட்டால் கடவுளுடைய சமமதபபடி நடக்கட்டும என்ருர். சுவற்ணுமபாள் நாளையதினம ராததிரி 8-மணிக்கு முந்தியே தாங்கள் எங்கள் வீட்டிற்கு வநதுவிடுங்கள அதற் குள் நான் ஏற்பாடு பண்ணிவைக்கிறேன். தாங்கள வந்ததும உடனே சாரதாம்பாளுடன் புறபபட்டுவிடலாம, நாங் கள் போகவேணும என்வரவையே பாாத்துக்கொண்டிருப் பாள், உததிரவுகொடுங்கள் என்ருள். அண்ணுபபிள்ளை எழுந்து வண்டிகட்டினர். சௌநதரராஜபிள்ளை வீட்டு அம்மாளைக் கூபபிட்டு இரண்டு ரூபாய் பணமகொடுத்து அம்மா நாஙகள் ஊருக்குப்போய்வருகிறோம் என்று சொல் லிக்கொண்டு கிளம்பிவிட்டார்கள். அண்ணுப்பிள்ளை வண்டி யோட்டிக்கொண்டு போக சுவற்ணும்பாள் சௌந்தரராஜ பிள்ளை சுப்பிரமணியபிள்ளை இவர்கள் மூவரும் கொஞ்ச தூரம் நடந்துகொண்டே பேசிக்கொண்டு போனுர்கள். பிறகு சுப்பிரமணியபிள்ளை, அக்காள் வண்டியில் உட்காருங் கள், நான் போய்வருகிறேன் என்ருர். சௌந்தரராஜ பிள் ளையும் அனுமதிபெற்றுக்கொண்டு வண்டியில் உட்கார்ந் தார். சுவற்ணும்பாளும் உட்கார்ந்தாள். இவர்கள் வண்டி மறைகிறவரையில் சுப்பிரமணியபிள்ளை பார்த்துக்கொண்டு இருந்துவிட்டு பங்களாவுக்குப் போனுர்.



## நான்காம் அத்தியாயம்.



அறனீனுமின்பமு மீனுந்திறனறிந்து
தீதின்றிவந்த பொருள்.

வண்டியில் அண்ணுப்பிள்ளை நாம் சிங்கனூர்போக 6-மணி ஆகிவிடும் என்றார். சௌந்தரராஜபிள்ளை நாம் சிங்கனூர் போகவேண்டியது தான். ஆனால் சுப்பிரமணியபிள்ளை காரியத்தை முடித்துவிட்டுத்தான் மறுவேலை பார்க்கவேண்டும். இதுரொம்ப அவசியமானதல்லவா ? என சுவர்ணம் நாம் இப்படியே வண்டியோடு பக்ஷிராஜபுரம் போவோம், அங்கே இந்த லெட்டரைக் கொடுத்துவிட்டு, ராத்திரி சுப்பிரமணிய பிள்ளை வந்துவிடுவார் அவரிடம் சாரதாம்பாளை சேர்த்து விடவேண்டிய முயற்சிகளைச்செய்து சேர்த்துவிட்டு, நாளை யனன்றியஉதயத்திற்குபுறப்பட்டுசிங்கனூர்வந்துவிடுவோம், அப்புறம் உங்களுடையசௌகரியம்போல் இருந்துகொள்ளலாம் என, சௌந்தரராஜபிள்ளை ஆம்சுவர்ணம் என்னுடைய உடுப்பு, வேஷ்ட்டி வகைறுக்கள் எல்லாம் அத்தான்வீட்டில் இருக்கிறதே ! நான் இப்படியேயா வருவேன் என்றார். தாங்கள் இப்பொழுது அணிந்திருக்கிற உடுப்புத்தான் ரொம்ப மேன்மையாய் இருக்கிறதே ! இதற்கு பெண் கொடுத்தால் போதும், வேறுவேண்டாம் என்றாள். சௌந்தரராஜபிள்ளை உனக்குவேண்டிய நகைகள் ஆபரணங்கள் வேண்டாமா ? இந்தஸ்திதியிலா உன்னோடு நான்வருவேன் என, சுவர்ணம்பாள் என்னபிரபோ? தாங்கள் என்னோடுவருவதே10 லக்ஷம் ரூபாய்க்கு ஆபரணம் பூண்டதுபோல் எனக்குயில்லையா? நமக்கு நகையிருக்கிறதென்று நாளைக்கேதெரிந்துகொள்ளப் போகிறவர்கள் மறுநாள் தெரிந்துகொள்ளட்டுமே ? அவசரமான காரியத்தில் ஆபரணங்களைப் பார்த்துக் கொண்டா

இருக்கிறது? தவிர, நான் அத்தான்வீட்டுக்கு வந்தால் அவர்கள் எல்லோரும் என்விஷயமாய் ஏதாவது கேட்பார்கள். நான் பதில்சொல்லவேண்டியதாய் இருக்கும், பிறகு நாளைக்குப்போகலாம் என்று பிடிவாதப் படுத்துவார்கள், சரிதான் என்று ஒப்புக்கொள்ளவேண்டியதுதான். கடைசியாக நாம் இவ்வளவு பிரயாசைப்பட்டு பிரயோசனமில்லாமல் போவதோடும், உயிருக்கு ஹானி சம்பவிக்கும் என்று சொல்ல, அண்ணப்பிள்ளை சுவற்ணம்பாள் சொல்லுகிறபடி பக்ஷிராஜபுரம் போவோம், நாளையனன்று கட்டாயம் ஊர்வந்து விடுவோம் என்றார். சௌந்தரராஜபிள்ளை பக்ஷிராஜபுரம் எவ்வளவுதூரம் இருக்குமென, சிங்கனூர் போய்ப்போனால் 24-மைல், அது சாலை மார்க்கம், சற்று குறுக்காகப் போய் அப்புறம் ரோட்டுக்குப் போனால் 20-மைல் பக்ஷிராஜபுரம். சிங்கனூர் கிழக்கமாய் ஒதுங்கிப்போம் என, சௌந்தரராஜபிள்ளை குறுக்காக குதிரைவண்டி போகுமோ என, நெடுக திடல்தான் திவ்வியமாய்ப்போகும் என்றார்.

சற்றுதூரம் போனதும், பக்ஷிராஜபுரம் நேராகப்போகிறதென்று வண்டியைத் திருப்பி விட்டார்கள். வண்டியில் போகும்பொழுது சுவற்ணம்பாள் எல்லாம் சரிதான் நானும் சந்தோஷமடைந்தேன்! சாரதாம்பாளும் சந்தோஷமடையப் போகிறாள். இதுவரையில் தாங்கள் என்னை விட்டுப் பிரிந்த, பிறகு எங்கெங்கு போயிருந்தீர்கள் அதைச்சொல்லலாகாதா என சௌந்தரராஜபிள்ளை நீ வேலைசெய்துவந்து எனக்குப் போட நான்சாப்பிட்டுவிட்டு இருப்பதில் ரொம்ப வருத்தமாயிருந்தது, நீயோ என்பேரில் நான் ஓடிப்போய் விடுவேனோ என்றுகவலை உடையவளாகவே இருந்தாய். ஒருநாள் உன்னுடைய சிரமம் என்னால் தாங்க முடியவில்லை, உன்னிடம் சொல்லி விட்டுப் போவோமென்றாலும் நீ விடுகிறதில்லை

கூட கிளம்பி விடுவாய், நீ ஒருவள் சிரமப்பட்டு சம்பாதித்து இரண்டுபேர் சாப்பிடுவதை முன்னிட்டு, உனக்குமட்டும் சம்பாதித்துச் சாப்பிடுவதில் சிரமத்தை அடைய மாட்டாய் என்ற தைரியம் எனக்கு இருந்தது. அதன்பேரில், அன்று ராத்திரி 12-மணிக்கு மேல் எழுந்திருந்து போய் விடுவோமென்று கிளம்பினேன், உன்னை ஒண்டியாய் விட்டுப் போவதில் மனம வரவில்லை, பிறகுபடுத்துக் கொண்டேன், மறுபடியும் தேசாந்திரம்போய் சம்பாதித்துவந்து உன்னை ரக்ஷித்தாலொழிய வேறுமார்க்கம் எனக்குத் தோணவில்லை. உடனே எழுந்திருந்து போகத்தான் வேண்டுமென்ற எண்ணம் மேலிட, உனக்குகட்டிக்கொள்ள புடவை இல்லையே யென்ற வருத்தத்தோடு, நான் கட்டிக்கொண்டிருந்த கிழியாத வேஷ்டியையாவது போட்டுவிட்டுப் போவோமென்று, அதைப் போட்டுவிட்டு, மேல்போட்டிருந்த கந்தலோடு புறப்பட்டு விட்டேன். அப்பொழுது ராத்திரி 1-மணி இருக்கும், இருட்டு சொல்ல முடியவில்லை, தட்டித்தடவி வழி கண்டு பிடிப்போமென்றாலும் உன்னை விட்டுப்பிரிந்த துக்கத்தால், கண்ணில் ஜலம்பெருக ஒன்றுமே தோன்றவில்லை. சற்று தேசகாலத்திற்கெல்லாம் நிலவுவெளிச்சம உண்டாயிற்று. ஏதோ ஒரு வழிதோன்றிற்று. அவ்வழியாகவே போனேன். ஆனால் இன்ன ஊருக்கு இன்ன காரியமாய்ப் போகிறேனென்றது எனக்குத்தெரியாது. போகப்போக வழியும் தொலையவில்லை, நடுவில் ஒருஊரையும் காணவில்லை, சூரியனும் உதயமாச்சுது, காலை 7-மணி வரையில் நடந்து போன பிறகு ஒரு குப்பம் தென்பட்டது. அதில சிலவீடுகள் இருந்தன. அங்கே வாசலில் இருந்த ஒரு மனிதனைக் கூப்பிட்டு, இந்த பாதை எந்த ஊருக்குப்போகும் என்றுகேட்க, கூடலூர் போம் என்றார். இங்கிருந்து எத்தனைமைல் தூரமிருக்குமென்று கேட்டேன். 15-மைல் தூரமிருக்கு மென்றார். இங்கிருந்து பக்ஷிராஜ

புரம் எவ்வளவு தூர மிருக்குமென்று கேட்க, அது 40-மை லுக்குமேல் இருக்குமென்றார். 40-மைல் என்றதும் என க்கே ஆச்சரியமாய் இருந்தது. நான் இவ்வளவு தூரம் தைரி யமாய் வந்தவன் இந்த 15-மைல் போகமாட்டேனா என்று நினைத்து போய்விட்டுவருகிறேன் என்று அவரிடம் சொல்லி விட்டு, கிளம்பும்பொழுது அவர், தம்பீ! ரொம்ப தொலைதூரமி ருந்து நடந்து வந்தவராய்க் காண்கிறது நம்மவீட்டில் வந்து பல்விளக்கிவிட்டு கொஞ்சம்நீராகாரம் சாப்பிட்டுவிட்டுபோ, காலைநேரம் வெறும்வயிற்றோடுபோகவேண்டாம் என்றார். சரி, அப்படியே செய்கிறேன் என்று அவர்வீட்டுக்குப்போய் பல் விளக்கிவிட்டு பழைய சாதம் கொஞ்சம் சாப்பிட்டேன். எனக்கு அந்தச்சாப்பாடு இன்னம்என்வயிற்றிலிருக்கிறது. பிறகு நான் அவரிடம் சொல்லிக்கொண்டு சீக்கிரம் நல்லநிலை மையோடு தங்களைப் பார்க்கிறேன் என்று சொல்லி விட்டு கூடலூருக்கு ரோட்டுமார்க்கமாய்க் கிளம்பிவருகையில்பாதி வழிவந்திருப்பேன், நடக்கமுடியவில்லை, ரொம்ப சிரமப்பட் டுக்கொண்டு கூடலூர் வந்துசேர்ந்தேன். 15-நாழிகை ஆச் சுது அங்கே ஒருதெருவழியாய்ப் போகும் பொழுது, ஒரு பெரியவீடு தென்பட்டது. அந்த வீட்டுத்திண்ணை நன்றாக யிருந்ததால் அதில்போய் படுத்துக்கொண்டேன். படுத்துக் கொண்டதுதான் தெரியும். ராத்திரி 9-மணிக்கு வீட்டுக்கார அம்மாள் விளக்கை கொளுத்திவந்து, யார்படுத்திருக்கிறது? எழுந்திரு என்று எழுப்ப எழுந்திருந்தேன். காலை 7-மணிக்கு சாப்பிட்டதால் ரொம்பகளைப்பாய் இருக்கிறது கொஞ்சம் தண்ணீர் கொடுக்கிறீர்களா? என்று கேட்டேன். அந்த அம் மாள் மகா நல்லவளானதால், அப்பா சாதம் போடுகிறேன். சாப்பிடு இனிமேல் நீ எங்கே போகப் போகிறாய், என்று சொல்லிவிட்டு திண்ணையிலேயே ஒரு இலையைப்போட்டு என க்கு கைகால் அலம்பிக்கொள்ள செம்பில் ஜலமும் கொண்டு

வந்து வைத்தார்கள். நான் எழுந்திருந்து கால்கை அலம்பிக்கொண்டு சாப்பிட இலையில் உட்கார்ந்ததும் அந்த அம்மாள் என் வயிறுகொண்டவரையில் திருப்தியாய் சாதம்போட்டார்கள். சாப்பிட்டானதும், அந்த அம்மாளிடம் என் வரலாற்றைச்சொல்லி என் சம்சாரத்திற்கு அனுப்ப கொஞ்சம் பணம் வந்தால்போதும் அதற்கு தகுந்தபடி ஏதாவது ஒரு வேலை அகப்பட்டால் இந்த ஊரிலேயே இருந்து விடுவேன் என்றேன். அதற்கு அந்த அம்மாள் அப்பா நீ வேணுமானால் எங்கள் வீட்டோடு இரு உனக்கு சாப்பாடு போட்டு ஏதாவது சம்பளம் கொடுக்கிறோமென்றாள். மற்றவிஷயங்களை காலையில் பேசிக்கொள்வோம் திண்ணையிலேயே படுத்துக்கொள் என்று சொல்லி விட்டு உள்ளே போய்விட்டாள். நான்படுத்துக் கொண்டேன். காலையில் எழுந்திருந்து, அம்மாளைக் கூப்பிட்டு உன் விஷயமெல்லாம் என் புருஷரிடம் சொன்னேன், சரி என்று ஒத்துக் கொண்டார். நீ தினம் நாங்கள் சொல்லும் வேலையைக் கேட்டு வீட்டில் ஒருவரும் வராதபடி திண்ணையிலேயே உட்கார்ந்திரு என்றார். இதனால் எனக்கு ரொம்ப சந்தோஷமாச்சு என்றாலும் தேசாந்தரம் போகவேண்டும் என்ற எண்ணம் மாத்திரம் என்னை விட்டு ஒழியவில்லை. 4-நாள் கழித்து ஒருநாள் நான்மார்க்கட்டுக்கு கறிகாய் வாங்கப்போகையில், ஒரு வீட்டின்வாசலில்,தேசாந்திரம் போகிறவர்களுக்கு இங்கு இனமாக கப்பல் சத்தம் கொடுக்கப்படும் என்று எழுதியிருந்தது. அதை வாசித்துப் பார்த்து இவர்கள் ஏன் இனமாகக் கொடுக்கவேண்டும் என்று யோசித்துக் கொண்டு போர்டை பார்த்தபடியே நின்று கொண்டிருக்கையில், அந்த வீட்டிற்குள்ளிருந்து நரைத்த தாடியும், மீசையும், சுருங்கின கன்னமும், சிவந்தகண்ணும் தொங்கும்படிக்கான பெரிய சட்டையும், நீளமான குல்லாவும், இடுப்பில் பட்டு சைலியும் கட்டிக்கொண்டு ஒரு துலுக்

கன் வந்தான். அவன் என்னைப்பார்த்ததும் என்ன பலகை
யைப்பார்க்கிறாய்? என்று கேட்க, நான் தேசாந்தரம்போக
வேண்டும் என்று நினைத்திருக்கிறேன், இவ்விடத்தில் கப்பல்
சத்தம் இனாமாகக் கொடுப்பதாக எழுதப் பட்டிருக்கிறதை
பார்த்து இது நிஜந்தானா என்று கேட்டேன். அதற்கு
ஆம் என்று துலுக்கன்சொல்ல ஆனால்நான்போகிறேன் பணத்
தைக் கொடுமென்றேன். இங்குவந்து, இந்த பத்திரத்தில்
கையெழுத்துப்போட்டுக் கொடுத்தால், நீகப்பல் ஏறிப்போக
பாஸ் வாங்கிக்கொடுப்போம், பணம் உன்கையில் கொடுக்க
மாட்டோம் என்று துலுக்கன் சொல்லிவிட்டான். பணம்
கொடுத்தால் என்ன பாஸ்வாங்கிக்கொடுத்தால் என்ன இரண்
டும்சரிதான், நான் வீட்டுக்கு கறிகாய் வாங்கிக் கொடுத்து
விட்டுவருகிறேன் என்று சௌந்தரராஜபிள்ளை சொல்ல அப
படியேபோய்வாரும். இன்னம் 2-நாழிகைக்குள் வந்தாலொ
ழிய உனக்கு பணம் கொடுக்கமாட்டேன் என்றான். இரண்டு
நாழிகைகூடவேண்டாம் ஒருநாழிகையில்வருகிறேன் என்று
சொல்லிவிட்டு மார்க்கட்டுக்குப்போய் சில கறிகாய்கள் வாங்
கிக்கொண்டு என் எஜமானனிடம் கொண்டுபோய்க் கொடுத்
துவிட்டு, சற்று வெளியேபோய் வருகிறேன் என்று சொல்லி
கிளம்பி துலுக்கன்வீடுவந்தேன். துலுக்கன் எனக்குரொம்ப
உபசாரம்பண்ணி வேஷ்டி நல்லதாய் தருவித்து கொடுத்து,
சட்டையும்கொடுத்தான். மத்தியானம்சாப்பாட்டுக்கு கிளப்
பில்சொல்லிவிட்டான். இந்ததுலுக்கன் என்னதயாளு நமக்கு
இவ்வளவு உபசாரம் பண்ணுகிறானே, தவிர கப்பல்சத்தமும்
கொடுக்கிறான். ஏழைகளிடத்தில் துலுக்கர்களுக்கு எத்தனை
அபிமானம்இருக்கிறதுயென்று நினைத்து, ராவுத்தரே, ஏதோ
பத்திரத்தில் கையெழுத்துப் போட வேண்டும் என்றீரே
அதைக் கொண்டுவாரும் கையொப்பம் செய்து தருகிறேன்,
என்றேன். அவர் துலுக்கில் அச்செழுத்தில் எழுதப்பட்டிரு

க்கிறீ ஒருபத்திரத்தைகொடுத்து இந்த ஓரத்தில் கையெழுத்துப்போடும் என்றார். அப்படியே கையெழுத்துப் போட்டு 2 சாக்ஷியும்வாங்கிக் கொடுத்தேன். உடனே உள்ளே பத்திரத்தை கொண்டுபோய் வைத்துவிட்டு ஒருகாகிதமும் பினாங்குக்குப்போக ஒரு பாசும் கொண்டுவந்து என்னிடம் கொடுத்து கப்பல் இன்று பினாங்குக்குபுறப்படுகிறது. துறைமுகம் போகலாம் என்றுசொல்லி எனக்கு 4 நாளைக்குச் சாணும்படியான ஆகாரமும் விலைக்குவாங்கிக் கொடுத்தான். அதைமூட்டையாகக் கட்டி நான் எடுத்துக்கொண்டேன், நாங்கள் இருவருமாய் துறைமுகம் போனோம், அங்கே நான் போனதும் என்னைக் கப்பலில் ஏற்றிவிட்டு கிழத்துலுக்கன் பினாங்கில் நீ போய் இறங்கினதும் இரண்டுதுரைமார்கள் அவ்விடம் இருப்பார்கள், அவர்களிடம் இந்த லெட்டரைக்கொடு, அவர்உனக்கு வேலைகொடுப்பார்கள். நீ வருவதாக நான் தபால் எழுதிப்போடுகிறேன் என்று சொல்லிவிட்டுத் திரும்பிப்போய்விட்டான். பிறகு நான் கப்பலில் உட்கார்ந்து கொள்ள, கப்பல் சுங்கம்திருப்பிவிட்டார்கள். 6 நாள்கப்பலில் போனேன் கையிலிருந்த ஆகாரத்தை, 6 நாள்களுக்கும் கிரவி வைத்துக்கொண்டேன். ஆரும்நாள் மத்தியானம் இரண்டு மணிக்கு பினாங்குபோய்ச் சேர்ந்தது, அங்கே நான்போய் இறங்கும் பொழுது நான் ஏன்இந்ததேசத்திற்கு வந்தேன்திரும்பி நான் ஊருக்குப்போவேனு என்ற வருத்தம் மிகுதியாக ஆய் விட்டது. நான் கப்பலைவிட்டு இறங்கி கரைசேர்ந்ததும், இரண்டு துரைமார்கள் தயாராய் நின்றுகொண்டிருந்தார்கள். அவரிடம் இந்த லெட்டரைக் கொடுத்தும் அவர் அதை வாங்கி வாசித்துப் பார்த்துவிட்டு, பக்கத்தில் நின்றவனைத் திரும்பிப் பார்த்தார். அவன் உடனே எனக்கு ரொட்டி ஸோடாவிமெனேட் முதலானவைகளைக் கொடுத்து உபசரித்தான். நான் சாப்பிட்டபிறகு, என்னைவண்டியிலேத்தி, வீட்டுக்கு அழைத்

துப்போனார்கள். பிறகு இரண்டுநாள்வரையில்என்னை ரொம்ப பசரித்தார்கள். அதுவரையிலாச்சுது எனக்கு உடம்பு சிர மபரிகாரம் ஆக. மூன்றுநாள காலையில் மேல்கண்ட துரை மார்கள் என்னைக்கூப்பிட்டு நீ நம்மிடம் 9 வருஷம் சேவகம் பண்ணவேண்டும். அதுவரையில், நாங்கள்சொன்ன வேலை யைக்கேட்கவேண்டும், உனக்குமாஸம் ரூபாய் 10 சம்பளம் ஏற்படுத்தி இருக்கிறோம். அந்த பத்து ரூபாயில் உன் சாப் பாட்டுக்கு ரூ 7 எடுத்துக்கொண்டு, பாக்கி ரூபாய் 3-ம் நீ. 9-வருஷம் கழித்து ஊருக்குப்போனால், அப்பொழுது கொடு ப்போம. அதுவரையில் நீங்களனுமதி யன்றியெவேறொரு இடமும் போகக்கூடாது அப்படிப்போய் உன்னைக் கண்டு பிடித்து விட்டால் இந்த பிறங்கிலிருந்து வேறுசீமைக்கு அனுப்பிவிடுவோம, அங்கேபோய் நீ 18-வருஷம் வேலை செய்துவிட்டு அப்புறம்தான் திரும்பவேண்டும. உஷார்! நீ எழுதி கையெழுத்துப்போட்டிருக்கிற பத்திரம் இதோஇருக் கிறது பார்! உமக்குகடலூர் துலுக்கணிடம் ரூபாய்500கொ டுத்து உன்னை வாங்கினோம என்று சீட்டைக்காட்டவே! எனக்கு உடம்பு விடவிடத்துப்போய் ஐயோ! 9வருஷமா? அடிமைவேலை செய்யவேண்டும்! அதுவரையில் எனகதி எப் படி ஆகுமோ! தெய்வமே! பிழைக்கவந்த இடத்திலும் இப் படி அவதிப்படும்படி ஏற்பட்டதே என்று அழுதேன். உட னே அந்ததுரை, ஏன் அழுகிறாய்? 9 வருஷமும், 9 நாழிகை யாய்ப போய்விடும. நீ அப்படிக்கொண்டாய் உன்னைவிட்டு விடவும முடியாது. ஆகையால்உனக்குசௌக்கியமாக வேலை கொடுக்கிறோம். அந்தவேலையை ஒழுங்காய்ச்செய் உனக்கு கஷ்டமில்லை. உன்னைப்பார்த்தால் எங்களுக்கு வருத்தமாய் இருக்கிறதென்று சொல்லி, ஒரு சுண்ணாம்பு கலயத்தை என் னிடமகொடுத்தார்கள். இதை நான் என்னசெய்கிறதென்று கேட்டதற்கு, இதைகையில் எடுத்துக்கொண்டு தெருவில்

பேஷாய், சுண்ணாம்பு அடிக்கவில்லையா சுண்ணாம்பு? என்று கத்திக்கொண்டே போனால், வீட்டிற்கு சுண்ணாம்பு அடிக்க வேணுமென்கிறவர்கள் உன்னைக் கூப்பிடுவார்கள். இந்தக் கூடம் நிறைய இருக்கிற சுண்ணாம்பை அடித்துவிட்டால், அதற்கு ஒரு ரூபாய் கூலி தரும் இந்த விகிதப்படி அவர்களுக்கு வேண்டியபடி அடித்துவிட்டுக் கூலி வாங்கிக் கொண்டுவந்தால் எங்களிடம் சுண்ணாம்புக்கலயத்தையும் பணத்தையும் கொடுத்து விடவேண்டும் அப்படிச் செய்யாமல் நடுவில் நீ ஏதாவது காசு எடுத்துக் கொண்டாயா தெரியவந்தால் உன்னுடைய சாப்பாடு அன்றைக்கு நிறுத்திவிடப்படும் என்றார். அப்படியே சரிதான், என்று சுண்ணாம்புக்கலயத்தைக் கையில் எடுத்துக் கொண்டு நம்முடைய கெதி இப்படியாக ஈசுவரன் விட்டிருக்கிறபோது நம்மால் தடுக்கமுடியுமா? என்று தலைசொன்னபடி தெருத் தெருவாய்ப் போய் சுண்ணாம்பு அடிக்க வில்லையா சுண்ணாம்பு? என்று கூவினேன்! ஒரு வீட்டில் கூப்பிட்டார்கள். நான் போனதும் ஒரு அறையைக் காண்பித்தார்கள். இதற்கு சுண்ணாம்பு அடிக்க எவ்வளவு சுண்ணாம்பு வேண்டுமென்று கேட்டேன் பாதிகலயம் சுண்ணாம்பு போதும் என்று சொன்னார்கள். ஆனால் அரைரூபாய் கூலிகொடுக்கவேண்டும் என்றேன். சரி என்று ஒத்துக்கொண்டு அடிக்கச்சொன்னார்கள். நான் சட்டி வாங்கி அதில் சுண்ணாம்பைக் கரைத்துக்கொண்டு சட்டியில் போட்டிருக்கத்தப்பால் அடித்தேன், மூன்று சுவர் அடித்தானதும், சுண்ணாம்பு ஆகிவிட்டது உடனே வீட்டுக்காரனைக் கூப்பிட்டு சுண்ணாம்பு அடித்தாய்விட்டது கூலிகொடும் என்றேன். அவர் அறையின் நாலுபக்கமும் அடிக்காமல் மூன்று பக்கம் மட்டும் அடித்தால்கூலி எப்படி கொடுக்கிறது, பாக்கி ஒருபக்கமும் அடியடா என்றார். ஐயா பாதிகலயம் சுண்ணாம்புதானே நான் அடிப்பதாய் சொன்னேன், நீங்களும் போதும் என்றீர்களே, அதன்படி அடித்து விட்

டேன். மேற்கொண்டு வேண்டுமானால் பணங்கொடுங்கள் சுண்ணாம்பு அடிக்கிறேன் என்றேன். அவர் என்னைப்பார்த்து உனக்கு எந்தப்பக்கம் இருக்கிறது இந்த ஊர் எப்பொழுது வந்தாய் ? நீ ஒன்றும் தெரியாதவனாய் காண்கிறதே! என்றார். ஐயா நான் வந்து மூன்று நாளாச்சுது, இன்றுதான் எனக்கு இந்தவேலை ஏற்பட்டது, இதனுடைய அனுபோகம் எனக்குத் தெரியாது, என் எஜமானர் இந்தக்கலயத்தைக் கொடுத்து ஒரு ரூபாய்க்கு குறையாமல் அடித்துவா என்றார்! அந்தக்கணக்குப்படி பாதி சுண்ணாம்புக்கு அரை ரூபாய் கேட்டேன் என்றேன். அவர் நான் எதார்த்தவாதியென்று தெரிந்துகொண்டதினால், என்னுடைய விஷயங்களைப்பற்றிக் கேட்டார், நான் எல்லாம் சொன்னேன். அவர் எனக்காக ரொம்ப வருததப்பட்டு இதற்கு சுண்ணாம்பு அடிப்பவர்கள் செய்யும் மாதிரிகளை, எனக்கு சொல்லிக்கொடுத்தார். நான் வீடுவரும் பொழுது அரை ரூபாய் கொடுத்து, உனக்கு நம்மால் என்ன செய்யக்கூடியது இருக்கிறது, எந்தசமயத்தில் உனக்கு பசித்தாலும் நம்மவீட்டுக்குவந்து, சாப்பிட்டுவிட்டுப்போ, உனக்கு எதாவது பணம் கொடுத்தால் அங்கு துரைமார்கள் பிடுங்கிக்கொள்வார்கள் என்றார். சற்று நேரம் அவரிடம் பேசிக்கொண்டிருந்துவிட்டு துரைபங்களாவிற்கு வந்துவிட்டேன். நான் வேலைசெய்து சம்பாதித்துவந்த அரை ரூபாயையும் சுண்ணாம்பையும் திருப்பிக் கொடுத்தேன். தினம்தினம் அதிககாலையில் எழுந்திருந்துபல் துலக்கிசாப்பிட்டுவிட்டு, சுண்ணாம்பு கலயத்தோடு வெளியேபோய் வேலைசெய்து விட்டு சாயங்காலம் அவ்விடம் கூலியோடு திரும்பி வருவது வழக்கமாய் இருந்தது. நான் வேலைசெய்யும்பொழுது அவர்கள் கொடுக்கும் கூலிக்குத் தகுந்தபடி, வேலையைசரியாகவே செய்வேன், சிலர் சமையத்துக்குத் தக்கபடியும் அவசரத்துக்கு தக்கபடியுமாக கூலி கேட்பதுபோல் நான் கேட்பதில்லை, அவர்கள் என்

வேலைக்குமெச்சி இனுமாக ஏதாவது கொடுக்க வந்தாலும், நான் வாங்குகிறதில்லை. சிலரிடத்தில் அபிமானத்திற்குவேலை செய்து, கூலியைக் குறைத்துவாங்கி, இவ்வளவுதான் சம்பளம்வந்தது என்றுவதுசொல்லி எஜமானத்துரோகம் செய்கிறதில்லை. இப்படிக்கி நான் இருந்தால் யார்வீட்டுக்கு வெள்ளையடிக்க வேண்டுமென்றாலும், சுண்ணும்புக்கார சௌந்தரத்தைக் கூப்பிடு என்பார்கள். எனக்கு இங்கிலீஷ்பாஷை பேசத்தெரியு மாதலால் துரைமார்கள் பங்களாக்களெல்லாம் நான்தான் போய் வேலை செய்கிறது சிலர் நான் படித்தவனாய் இருந்து இப்படிப்பட்ட அல்பவேலை செய்ய வந்தாயே என்று வியசனிப்பார்கள். என் எஜமானருக்கு என்னால் ஏராளமான வருமானம் வந்ததால் என்னிடத்தில அதிகப் பிரியமாய் இருந்தார். எனக்கு அனனவஸ்திரத்திற்கும் ஒன்றும் குறைவில்லாமல் இருந்தது.

உனக்கு கடிதம் எழுதுவதாக பல தடவைகளில் தீர்மானித்தேன். பணம் அனுப்பாமல், வெறும் கடிதம்மாத்திரம் எழுதினல், ஜாஸ்தியாக உன் வருத்தத்திற்கு காரணமாகுமென்றே ஒருகடிதம்கூட எழுதவில்லை, இப்படியாக 9 வருஷமும் சென்ற ஒரு மாதத்திற்கு முந்திதான் முடிந்தது. என் எஜமானர், நான் ஊருக்குப் போகும்காலம் நெருங்கிவிட்டதைப்பற்றி அடிக்கடி வியசனப் படுவார்கள், கடைசியாக, என்னை விட்டுவிட வேண்டிய கெடுவு நாளையதினம், அந்த துரைமார்கள் என்னைக்கூப்பிட்டு, சௌந்தரம்! உன்னைப் போல் யோக்கியமான வேலைக்காரனை நாங்கள் இனி ஒருநாளும் அடையப் போகிறதில்லை, உனக்காக எங்களிடம் மீதம் இருக்கிற ரூபாய் 324-மட்டும் கொடுப்பதால் எங்களுக்குச் சந்தோஷம் உண்டாகாது, எங்களிடம் இருக்கிற எத்தனையோ வேலைக்காரர்களைவிட உன்னால்தான் ஜாஸ்தியான வரும்படி கிடைத்திருக்கிறது. ரூபா 1000 உனக்கினுமாக கொடுக்கத்

தீர்மானித்துவிட்டோம், எடுத்துக்கொள். இந்தரூபாய் 1324 உனக்கு ஏதாவது ஆகவேண்டிய காரியங்கள் இருந்தால் சொல்லு. அப்படியே செய்துவைக்கிறோம். நீ ஊருக்குப் போனதும் உன்க்ஷேம சமாசாரத்திற்கு அடிக்கடி கடிதம் எழுது என்று என்னைப்பிரிய மனமில்லாதவர்களாய் ரொம்ப துக்கப்பட்டுக்கொண்டு அனுப்பினார்கள். அவர்களிடம்விடை பெற்றுக் கொண்டு எனக்குத் தெரிந்த எல்லாரிடத்திலும் சொல்லிக் கொண்டு வரப்போகையில் அவரவர்கள், தங்கள் அந்தஸ்துக்குத்தக்கபடி பணம், உனக்கு புடவை, வேஷ்டி, இந்தமாதிரி இனும் கொடுத்தார்கள். துரைமார்கள் 100-200 கொடுத்தார்கள், ஒன்றையும் நான் எண்ணாமல் இனமாகக்கிடைத்ததையெல்லாம் நான் வாங்கின பெட்டிகளில் அடக்கிக் கொண்டு கடைசியாக எனக்குரொம்ப விசிதமான ஒரு துரையைக்கண்டேன், அவர் என்னைப்பற்றி தனது வேலைக்காரர்கள் முன்னிலையில் மெச்சிக்கொண்டு, அப்பா சௌந்திரம் உனக்கு பணம் கொடுத்து வுதவிசெய்ய இஷ்டமில்லை. என்னுடைய சினேகர் ஒருவர் சென்னையில் போலீஸ் கம்மிஷனர் ஒருவர் இருக்கிறார், அவரிடம் நான் இதோதருகிற லெட்டரைக்கொண்டுபோய்க் கொடுத்தால் அப்பக்கங்களில் உனக்கு நல்ல வேலை செய்து கொடுப்பார், என்று சொல்லி ஒருகாகிதம் எழுதிக்கொடுத்து என்னை அனுப்பினார். உடனே கப்பலுக்கு கிளம்பிவிட்டேன். நான் துறைமுகம் வரும்வரையில் என்னோடு சுமார் 1000 பெயர்களுக்குமேல் என்னை வழி கொடுண்டுவந்து விட்டார்கள். கப்பல் சத்தம் கொடுத்து பாஸ்வாங்கிக்கொண்டு என் சாமான்களோடு என்னை கப்பலில் ஏற்றினதும், ஒரு பெரிய இரைச்சல் உண்டாயிற்று. அந்தச் சத்தத்தால் என் பிரிவை பட்டணத்திலுள்ள ஜனங்கள் தாளமாட்டாமல் கத்தினதாகத் தெரிந்தது. நான் இரண்டாவது வகுப்பு டிக்கட்டு வாங்கி இருந்ததால் அவ்வகுப்பு அறையில் உட்கார்ந்து கொண்டதும் கப்பலைவிட்டு விட்டார்

கள். நான் சாமான்களை வரிசைப்படுத்த உத்தேசித்து பெட்டிகளைத் திறந்து ரூபாய் களையும் புடவைகளையும் எண்ணுகையில் மொத்தமாக 25,000 ரூபாயும், துணி வகைகளுக்கள் ரூபாய் 1000 பொருமான முள்ளதாயும் இருந்தது. என்னுடன் எதேஷ்டமாய்க் கொண்டுவந்திருந்த ஆகாரங்களைச் சாப்பிட்டுக் கொண்டு வரும்பொழுதெல்லாம் உன் னினைவைத் தவிர வேறில்லை. நான் ஏராளமாய்ப் பணத்தோடு அடைந்த சந்தோஷமானது இப்பொழுது உன்னோடு பேசிக் கொண்டிருக்கிற இன்பத்தில் 1,000-த்தில் ஒன்று கூட இல்லையென்றால், நான் அடைந்த சந்தோஷத்தை அத்தான் தான் கணக்கிட்டுச்சொல்ல வேண்டும், சென்னை வந்து கப்பலில் இறங்கினேன். இறங்கினதும் எனது சாமான்களோடு ஒரு குடிக்கூலி ஜாகாவில் தங்கிவிட்டு, மருநாள் லெட்டர்சகிதமாய் போலீஸ் கமிஷன் துரை பங்களா விசாரித்துக் கொண்டுபோனேன், அங்கே துரையவர்களைக்கண்டு சலாம் செய்து லெட்டர்கொடுத்தேன், அவர் அதைப்பிரித்துப் பார்த்து, அதிக சந்தோஷமடைந்து உனக்கு இங்கிலீஷ் தெரியுமா என்றார், நான் அவரிடம், இங்கிலீஷிலேயே பேசிக் கொண்டிருந்ததைப் பார்த்துவிட்டு இப்பொழுது காலியா யிருக்கிற கடலூர் டிவிஷனுக்கு போலீஸ் இனிஸ்பெக்டராய் நியமிக்கிறோம். பிறகு உம்முடைய வேலை திறத்திற்கு தக்கபடி வேலையை உயர்த்துவோம் என்று, சொல்லி உடனே உத்திரவு எழுதிக்கொடுத்தார். நான், அதைவாங்கிக்கொண்டு, ஊருக்குப்போய் என் பந்துக்களைப் பார்த்துவிட்டு அப்புறம்வந்து வேலையை ஒப்புக்கொள்ளலாமோஎன, துரை முதலில்போய் வேலையை ஒப்புக்கொண்டு ஒருவாரம் கழித்து எழுது, 15-நாள்களுக்கு லீவு சாங்கிஷன் செய்கிறோம் என்றார். நல்லது என்று துரையிடம் உத்திரவு பெற்றுக்கொண்டு, அன்று சாயந்திரமே கடலூருக்கு ரயிலில் ஏறிவிட்டேன், அங்கேவந்து இறங்கினதும், என் சாமான்க

ளோடு ஒருசத்திரத்தில் தங்கி இருந்து அவ்விடம்போய் போ லீஸ் கான்ஸ்டேபிலிடம் சங்கதிகளைச் சொன்னதும் அவர் ஒருநொடியில் ஓடிப்போய் இனிஸ்பெக்டர் சார்ஜு வகித்தி ருந்த ஸ்டேஷன்ஹவுஸ் ஆபீசரை அழைத்துவந்தான், உட னே அவனிடம் உத்திரவைக்காட்டிவேலையை ஒப்புக்கொண் டேன். ஒருவாரம் வரையில் வேலையைப்பார்த்துவிட்டு 15நா ளைக்கு லீவு எழுதினேன். 4 நாள் முந்திதான் உத்திரவாச் சுது. உடனே அங்கிருந்து கிளம்பி அததான்ஊருக்குவந்தேன் என்றதும் அண்ணுப்பிள்ளைக்கு கிடுகிடுத்துபபோய் நம்ம இலாகாபோலீஸ் இனிஸ்பெக்டரா தாங்கள், ரொம்ப நல்லதா ச்சுது, இனி உங்களிடம் பயப்படவேண்டியதுதான் என்ருர்.

சௌந்தரராஜபிள்ளை — அவரவாகள் செய்யவேண்டிய கடைமைகளை ஒழுங்காகச் செய்தால் போலீஸ்காரர்களுக்கு ஏன் பயப்படவேண்டும்.

அண்ணுப்பிள்ளை — அப்படியல்ல, எப்படியும் போலீஸ் என்ருலே பயமாய்த்தான் இருக்கிறது, நான் உனக்கு விரோத மாளுல் வேணுமென்ருலாவது, என்பேரில் ஒரு கேசு தயார் பண்ணி விடுவீர்கள் என்ருர். சௌந்தரராஜபிள்ளை அப் படிப்பட்ட தப்பிதமான காரியத்திற்கு ஒருநாளும் நான் போகமாட்டேன், துஷ்டர்களாய் இருந்தால் ஒருநொடியில் அடக்கி விடுவேன், சாதுக்களிடத்தில் என்றும் அன்பு ப்ராட்டுவேன் என்ருர். சுவர்ணும்பாள், உங்கள் கதையும் முடிந்தது ஊர் கிட்டவே வண்டி வந்துவிட்டதுபோல் இருக்கிறது. சௌந்தரராஜபிள்ளை, ஆமாம் சாரதாம்பாள் பந்தோபஸ்த்தில் இருப்பதாகச் சொன்ளுயே, இந்தக்கடி தத்தை எப்படிக் கொடுப்பாய்.

சுவர்ணம — நான் போவதற்குமுன் என்னை அழைக்க எத்தனைபேர்கள் வந்திருப்பார்கள் வாருங்கள் காட்டுகிறேன்.

சௌந்தார் — உன்னை அழைக்கும்படி வருவானேன்.

சுவற்ணம் — உம்மை அவளிடம் வரவேண்டியதற்கு ஆனவழிகள் சாரதா செய்திருப்பாளேயொழிய வெருமையே இருக்கமாட்டாள்.

சௌந்தரர் — அப்படி அழைக்க வராவிட்டால்?

சுவற்ணம் — நானே ஏதாவது ஒன்றைச் சொல்லிக் கொண்டு போவேன்.

சௌந்தரர் — எந்த விஷயமாய் சொல்லிக் கொண்டு போவாய்.

சுவற்ணம் — தாங்கள் வந்திருப்பதாயும் சாரதாம்பாள் கலியாணத்திற்கு இனாமாக, ஒன்று கொடுக்கச் சொன்னதாயும், அதை கொடுக்க வந்தேன் என்று சொல்வேன்.

சௌந்தரர் — என்னடி பரிகாசம் பண்ணுகிறாயோ நான் சாரதாம்பாளுக்கு ஒன்றும் வாங்கிக் கொண்டு வரவில்லை என்ற வருத்தமோ?

சுவற்ணம் — பின்னே என்ன சொல்லுகிறது, சமையத்திற்குத்தக்கபடி புத்தி தோணாத பெண் ஏதோ சேத்தி.

சௌந்தரர் — உன் சாமார்த்தியத்தை இதோ பார்த்து விடுகிறேன் என்னலும், வண்டியும் பக்ஷிராஜபுரம் வந்து சேர்ந்தது. இவர்கள் வீட்டுக்குப் போனார்கள், வண்டியை விட்டு எல்லோருமாய் இறங்கினதும் பக்கத்துவீட்டு, பாகீரதியைக் கூப்பிட்டு விளக்கை கொளுத்திக் கொண்டுவரச் சொல்லி, சுவற்ணம்பாள் கதவைத்திறந்து உள்ளேபோனாள். பாகீரதி விளக்கு கொளுத்திக் கொண்டுவந்து சுவற்ணம், காலம்பரவேபிடிச்சு எங்கேடி போனே.

சுவற்ணம் — அடுத்த ஊருக்குப் போனேன்.

பாகீரதி — நீ காணும் காணுமின்னிப்பிட்டு இந்த ஊரிலே உன்னைத் தேடாத இடம்பாக்கியில்லை, நீ இல்லை இல்லை என்று கேட்கிறவாளுக்குப்பதில் சொல்லி என்தாள் அசைஞ்சுபோச்சு நன்றாயிருந்தது.

சுவர்ணம் — எதற்காக என்னைத் தேடினார்கள்.

பாகீரதி — இன்னைக்கி நிச்சியதாம்பூலம் பண்றத்துக்கு சாரதாம்பாளைக் கூப்பிட்டாளாம், தலைவாரி பின்னிக்க அதுக்கு சுவர்ணம்பாள் இல்லை. கூட்பிட்டுக் கொண்டு வந்தால் தலைவாரிபின்னிக்கிறேன், நல்லபுடவை கட்டிக்குவேன், இத்தனைநாள் அவள் என்னோடுகூடவே இருந்தவள் எனக்கு கலியாணம் வந்தபோது அவளை ஒதிக்கிவைச்சுப்பிட்டு, நான் கல்லியாணம பண்ணிக்குவேனு மாட்டேன்னூட்டாளாம். அவளம்மா அப்பா, எல்லாரும் உபசாரம் பண்ணினாளாம், கேழ்க்கமாட்டேன் னூட்டாளாம், அதுக்குத்தான் உன்னைத் தேடினு எல்லாரும்.

சுவர்ணம் — நான் ஊருக்குப்போகும் போது மாப்பிளை வல்லையே, அவரும் வந்து விட்டாரோ.

பாகீரதி — அது உனக்கு தெரியாதோ, ராத்திரியே வந்துவிட்டார். அவர் வரும்போது, பூபபல்லாக்கிலே ஏறிக் கொண்டு மேளகாரனிலே 5-6 பேரு பாண்டுவாத்தியம் மத்தாப்பாவது அடாடா, அந்த வேடிக்கையை சொல்ல முடியாது, எத்தனையோ தினுசு, பாணம் வழி நெடுக சுட்டுக் கிண்டேபோனு, ஊரு அமக்களப்பட்டது, நீ இல்லாது போய்விட்டயே எனக்குண்டோல்லையோ ரொம்ப வயித்தெரிச்சலாயிருந்தது.

சுவர்ணம் — நிச்சயதாம்பூலம் மாத்தி ஆச்சுதோ இல்லையோ.

பாகீரதி — நிச்சயதாம்பூலம் நீ வராதேயா, அதுக்குத்தான் சாரதாம்பாள் மாடேன்னுட்டாளேமே, நான் தான் சொன்லேனே.

ஏண்டி சுவர்ணம் அவனென்ன மிட்டாயி கடைக்காரனுமே ? இல்லையடி இல்லை பைத்தியமாச்சே நீ ! மிட்டாதார்.

பாகீரதி — திருத்தமாய் பாப்பாத்திமாதிரி சொல்லிப் போட்டாயோ! மிட்டாயிக்காரனுக்கும், ஏண்டி? மிட்டாயி வித்து இவ்வளவு பணம் சம்பாதிச்சுப்பிட்டானடி! நேத்திக்கு அவன்மேலே போட்டிருந்த பட்டும் பீதாம்பரமும் நகையும் பள-பளென்று, அவன் மூஞ்சிகூட தெரியலே!

சுவர்ணம் — தாறுமாறுமாய் உளராதே யாரவது கேட்டிருந்தால் உன்னை புடைப்பார்கள், மிட்டாதாரர், ஏராளமான நிலம் வைத்திருப்பவன் மிட்டாய்விற்கிறவனன்று.

சுவர்ணம்பாள் வர இல்லையென்று சாரதாம்பாள் சாப்பாடும் இல்லாமல் ஒரே வருத்தமாய், சுப்பிரமணியர் என்ன சொன்னரோ! அல்லது சுவர்ணந்தான் போய்ச் சேரவில்லையோ! வழி தெரியாமல் எங்கு தடுமாறுகிறளோ, ஒன்றும் தெரியவில்லையே! அவள் என்னோடு கூட இருந்தாலும் கொஞ்சம் தைரியமாகவாவது இருக்கும், இந்த மகா பாவிகள் கண்ணில் தென்படாமல் ஓடிவிடலாம், அதற்கும் முடியாமல் போய்விட்டதே! என்னைச் சுற்றிலும் இருக்கிறவர்கள் என்னை கொத்தி எடுக்கிறர்களே! என் தாய் தாப்பனுக்கும் என் எண்ணம் தெரியாமல், பாழும் கிணற்றில் தள்ள எத்தனித்து விட்டார்கள். இந்த பாவி மிட்டாதாரருக்கு இருக்கும் ஆஸ்தி முழுவதும் எனதன்பன், சுப்பிரமணியப் பிள்ளை என்னோடு பிரியமாய் பேசும் ஒருவார்த்தைக்கு நிகராமா? பாழும் தெய்வமே! இப்படி என்னை சோதிப்பாயா? கோபாலனுக்கு மாத்திரம் எனதுஎண்ணம் தெரியும். அவன் என்ன பண்ணுவான் அவனலானமட்டும் தடுத்துப் பார்த்தானே முடியவில்லையே, கிழவனுக்கு கொடுக்கவேண்டாமென்று எவராவது சொல்வாரில்லையே!

நகைகளையும், பீதாம்பரங்களையும் பார்த்து எனக்குக் காட்டி இதை அணிந்துகொள் என்கிறர்களே! இந்த ஆபரணங்களையும் பீதாம்பரத்தையும் கட்டிக்கொண்டு கிழவ

னுக்கு வாழ்க்கைப்படுகிறதைவிட, நகையன்றியில் கந்த லோடு எனது பிராணேசன் சுப்பிரமணியபிள்ளை யோடு வாழ்ந்தால் எத்தனையோ ஆபரணமாக எனக்கு இருக்குமே என்று சொல்லிக்கொண்டு கண்ணீர், தாரை தாரையாக சொரிய இடது கையின்மேல் தலையைவைத்து அவிழ்ந்து கிடக்கும் தலையையும் கட்டாமல், அலங்கோலமாய்ப் படுத் துக்கொண்டு, நிமிஷத்திற்கு நிமிஷம் சுவர்ணாம்பாள் வர வையே எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள்.



## ஐந்தாம் அத்தியாயம்.



உடம்பாடிலாதவர் வாழ்க்கை
குடங்கருட்பாம்போ டுடனுரைந்தற்று

மிட்டாதார் 10 வீடுகள் ஜாகாவைத்துக் கொண்டார். இவர் இறங்கின வீட்டு வாசல்களெல்லாம், கொட்டகை பந் தல் போடபட்டு, குளோபுகளும், லஸ்டர்களும், தாரோடு கூடிய வாழைகளும், கொலையோடு தேங்காய், மாங்காய் எச்சம்பழம், வாழைப்பழம், பனங்குலைகள், பூசனி, பரங்கிக் காய்கள், எதேஷ்டமாய் எங்கேயும் கட்டப்பட்டு அததற்கு காவலாளிகளும் நியமிக்கப்பட்டிருந்தார்கள். கலியாணம் செய்கிற கிருஷ்ணபிள்ளையவாள் வீட்டு, வாசலிலேயோ, சொல்லவேண்டியதில்லை ஆனைகொட்டாரம் போட்டு, மகர, தோரணங்களும், வாழைகளும் கட்டப்பட்டு வேலைகள் அனேக ஆட்களால் நடந்துகொண்டே இருக்கிறது. பகலி லேயே நிச்சயதாம்பூலம் ஆனதால் மேளவாத்தியம், மகா வித்துவான்களுக்கு தந்திகொடுத்து அவர்களும் சபைக்கு அலங்காரமாய் வந்துவிட்டார்கள். இந்த வாத்தியத்தைக் கேட்கவும் கலியாண வேடிக்கைபார்க்கவும் திரள் திரளான ஜனங்கள் வந்துக்கொண்டே இருக்கிறார்கள். சைவர்களுக்கு

வேறு, பிராமணனுக்கு வேறு, பாகசாலைகள் ஏற்படுத்தி நூற்றுக்கணக்கான பரிசாரகர்கள் சமையல் செய்கிறார்கள். கலியாணத்திற்கு சேகாம் பண்ணியிருக்கிற சமான்கள் கணக்குவழுக்கில்லை ஊர் ஊராய் இருந்து, தயிர்க்குடம், நெய்க்குடம். இலை-கறி-காய்கள் வந்துகொண்டே இருக்கின்றன. நெய் டின் மாத்திரம், 2,000 வந்திருக்கிறதென்றால் மற்ற சாமக்கிரிகளைப்பற்றி நீங்களே கணக்கிட்டுக் கொள்ளுங்கள். இது இப்படி இருக்க, மிட்டாதார் ஜோசியரைக் கூப்பிட்டு ஓய் ஜோசியரே ? நிச்சய தாம்பூலத்திற்கு லக்னம் பார்த்து வைத்தீர் என்ன வேளையில் வைத்தீரோ தெரியவில்லை தவறிப்போய்விட்டது மேல்கொண்டு வேறு லக்னம் பாரும்.

ஜோசியர் — நல்ல லக்னமாய் இதோ பார்த்து விடுகிறேன், இந்த லக்னத்தில கூட தவறு வருமா?

மிட்டாதார் — நீ கெட்டிக்காரர்தான் ஏதோ நமக்கு காலவித்தியாசம் வளருகிறது.

ஜோசியர்—இன்றைக்கே பார்த்துவிடட்டுமா? நாளைய தினம் பார்க்கலாமா?

மிட்டாதார்—நாளைக்கு பார்த்தால் எப்படி அடுத்த நாள் கலியாணம் ! ஒரு நாள் கூட நடுவில் சாவகாசம் வேண்டாமா ! நிச்சயதாம்பூலம் ஆனால்தானே நமக்குப் பெண் நிலைச்சுது.

ஜோசியர்—இன்றைக்கு லக்னம் அகப்பட்டால் நல்லதுதான், இல்லாவிட்டால் ஏதோசரிப்பட்ட மட்டில் பார்த்துகொள்ள வேண்டியதுதான்.

மிட்டாதார்—வளர்த்தாதேயும், இந்த நிமிஷமே லக்னத்தைவையும்.

ஜோசியர்—ஆத்திரக்காரனுக்கு புத்திமட்டு என்பது போல நீங்கள், சொல்லுகிறீர்கள். இந்த நிமிஷத்தில் லக்னம்

வைக்கறீங்களே, தீர்மானம் பண்ணிவிடுகிறது தானே! என் வாயால் இந்தமிஷம் தேவலேயென்று சொல்லவேண்டுமோ?

மிட்டாதார் — நீர் சமயத்துக்கு தக்கபடி செய்கிற தில்லே, எதற் கெடுத்தாலும், தாமஸம்தான் உமக்கு தொழி லாய்ப்போச்சு.

ஜோசியர் — ஆனல் எனக்கென்ன, இந்த லக்னம் தான் தேவலே, நான் அநுஷ்டானத்திற்கு போய்ச் சீக்கிரம் வரு கிறேன் அதற்குள் பெண்ணுக்கு அலங்காரம்பண்ணி ? தயா ராய் வைத்திருக்கும்படி செய்யுங்கள்.

மிட்டாதார் — ஜோசியரை போகச் சொல்லிவிட்டு சம் மந்தி பிள்ளேயவாள் வீட்டுக்குப்போய் நிச்சயதாம்பூலம் ராத் திரி 8-மணிக்குள் செய்ய வேண்டுமாம், சாரதாம்பாளே மத்தி யானம் தவக்கப்படித்தினதுபோல இல்லாமல் தயாராய் இரு க்கும்படி நான் சொன்னதாக சொல்லிவிட்டு வாரும் என்று தனக்கு விகிதமான ஒரு மனுஷனே அனுப்பினர். அவர் போய் சங்கதிகளே கிருஷ்ணப்பிள்ளேயிடம் தெரியப்படுத்த அவர் சுவர்ணம்பாளே இன்னம்காணும் அவள்வந்தால் தான் சாரதாம்பாள் எழுந்திருப்பாள் போல் இருக்கிறது எங்களால் ஆனமட்டும் பார்த்தோம் முடியவில்லே, நாளேக்கு தான் ஆகவேண்டுமென்று மாப்பிள்ளேயவாளிடம் சொல்லி விடும் என்ருர். இவர் உடனே திரும்பி வந்து மிட்டாதார ரிடம் சங்கதிகளேச் சொன்னதும் நாளேக்கு அவள் வராமல் போனல் கலியாணம் செய்கிறதில்லேயோ! சாரதாம்பாள்! இந்தக்குட்டி! இதற்கு எவ்வளவு பிடிவாதம், நான் நேரே போய் காரியத்தை முடித்துவிட்டு வருகிறேன் என்று சொல்லி நல்ல பீதாம்பரத்தை எடுத்து கட்டிக்கொண்டார், சட்டைகளே எடுத்து போட்டுக்கொண்டார். இவர் வய தானவராதலால் பற்கள் இல்லேயே அதற்காக சீமையி லிருந்து வரவழைத்த போலிபற்களே வைத்துக்கொண்டார்,

காஷ்மீர் சால்வையை போட்டுக்கொண்டார், விரல்களுக்கு மோதிரங்கள், கடுக்கன், தாட்டுக்கடுக்கன், கைக்கு காப்பு, சங்கிலி, கால்காப்பு கூட மாட்டிக்கொண்டார், இவ்வளவு அலங்காரமும் பண்ணிக்கொண்டு நிலைக்கண்ணுடி முன்னால் நின்று பார்த்துக்கொண்டு பேஷ்! நாம்தான் லக்ஷணம்! நம்மைவிட ரூபவான் யார் இருப்பார்கள்? என்று மனதில் எண்ணிக்கொண்டு பக்கத்தில் நின்ற வேலைக்காரனைக் கூப்பிட்டு, ஏண்டா? நம்மைப் பார்த்தால் இப்பொழுது எப்படி இருக்கிறது என்று கேட்க, அவன் பெரிய உத்தியோகஸ்தர் மாதிரிஇருக்கிறது என, என்னடா சீசீ நாயே அந்தாண்டை போடா உனக்குத் தெரியுமா என் யோக்கியதை வேறொருவனைக் கேட்க அவன், ராஜா மாதிரி இருக்கிறீர்கள் என்றான் அவனையும் வைதுவிட்டு, வேறொருவனைக் கூப்பிட்டு கேட்க, சிப்பாய்மாதிரி இருக்கிறீர்கள், என்றான் இப்படி பத்து பேரைக் கேட்டுவிட்டு எல்லோரும் அவருடைய எண்ணம் போல சொல்லாமல் வேறு மாருய்ச் சொன்னதால் எல்லோரையும் வாயில் வந்தபடி வைதுவிட்டு ஒரு பரிசாரகன் தூரமாய் நின்றான், அவன் ரொம்ப குறும்புக்காரன் ஆனதால் அவனையும் கூப்பிட்டுக் கேட்க அழகான மாப்பிளை மாதிரி இருக்கிறது என்றான், கிழவன்பாடு கூக்குறலாய் போய்விட்டது, இத்தனை பேர்களுள் அவன்தான் கெட்டிக்காரன், இவனுக்குத் தெரிந்த புத்தியில் 1,000 த்தில் ஒன்றுகூட இந்தப் பசங்களுக்குக் கிடையாது என்று சொல்லி அவனைக் கூப்பிட்டு அவனுக்கு வேண்டிய வெகுமானம் கொடுத்துவிட்டு நீ பரிசாரக வேலை செய்ய வேண்டாம் என்னோடு கூடவே இரு என்று உத்தரவு கொடுத்துவிட்டார். உடனே சற்றுயோசித்து நாம் முதல் முதல் வெறுங்கையோடே அந்தப் பெண்ணை பார்க்கப்போகலாகாது, நம்மை பார்த்து சந்தோஷப்படப் போகிறாள், தடையே இல்லை, நான் சொல்வதை யெல்லாம் கேட்பாள், எனக்கு என்ன நகைகொண்டு

வந்திருக்கிறீர்களென்று கேட்டால் அப்பொழுதா விழிக்கிறது? நம்மிடம் இருக்கிற கல்விழைத்த மகரி, அதைக் கொண்டுபோய் கொடுக்கவேண்டும் என்று தீர்மானித்து பெட்டியைத் திறந்து எடுத்துக்கொண்டார். 10 பேர் பரிவாரங்களோடு கிளம்பிவிட்டார். மாமனார் கிருஷ்ணப் பிள்ளை ஜாகைக்கு இவர் போனதும், அங்கே வரவேணும் வரவேணும் என்று கும்பிடு போடுகிறவர்களும் எழுந்திருக்கிறவர்களும், காலில் விழுகிறவர்களும் மிட்டாதாரரைப் பார்த்து ஓடுகிறவர்களும், நான் நன்றாய்ச் செய்கிறேன் நான் செய்கிறேன் என்று பரந்துகொண்டு, வேலைக்காரர்கள் ஓடி ஆடி வேலை செய்வதையும், பூரிதக்ஷணை வாங்கவந்திருக்கிற பிராமணர்கள் மிட்டாதாரவாள் மகா க்ஷேமமாய் இருக்க வேணும் சீக்கிரம் புத்திரோத்பவமாக வேணும் என்று இரண்டு கையையும் தூக்கி தலையை கால்வரையில் குனிகிறவர்களும், இவ்வளவு மரியாதையோடு வீட்டுக்குள் சென்றார். சென்றதும், பெரியவர் தனது மைத்துனனைக் கூப்பிட்டு அந்த பெண் எங்கே? நானே நேரில் சொல்லி நிச்சய தாம்பூலத்திற்கு அழைக்க வந்தேன் உங்கள் எல்லோராலேயும் தான் முடியவில்லை, எங்கே இருக்கிறாள் என்று கேட்க, மேல் மெத்தையின்மேல் இருக்கிறாள் தாங்கள் குசாலாய்ப் போங்கள் என்றான்.

கோபாலன், தன் தகப்பனை நோக்கி சாரதா அவனைப் பார்க்காவிட்டாலும் ஏதோ நினைத்துக்கொண்டு ஒருசமயம் கலியாணம் செய்துகொண்டாலும் கொள்ளலாம் அவன்மூஞ்சிக்கும், நரைத்த சிண்டுக்கும் வாழ்க்கைப்படமாட்டாளோ! என்றான். பெரியவர் கோபாலா? இந்த கலியாணத்திற்கு எத்தனைப்பட்ட நாள்முதல், நீ கலகமே பண்ணுகிறாய் அவனுக்கு பிள்ளைகுட்டி இல்லை ஏராளமாய் சொத்துக்கிடக்கிறது கலியாணத்தை பண்ணிக் கொடுத்தால் சொத்தெல்

லாம் நமது தானே? உனக்கு ஒன்றும் தெரியாதவனாய் சிறு பிள்ளையாய் இருப்பாயா? வேறு யாராவது கிழவன் அப்படி இப்படி என்று ஏதாவது சொன்னால் நீ சமாதானம் சொல்ல வேண்டியிருக்க நீயே கூட்டம் கூட்டிக்கொண்டு கேலி பண்ணுகிறாயே! முட்டாளே போ என்றார். கோபாலன் அவன் சொத்து எல்லாவற்றையும் ஒரே அடியாய் நெருப்புவைத்துக் கொளுத்திப் போடுகிறேன் பார்! என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். கிழவன் மாடிப்படியின்மேல் தட தட என்று ஏறினார், உயரமாய் மேலே ஏற ஏற, கால் தடுமாறிற்று, படி தடிக்கிவிட்டது, திடீரென்று கீழே சாய்ந்து விட்டார், பக்கத்தில் நின்றுயிருந்தவர்கள் தாங்கிக்கொண்டதால் மண்டை உடையவில்லை; அடித்தொடையில் கனத்த அடி, ஆனால் காயம்மாத்திரம் இல்லை; கிழவனுக்குவலிதாங்க முடியவில்லை; ஐயோ! அப்பா! என்று திணறிக்கொண்டு உயரப் போனார். சீக்கிரமாய் ஒருநாற்காலிக கொண்டுவந்து போட்டார்கள், கிழவர் அதில் உட்கார்ந்தார், ஆசுவாச மாறுகிறதற்கு இரண்டு நாழிகை ஆச்சுது.

தரையில்படுத்திருந்த சாரதாம்பாள் ஏதோ சந்தடிகேட்கிறதே என்ன என்று ஜன்னல் வழியாய் எட்டிப்பார்த்தாள். ஒரு கிழவன் உடகார்ந்திருப்பதையும் நாலுபேர் அவனுக்கு சிசுரூஷை செய்வதையும் பார்த்து ஓகோ! இவன்தான் நம்மை கலியாணம் செய்யவந்த பிரபுபோல் காண்கிறது. இவன் என்னை சமாதானப்படுத்தி அழைத்துப் போக வந்திருக்கிறான், நல்லது இவனை நான் கொஞ்சத்தில் விடுகிறதில்லை, எல்லாம் சரிதான் எதுவேணுமோ அது செய்வேன் என் அஞ்சுவர் வந்து விட்டதாகத்தெரிந்தால் அல்லவோ எனக்கு தைரியம் உண்டாகும்! இல்லாவிட்டால் என்தலையில் எழுதின எழுத்துபபோல் ஆகிறது என்று விபசனப்பட்டுக் கொண்டே மறுபடியும் தரையில் படுத்துக்கொண்டாள்.

கிழவர் — ஆசுவாசமடைந்து, எழுந்து 8 மணிக்குள் நிச்சியதாம்பூலம் முடிந்துவிடவேணுமே என்ற எண்ணத்துடன் சாரதாம்பாள் படுத்திருக்கும் அறைக்குப்போய் அவள் படுத்துக்கொண்டிருப்பதைப் பார்த்து அம்மா! அம்மா! சாரதாம்பா! எழுந்திரு என்றதும்,

சாரதாம்பாள் — யாரது கூப்பிடுகிறது?

மிட்டாதார் — நான்தான் சக்கராப்பட்ட ஜமீன் முருகப்பிள்ளையவாள், உன்னை நிச்சியதாம்பூலத்திற்கு அழைக்க நேராகவே வந்து விட்டேன்!

சாரதாம்பாள்—ஜமீன்தாரவாளுடைய அந்தஸ்தென்ன கௌரவமென்ன அவர் என்னை லக்ஷியம்பண்ணி வருவாரோ?

ஜமீன்தாரர்—இல்லை என் அந்தஸ்துக்கு நான் வரமாட்டேன்தான், நீ யாரோ வரவில்லை யென்று வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறாய் என்று கேள்விப்பட்டேன், அதை சமாதானப்படுத்தி அழைத்துப்போகத்தான் நேரில்வந்துவிட்டேன்.

சாரதாம்பாள் — அப்படியா! ரொம்ப சந்தோஷம்!! என்ன உடம்பெல்லாம் வியர்த்துப்போய் அதிக சிரமப்பட்டவாளாய் காண்கிறதே?

ஜமீன்தார் — இல்லை வரும்பொழுது படி தடுக்கிவிட்டது அதுதான்.

சாரதாம்பாள் — ஐயோ பாவம்! கிழவர் தள்ளாத வயசு! மெத்தைபடி ஏறமுடியுமா! கீழே நின்று கொண்டு சொல்லி அனுப்பினால் ஓடி வருகிறேன், அதற்காக பெரியவாள் இவ்வளவு சிரமப்படுவானேன்!

ஜமீன்தார் — அப்படிக்கென்ன எனக்கு உடம்பெல்லாம் தளர்ச்சி அடைந்திருப்பதைப் பார்த்து வயசு ஆய்விட்டதுபோல் தெரிகிறது, இன்னம் 38-வயது பூறாக ஆகவில்லை.

சாரதாம்பாள் — நான் அப்படித்தான் கேழ்வைப்பட்டேன் மூன்றை அடித்து - எட்டோடு சுன்னம் சேர்த்து விடவேண்டுமென்று.

ஜமீன்தார் — தவிர உன்னை கலியாணம் பண்ணவேண்டிய விஷயத்தில் ஒருமாசமாய் விசாரம். ஆகாரம் கிடையாது நித்திரை இல்லை. அதனால் தான் பாதி இளைப்பு.

சாரதாம்பாள் — இப்பொழுது என்னைக் கல்லியாணம் பண்ணுவது என்ன உத்தேசமோ?

ஜமீன்தார் — முதல் இரண்டுதாரம் கலியாணம் பண்ணினேன். சந்ததியில்லை. காசிக்குப்போனேன், ராமேசுவரம் போனேன், ஸ்ரீரங்கத்தில் ஆயிரக்கால் மண்டபத்தில் போய் இரண்டாந்தாரம் கலியாணம் பண்ணினவளை படுத்துக் கொள்ளச் சொன்னேன், நாகூர் வாசலில் போய் படுத்துக்கொள்ளச் சொன்னேன், ஸர்ப்ப சாந்தி பண்ணினேன், கடைசியிலே அவளுக்கு 50 வயசு ஆய்விட்டது. போனவருஷத்தில் இறந்துபோய்விட்டாள். பிறகு கெட்டிக்காரர் ஒருவர் ஜோசியர் வந்தார், அவரிடம் ஜாதகம்காண்பித்தேன், அவர் நடந்ததெல்லாம் உள்ளதுபோல் சொல்லிவிட்டார். கடைசியாக இன்னொரு பெண்ணை கலியாணம் பண்ணினால் குழந்தை கட்டாயமாய் பிறக்கும் என்றார். அந்த ஆசை தான் ரொம்ப ரொம்ப இருக்கிறது. எத்தனையோபேர் பெண்கள் நான் கொடுக்கிறேன் நீ கொடுக்கிறேனென்று வேண்டியது வந்தது.. இந்தச் சமயத்தில் உன் தகப்பனாரும் வந்தார். நீயும் அதிக லக்ஷணமுடையவள் என்று வெகு நாளாய் கேழ்வி, உன்னிடத்திலேயே ஒரு பிரமை எனக்கு உண்டு. அதன் பேரில் சரிதான் என்று சொல்லி முகூர்த்தம் முதலானது வைத்துக்கொண்டது, எனக்கு எதேஷ்டமாய் பூமி இருக்கிறது, திரவியங்களும், நகைகளும், கணக்கு வழக்கில்லை. யானை 4 வாங்கி யிருக்கிறேன்

100 குதிரை இருக்கிறது. தோட்டத்தில் மாத்திரம் 1000-த்திற்கு மேல் இருக்கும், ஒவ்வொரு தோட்டத்திலும், பங்களா கட்டியிருக்கிறேன், ஒன்றும் குறைச்சல் இல்லை, ஒரு பயல் இருந்துவிட்டால், குதிரை ஏறுவானே, ஆனை ஏறுவானே, என்று ஓயாது ஏக்கமதான் எனக்கு, நீதான் இவ்வளவு ஆஸ்திக்கும் குடுத்து வைத்தவள், உனக்கு குழந்தையும் பிறக்கும், மஹாராஜியாய் வாழலாம, நிச்சயதாம்பூலம் பண்ண, இந்த லக்னமே பார்த்திருக்கிறேன் எழுந்திரு போகலாம் என்றார்.

சாரதாம்பாள் — என்ன ரொம்ப அவசரமாய்க் காண்கிறதே? நான் தங்களைக் கல்லியாணம் பண்ணிக்க சொன்னதாய் முடிந்து போய்விட்டது, இனி என்ன நிச்சயதாம்பூலம் நாளைக்குத்தான் செய்கிறதுதானே !

ஜமீன்தார் — அது சரியா ? மறுநாள் கலியாணம் முதல்நாள் நிச்சயதாம்பூலமா ? நன்றாக இல்லையே.

சாரதாம்பாள் — பிராமணாள் மாதிரி, முதல் நாள் இராத்திரி செய்கிறதுதான் நல்லது, தங்களுக்கு சூத்திர சம்பரதாயப்படிதான கொண்டாடவேணும், நல்லது மூத்தாள் செத்து எத்தனை வருஷம் கழித்து இளையாளை கலியாணம்

ஜமீன்தார் —2-வருஷத்திற்கெல்லாம்.

சாரதாம்பாள் — மூத்தாள் செத்துப் போகிறபொழுது அவளுக்கு எத்தனை வயது?

ன்— அதிபால்யம் 18-வயதுகூட இல்லை.

சாரதாம்பாள்— தங்களுக்கும் மூத்தாளுக்கும் எத்தனை வயது வித்தியாசம்?

ஜமீன்தார் — 4 வயது.

சாரதாம்பாள் — தங்களுக்கு எத்தனை வயது என்று இப்பொழுது சொன்னீர் ?

ஜமீன்தார்—வள்ளிசா—38, 39 தான் ஆச்சுது.

சாரதாம்பாள் — சரிதான் நான் முதலில் உத்தேசமாய் சொன்னது தப்பு, அதில் ஆறுவயது குறைக்க வேண்டியது தான்.

ஜமீனதார — நம்ம வழக்கப்படி நிச்சய தாம்பூலம், முகூர்த்தத்திற்கு 10 நாள் முந்தித்தான பண்ண வேண்டியது. நீ சிறியவள் உனக்குத் தெரியாது புறப்படு போகலாம்.

சாரதாம்பாள — தாங்கள் என்னைப் பார்க்கத் தள்ளாடத் தள்ளாட வந்தீர்கள! உங்களோடு இரண்டு நாழிகையாவது பேசவேண்டும் என்ற ஆசை அதிகமாய் இருக்கிறது நாம் இப்பொழுது போகவேண்டாம்.

ஜமீன்தார் — ஆனால் நாளைக்கு நிச்சய தாம்பூலம் செய்கிறது நிச்சயம் தானே ?

சாரதாம்பாள் — தடையென்ன நாளையராத்திரி 8-மணிக்குமேல் அவசியமே செய்து விடுங்கள். என் தாத்தா பல் எவ்விடமிருந்து வரவழைத்தீர்கள் ? வெகு அழகாக இருக்கிறதே !

ஜமீன்தார் — நான் கொஞ்சநாள் முந்தி மருந்து சாப்பிட்டேன் பாபிப்பயல் வைத்தியன் மருந்தைக்கொடுத்து பல்லை உதிர்த்துவிட்டான். அதனால் அதிக சங்கடமாய் இருந்தது. சீமைக்கு எழுதி தருவித்தேன்.

சாரதாம்பாள் — தலைக்குட்டை அவிழ்ந்து போயிருக்கிறதே! நான் கூட எங்கண்ணு கோபாலனுக்கு தலைகுட்டை செவ்வையாய் கட்டிக்கொடுப்பேன், அப்படி அவிழ்ந்து விடும்படியாகவா கட்டுகிறது.

ஜமீன்தார் — அவிரவில்லையே! என்று தலையில் இருக்கும் குட்டையை கையில் எடுத்தார்.

சாரதாம்பாள் — தலைமயிர் என்ன வெளுத்து இருக்கிறது, எனக்கு நல்லதுதான் ஒரு கூத்வாக்கிற்கு ஒருவெள்ளி கொலுசு செய்யலாம்

ஜமீன்தார் — இல்லே அம்மா! பித்தநரையே யொழிய வயதாய்விட்டதற்கு அடையாளமான நரை அல்ல!

சாரதாம்பாள் — மணக்கோலம் செய்துகொள்ள இவ்வளவுதான் தெரியும் போல் இருக்கிறது. முந்தியே என்னிடம் வந்தால் நான்திறமாய் அலங்காரம் பண்ணிவிடுவேனே!

ஜமீன்தார் — உனக்கு பாடத்தெரியுமோ? நிச்சயதாம்பூலம்தான் நின்றுவிட்டது, அதையாவது கேட்கிறேன்.

சாரதாம்பாள் — பாடுவேன் தாங்கள் என்னோடு நலங்குக்கு உட்காருவீர்களே! அதை இப்பொழுதே பாடிவிடட்டுமா?

ஜமீன்தார் — பாடு பாடு கேழ்ப்போம்!

சாரதாம்பாள் — பாட்டு.

அலங்காரமணைபோட்டு-கிழவருக்கு ஆணிமுத்து பந்தலிட்டு
பந்தலிலே நலங்கிடும் பாவிகளை-பார்க்கலாமோ!

ஜமீன்தார் — சபாஷ் சாரதாம்பா! சபாஷ்! நீ பாடிய பாட்டிற்கு - இந்தா இதைப்பிடி கல்லிழைத்த மகரி!

சாரதாம்பாள் — வேண்டாம் தாங்களே வைத்துக் கொள்ளுங்கள், சுபகாலத்திலன்று கொடுக்கவேணும், இப்பொழுது நீங்கள் கொடுக்க நான் வாங்கலாகாது.

ஜமீன்தார் — மேலே பாடு கொஞ்சம்.

சாரதாம்பாள் — பாடு கிழவா உனக்கென்ன இழவா
அட குடிகெடுக்க வந்தாயோடா அடா கிழவா?

ஜமீன்தார் — என்ன பரிகாசம் பண்ணுகிறாயோ?

சாரதாம்பாள் — இல்லை இல்லை தாதா, கிழவன் பாட்டு நினைப்பு வந்தது அதைப் பாடினேன்.

ஜமீன்தார் — தாத்தா என்றாயே நான் என்ன கிழவனா?

சாரதாம்பாள் — இல்லை உங்களுக்கு காலா காலத்தில் குழந்தைகள் பிறந்திருந்தால் என்னைப்போல் எத்தனை பேரன் பேத்திகள் இருப்பார்கள் அப்படிக்கில்லாமல் இருக்கிறீர்களே என்ற விசனத்தால் கூப்பிடுகிறேன். நாழி ஆய் விட்டது என் பிரிய தோழி சுவற்ணாம்பாள் வரயில்லை எங்கேயோ போய்விட்டாள். அவள் வராமல், நான் சாப்பிடப்போகிறதில்லை அவள் வராததுக்கம் தங்களிடம் பேசிக் கொண்டிருந்ததில் சற்று ஆறி இருந்தேன். அவள் வீட்டில் இருக்கிறாளா என்று பார்க்கச் சொல்லுங்கள். மெள்ள மெள்ள இறங்கிப்போங்கள். அடே! இந்த ஷேட்டை எடுத்துக்கொண்டு ஐயாவை கையைப்பிடித்துக் கொண்டு ஜாக்கிரதையாய் அழைத்துப்போங்களடா?

ஜமீன்தார் — நான் போய் வரட்டுமா அம்மா நாளைக்கு கட்டாயம் ராத்திரி 8-மணிக்குமேல் செய்துவிட வேண்டியது. அடிக்கடி உனக்கு ஆகவேண்டிய காரியத்திற்கு எப்படி சொல்லி அனுப்புகிறாயோ அந்தப்படி நான் நடந்து கொள்ளுகிறேன். நான் போய்வரட்டுமா என்று சொல்லிக் கொண்டு கிளம்பிவிட்டார். இடுப்பில் அடி வலுவானதால் ஜமீன்தாரருக்கு எழுந்திருக்கமுடியவில்லை இருவர்கைலாகுக் கொடுக்க மெதுவாய் நாற்காலியை விட்டு எழுந்து, இந்த பாழாய்ப்படி இறங்கவேணுமே என்ற தவிப்புடன், மெள்ள இறங்கினார். இவர் வாசல்படி போனதும் வண்டியை சீக்கிரமாய் கொண்டுவரச்சொன்னார், வண்டியில்ஏறிக்கொண்டு சுவற்ணாம்பாள் வீட்டுக்கு வேறு யாரையாவது போகச்

ஜமீன்தார் — அவிரவில்லையே! என்று தலையில் இருக்கும் குட்டையை கையில் எடுத்தார்.

சாரதாம்பாள் — தலைமயிர் என்ன வெளுத்து இருக்கிறது, எனக்கு நல்லதுதான் ஒரு க்ஷவரத்திற்கு ஒருவெள்ளி கொடுசு செய்யலாம்

ஜமீன்தார் — இல்லை அம்மா! பித்தநரையே யொழிய வயதாய்விட்டதற்கு அடையாளமான நரை அல்ல!

சாரதாம்பாள் — மணக்கோலம் செய்துகொள்ள இவ்வளவுதான் தெரியும் போல் இருக்கிறது. முந்தியே என்னிடம் வந்தால் நான் திறமாய் அலங்காரம் பண்ணிவிடுவேனே!

ஜமீன்தார் — உனக்கு பாடத்தெரியுமோ? நிச்சய தாம்பூலம்தான் நின்றுவிட்டது, அதையாவது கேட்கிறேன்.

சாரதாம்பாள் — பாடுவேன் தாங்கள் என்னோடு நலங்குக்கு உட்காருவீர்களே! அதை இப்பொழுதே பாடிவிடட்டுமா?

ஜமீன்தார் — பாடு பாடு கேழ்ப்போம்!

சாரதாம்பாள் — பாட்டு.

அலங்காரமணைபோட்டு-கிழவருக்கு ஆணிமுத்து பந்தலிட்டு
பந்தலிலே நலங்கிடும் பாவிகளே-பார்க்கலாமோ!

ஜமீன்தார் — சபாஷ் சாரதாம்பா! சபாஷ்! நீ பாடிய பாட்டிற்கு - இந்தா இதைப்பிடி கல்லிழைத்த மகரி!

சாரதாம்பாள் — வேண்டாம் தாங்களே வைத்துக் கொள்ளுங்கள், சுபகாலத்திலன்று கொடுக்கவேணும், இப்பொழுது நீங்கள் கொடுக்க நான் வாங்கலாகாது.

ஜமீன்தார் — மேலே பாடு கொஞ்சம்.

சாரதாம்பாள் — பாடு கிழவா உனக்கென்ன இழவா அட குடிகெடுக்க வந்தாயோடா அடா கிழவா?

ஜமீன்தார் — என்ன பரிகாசம் பண்ணுகிறாயோ?

சாரதாம்பாள் — இல்லை இல்லை தாதா. கிழவன் பாட்டு நினைப்பு வந்தது அதைப் பாடினேன்.

ஜமீன்தார் — தாத்தா என்றாயே நான் என்ன கிழவனா?

சாரதாம்பாள் — இல்லை உங்களுக்கு காலா காலத்தில் குழந்தைகள் பிறந்திருந்தால் என்னைப்போல் எத்தனை பேரன் பேத்திகள் இருப்பார்கள் அப்படிக்கில்லாமல் இருக்கிறீர்களே என்ற விசனத்தால் கூப்பிடுகிறேன். நாழி ஆய் விட்டது என் பிரிய தோழி சுவற்ணம்பாள் வரயில்லை எங்கேயோ போய்விட்டாள். அவள் வராமல், நான் சாப்பிடப்போகிறதில்லை அவள் வராததுக்சம் தங்களிடம் பேசிக் கொண்டிருந்ததில் சற்று ஆறி இருந்தேன். அவள் வீட்டில் இருக்கிறாளா என்று பார்க்கச் சொல்லுங்கள். மெள்ள மெள்ள இறங்கிப்போங்கள். அடே! இந்த ஷேட்டை எடுத்துக்கொண்டு ஐயாவை கையைப்பிடித்துக் கொண்டு ஜாக்கிரதையாய் அழைத்துப்போங்களடா?

ஜமீன்தார் — நான் போய் வரட்டுமா அம்மா நாளைக்கு கட்டாயம் ராத்திரி 8-மணிக்குமேல் செய்துவிட வேண்டியது. அடிக்கடி உனக்கு ஆகவேண்டிய காரியத்திற்கு எப்படி சொல்லி அனுப்புகிறாயோ அந்தப்படி நான் நடந்து கொள்ளுகிறேன். நான் போய்வரட்டுமா என்று சொல்லிக் கொண்டு கிளம்பிவிட்டார். இடுப்பில் அடி வலுவானதால் ஜமீன்தாருக்கு எழுந்திருக்கமுடியவில்லை இருவர் கைலாகுக் கொடுக்க மெதுவாய் நாற்காலியை விட்டு எழுந்து, இந்த பாழும்படி இறங்கவேணுமே என்ற தவிப்புடன், மெள்ள இறங்கினார். இவர் வாசல்படி போனதும் வண்டியை சீக்கிரமாய் கொண்டுவரச்சொன்னார், வண்டியில்ஏறிக்கொண்டு சுவற்ணம்பாள் வீட்டுக்கு வேறு யாரையாவது போகச்

சுவற்ணம் — ஜமீன்தாரவாளை பார்த்தாயோ?

சாரதாம்பாள் — ஐயோ சுவற்ணம்! வீணாக வளத்து கிறாயே! நீ சொல்லாவிட்டால், எனக்குகோபம்வந்து விடும்.

சுவற்ணம் — நீ கோபித்துக்கொள் நான் வீட்டுக்குப் போய் வருகிறேன், கையைவிடு.

சாரதாம்பாள் — உனக்கு என்னிடத்தில் கோபம் வருமா? உனக்கு நமஸ்காரம் பண்ணுகிறேன், சங்கதியைச் சொல்லென்றாள்.

சுவற்ணம் — எனக்கு நமஸ்காரம் பண்ணினால் கிழ வனுக்கு வாழ்க்கைப்பட்டு சௌக்கியமாய் இருயென்று ஆசீர்வாதம் பண்ணுகிறேன்.

சாரதாம்பாள் — என் பிராணபதியைக் கண்டாயா? இல்லையா? அவர் என்ன சொன்னார், என்னிடம் சீக்கிரம் வந்து என்னை கைப்பற்றுவரா? என் மனது துடிக்கிறதே!

சுவற்ணம் — அவாள் அவாள் காரியம் அவாள் அவா ளுக்குத்தான். நான் எப்படிப்போனால் என்ன அம்மா. நீ வெளியூர்கள் போயிருந்தாயே, உன்புருஷன் சமாசாரம் ஏதாவது கேள்விப்பட்டாயா? என்று கேழுக்க இஷ்ட மில்லை. தன்காரியத்தையே பெரிதாகப் பேசுகிறாய், எப்படி யாவது நீ க்ஷேமமாய் லக்ஷணமான புருஷரோடு லக்ஷ்மி மாதிரி வாழ்ந்தால் எனக்கு சந்தோஷந்தான்.

சாரதாம்பாள் — 10-வருஷமாய் உன்னைவிட்டுப் போன புருஷர் உன்னிடம்வந்து, நீங்கள் சந்தோஷமாய் வாழ்ந்து கொண்டிருப்பதை நான்பார்த்து சந்தோஷித்து களிக்க போகிறேனா, அப்படியும் நீங்கள் இருப்பதை சீக் கிரம் நான்பார்ப்பேன், உன் புருஷன் விஷயமாய் ஏதாவது விஷயங்கள் நீ கேழ்விப்பட்டு எனக்குச் சொன்னால், எனக்கு எவ்வளவோ திருப்தியாகத்தான் இருக்கும்.

சுவற்ணம் — என் புருஷர் வந்து விட்டார் அவர் என் வீட்டில் இருக்கிறார்.

சாரதாம்பாள் — நிஜந்தானு வந்து விட்டது! நான் இப்பொழுது உன வீட்டிற்கு வந்து பார்க்கட்டுமா? எனக்கு அவர் முகங்கூட மறந்து போய்விட்டதே! ஒரு வேளை நீ பொய் சொல்லுகிறாயோ என்னமோ.

சுவற்ணம் — உன்னிடம் பொய் சொல்லுவானேன், வாஸ்தவந்தான் வந்துவிட்டார். உனது பிரியன் நாளைய தினம் வரப்போகிறார்.

சாரதாம்பாள் — உன் புருஷனை எங்கேயாவது கண்டாயா அல்லது அவர் தானே வந்துவிட்டாரா?

சுவற்ணம் — சுப்பிரமணிய பிள்ளை எப்பொழுதும் உன்னினைவாகவே இருந்தாராம், உன் சமாசாரம் வர இல்லையே என்று ஏக்கம அவருக்கு அதிகமாக இருந்ததாம், அந்த சமயத்தில் என்னைக் கூட நினைத்துக்கொண்டாராம்.

சாரதாம்பாள் — அது இருக்கட்டும், உன்புருஷர் இத்தனை நாளாய் எங்கேபோய் இருந்தாராம்? உடம்பு இளைத்துக் களைத்து வந்திருக்கிறாரோ?

சுவற்ணம் — நீ கொடுத்த காகிதத்தை சுப்பிரமணிய பிள்ளையவாளிடம் கொடுத்தேன். அவர் அதைப் பிரித்துப் பார்த்து எங்களுக்கு அக்கிரகாரத்து ஐயர் வீட்டில் விருந்து பண்ணினர், சாப்பிட்டோம்.

சாரதாம்பாள் — எங்களுக்கு என்கிறாயே, உன் புருஷரும் கூடவந்தாரோ? அவரைப் போகும் வழியிலேயே சந்தித்து விட்டாயோ?

சுவற்ணம்—நாங்கள் சாப்பிட்டபிற்பாடு ரொம்பதேச, காலம் பேசிக்கொண்டிருந்தார், வண்டியை கட்டிக்கொண்டு

ஊருக்கு வரும்பொழுது, நடந்தே எங்களோடு சற்றுதூரம் வந்தார். எங்களை அனுப்பிவிட்டு எங்கள் வண்டி மறைகிற வரையில் அங்கேயே நின்றுகொண்டிருந்தார். உனக்கு ஒரு காகிதமும் எழுதிக்கொடுத்தார். இந்தா இவ்வளவு தான் விசேஷம், நான் அதிகநாழி உன்னோடு பேசிக்கொண்டிருந் தாலும் உன் அண்ணு பெரியவர், ஏதாவது கோபித்துக் கொண்டாலும் கொள்வார். நீ சாப்பிடாமல் பட்டினியாய் இருக்கிறுயாமே! சாப்பிடுபோ, நான் வீடுபோகிறேன்.

*சாரதாம்பாள்* — உன் புருஷர் உன்னைக்கண்டதும் எங் கேபோகிறுய், இங்கு ஏன் வந்தாய் என்று கேட்டாரோ?

*சுவர்ணம்* — ஆம் கேட்டார், உன் காரியமாய்த் தான் புறப்பட்டு வந்தேன் என்று சொன்னேன்?

*சாரதாம்பாள்* — என் அன்பான தோழியே? நீ போனது முதல் சாப்பாடு கூட இல்லாமல் நீ வழிதெரிந்து போனுயோ? எங்கேயாவது வழிதெரியாமல் தவிக்கிறுயோ? எனக்காக சிரமப்படுகிற உனக்கு நான் என்ன உதவிபுரியப் போகிறேன் என்று உன் வரவையே எதிர்பார்த்திருந்தேன், ஜமீன்தார் இங்கே வந்தார்; அவர் வரும்பொழுதே உன் விசாரம் தான், சற்று தேசகாலம் கிழவனோடு வம்பாடிக் கொண்டிருந்தேன், அதில் கொஞ்சம் விசாரம் மறைந்து இருந்தது. மறுபடியும் உன் நினைப்பு வந்துவிட்டது, அப் படியே அழுதுகொண்டு உன்னைப் பார்த்துத்தான் சாப்பிடு கிறது, இல்லாதவரையில் பிராணனை விடுகிறதென்றே நிர் மானித்து படுத்துக்கொண்டேன், எத்தனையோ பேர்கள் வந்து உபசாரம் பண்ணினுர்கள், நான் ஒன்றையும் கவனிக்க வில்லை, சுவர்ணம்! நீயும் உன்புருஷன் வந்தார் என்ற நல்ல சமாசாரத்தோடு, எனக்கும் நல்ல சேதிகொண்டுவந்தாய்! இனிமேல் நான் என்ன செய்கிறது அதையும் நீ யெனக்கு யோசித்துச் சொல்லவேண்டும், உனக்கு நாழிகை ஆய்விட்

டது, உன் புருஷர் உன்னைக்காணு மென்று காத்துக் கொண்டிருப்பார். எனக்கும் பசிக்கிறது நான் சாப்பிடப் போகிறேன் என்றாள்.

சுவற்ணம் — சாரதா நீ மசா நல்லவள். உன் காரிய மாய் புறப்பட்டுப் போனதால் தான், எனக்கு பதி கிடைத் தார் என்று தான் போனதுமுதல் நடந்தவிர்த்தாந்தத்தை எல்லாம் ஒன்று விடாமல் சொன்னாள். அதைக்கேட்டு சார தாம்பாள், சில சமயங்களில் துக்கித்தும, சுவற்ணத்தின் கெட்டிக்காரத்தனத்திற்கு சந்தோஷப்பட்டும், இப்படியாக இருவர்களும் ராத்திரி 12-மணிவரையில் பேசிக்கொண் டிருந்தார்கள். உன்புருஷரோடு நாளைகாலையில் இங்கே வர வேண்டும் என்று சொல்ல அப்படியே வருகிறேன் என்று சாரதாம்பாளிடம் சொல்லிக்கொண்டு தன் வீட்டிற்குத் திரும்பிப் போய்விட்டாள்.

சாரதாம்பாள் — தன் வேலைக்காரியைக் கூப்பிட்டு சீக்கிரம், எனக்கு சாப்பாடு கொண்டுவரச்சொல்லு, என்று சொல்லி அனுப்ப, அவள் உடனே கீழே இறங்கிப்போய் சாரதாம்பாள் தாயாரிடம் சொன்னாள். அவள் வேண்டிய ஆகாரங்களை தாதிகள் வசம் எடுப்பித்துக்கொண்டுபோய், சாரதாம்பாளுக்கு போட்டார்கள்.

சாரதா! ஜமீன்தார் இங்கு வந்துவிட்டுப்போனபிறகு தான் உனக்கு சந்தோஷம் வந்ததுபோல் இருக்கிறது! என்று தாயார்கேட்க, சாரதாம்பாள் பணக்காரராய் எனக்கு மாப்பிள்ளைதேடினயே அவரைப்பார்த்து உடம்பு பூரித்துப் போய் விட்டது! எனக்கு உங்களைபோல் உதவிபுரிய யார் இருப்பார்கள்! என்னமோ அவருக்கு வயசாய் விட்டது என்று நீ நினைப்பாய். சீக்கிரம் வருகிற வருஷத்திற்கெல்லாம் ஒரு பூச்சி உன் வயற்றில் உண்டானல் அப்புறம் உனக் கென்ன குறைச்சல், என்று அவள் தாயார் சொல்லிவிட்டுப்

போய் விட்டாள். சாரதாம்பாள் சாப்பிட்டு கைசுத்தி செய்துக்கொண்டு, தன் அறையில்போய் நாற்காலியில் உட்கார்ந்து ஏன் பிரபு என்ன கடிதம் எழுதி இருக்கிறரோ தெரியவில்லை என்று காகிதத்தை எடுத்துப் பிரித்துப் பார்த்து, அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்ததை வாசித்துப் பார்த்தாள்.

எனது, பிரியத்திற்கு எப்பொழுதும் பாத்திரமான சாரதாம்பாளுக்கு, எல்லாபாக்கியமும் சீக்கிரம் உண்டாவதாக அனேக ஆசீர்வாதங்கள். நீ க்ஷேமம், உன் வீட்டில் எல்லோருடைய க்ஷேமத்தையும் சுவற்ணாம்பாள் மூலமாய்கேட்டும் தந்த சந்தோஷம் அடைந்தேன். இப்பவும் உன்னை சக்கரப்பட்டி ஜமீன்காருக்கு கொடுக்க நிச்சயித்திருப்பதாய் உனது கடிதம் மூலமாய்த் தெரியவந்தது, அவர் மிகுந்த பணக்காரராக இருக்க அவரை கலியாணம் செய்துகொள்ள மாட்டேனென்று நீ எழுதினது ரொம்ப தப்பிதமான காரியம். இப்பொழுது எனக்கு என் இளையதாயாரின் சகோதரன் மகளை கலியாணம் பண்ணுவதாய் என் வீட்டில் நிச்சயத்திருக்கிறர்கள் என்றதை படித்ததும் சாரதாம்பாள் திடுக்கிட்டு காகிதத்தை கீழே எறிந்து பழிகார சுப்பிரமணியா? இப்படியா என்னை மோசம் பண்ணவேணும்! உன்னைத் தவிரவேறு ஒருவரையும் என்னுயுசுக்கும் நான் எதிர்பாரேன் என்று என்னிடம் சென்னையில் பிரமாணம் செய்தாயே துரோகி! உன் லெட்டரை மேற்கொண்டு பார்க்க திருப்தி இல்லை, புருஷர்களை ஒருக்காலும் நம்பலாகாது என்பது எனக்குத்தெரியும், என்றாலும் உன்னிடம் வைத்த ஆசை என்மனதை விட்டு கொஞ்சத்தில் ஒழியாதே! எப்படியும் நீ வந்து என்னைக்கலியாணம் செய்து கொள்வாய் என்ற முழு நம்பிக்கை இந்த க்ஷணம் வரையில் வைத்திருந்தேன், தவிர, பழிகாரி எனக்கு அதிக பிரியமான தோழி என்று, பேர் வைத்துக் கொண்டு நாளை தினம் கட்டாயம் வருவார்

உன்னை அழைத்துப்போவார் என்று தைரியம் சொல்லி என்னையும் சாப்பிடச்செய்து விட்டுப்போய் விட்டாளே? மகா பாபி! ஜமீன் ஏதாவது பணத்தைக்கொடுத்து, அவளை யும் கைவசப்படுத்திக் கொண்டாரோ, இவ்வளவிட்டாவைந்த உடனே சந்தோஷமாயிருந்தாளே இவ்வளவு தயங்குவானா! ஏதோபொய் சொல்லிவிட்டுப் போய்விட்டாளே! அப்பொ ழுதே இந்த காகிதத்தைப் பிரித்து வாசித்திருந்தால் அவள் பொய்யை வெளிப்படுத்துவேனே! இந்த உலகத்தில் எனக்கு உதவிசெய்ய ஒருவரும் இல்லாமல் அனாதியாய் ஆய்விட் டேனே! நான் இப்பொழுது என்ன செய்வது, வயிரப்பொடி தயாராயும் கைவசத்தில் வைத்திருக்கவில்லையே! எப்படியா வது என்பிராணனை விடவேண்டியதேதவிர வேறு வழி யில்லை ஆ தெய்வமே! என்று வாய்விட்டலறிக்கொண்டு கீழே படுத்துக்கொண்டாள். மறுபடியும் எழுந்திருந்து அடே சுப்பராமனையா! நீ பக்கத்தில் கலியாணம் செய்து கொண்டு உன் பெண்டாட்டியோடு நீ சௌக்கியமாய் இருப் பதை என் கண்ணாலாவது பார்த்துவிட்டு அப்பொழுதே இறந்துவிடுகிறேன அதற்காகவாவது என் உயிரை வைத் துக்கொள்ள வேண்டியதாய் இருக்கிறது. உன காகிதத்தை மேலே பார்க்கவும் இஷ்டமில்லை, அப்படி நான் பார்த்து ஜாஸ்தியான வியாகூலம் அடைவதை விட பார்க்காமலே இருப்பது ரொபப உத்தமமாய் இருக்கும், முழுமையும் பார்தது உன் கொடூரமான மனதையும் தெரிந்து கொள்கி றேன், எனக் கடிததத்தை பிரிப்பாள், மறுபடியும் எறிந்து விடுவாள், இப்படியாக சற்று நேரம் இருந்து கடைசியாக காகிதத்தை மேல்கொண்டு படிக்க எத்தனித்தாள்.

அவளைக்கலியாணம் செய்துகொள்ள கொஞ்சங்கூடசம் மத மில்லாதவனாய், உன்னுடைய சமாசாரத்தையே எப்பொ ழுதும் எதிர்பார்த்தவனாய் இருந்தேன். உன்விகிதம் பார்த்த

பிறகுதான் என் மனம் தெரியது. உன்னைக்கலியாணம் செய்ய வேண்டிய நிமித்தம், எனது சொத்துக்கள் யாவும் நான் விட்டுவிட வேண்டியதாய் இருக்கிறது, என்றாலும் எனக்கு பெரிதல்ல: நாளையராத்திரி 8-மணிக்குள் அவசியமே பக்ஷி ராஜபுரம் வருகிறேன், அதற்குள், நீ உருவம் மாற்றிக்கொண்டு சுவர்ணாம்பாள் வீட்டில் வந்திருந்தால் நாம் சேர்ந்து கொண்டு, கொஞ்சகாலத்திற்கு எங்கேயாவது போய்விடு வோம். அப்படிக்கல்லாமல் கட்டாயமாய் உன்னை ஜமீன் தாரவாளுக்குக் கலியாணம் பண்ணிவிடும்படி சம்பவித்தால், உனதுகலியாண வைபோகத்தை ஒரு வழிப்போக்கன் மாதிரி தூரஇருந்துப் பார்த்து விட்டு, பரதேசிவேஷம் பூண்டு தேசாந்திரம் போய்விடுகிறேன். மற்ற விஷயங்கள் நேரில் பேசிக் கொள்கிறேன்.

உனது ஆத்மார்த்த பிரியன்,
சுப்பிரமணியன்.

இந்த கடிதத்தை முழுதலும் படித்தவுடன் சாரதாம்பாளுக்கு, சந்தோஷமும், ஒருபுறம் துக்கமும் வந்தது. பார்த்தாயா! நான் என்னகாரியம் செய்துவிட்டேன், கடிதம் முழுதிலும் பார்க்காமலே எனதுபிரியனை தூஷணையாய்ச்சொல்லி விட்டேனே! என்னைப்போல் பரமசண்டாளி யார் இருப்பார்கள். உத்தமஸ்திரீகள் தன்பதியைக் கோபிப்பார்களா? தவிர எனது சகி சுவர்ணத்தையும், லஞ்சம்வாங்கிவிட்டாள் என்று, தப்பாக நினைத்துவிட்டேனே! அவள் எனக்கு செய்திருக்கிற உபசாரம், அளவு சங்கை இல்லையே! சற்று தேச காலத்திற்கெல்லாம உதவிசெய்த என் உத்தமிக்கு அபசார வார்த்தை பிறப்பித்து விட்டேனே! நான் கொடியவள்! இவ்வளவு பட படப்பு ஒருநாளும் ஆகாது! என்று சொல்லிக் கொண்டிருக்கையிலேயே, தூக்கமும் வந்து விட்டது அப்படியே தூங்கிவிட்டாள்.

சுவற்ணம் தன் வீட்டிற்குப் போனதும் தான் போய் வந்தசங்கதிகளை தன் புருஷனிடம் சொல்லிவிட்டுப் படுத்துக் கொண்டாள். காலையில் சுவற்ணம் எழுந்திருந்து வீட்டு வேலையை முடித்துவிட்டு, தன்புருஷனோடு சாரதாம்பாள் வீட்டிற்கு வந்ததும், சௌந்தரராஜப்பிள்ளையை எல்லோரும் கண்டு அவர் இத்தனை நாள் ஊரில் இல்லாத விஷயத்தைப் பற்றி கேட்க தன்னுடைய வரலாற்றை, எல்லோருக்கும் சொல்லி தான் இப்பொழுது போலீஸ் இனிஸ்பெக்டராய் இருக்கிற விபரத்தைச் சொன்னதும், எல்லோரும் சௌந்தர ராஜப்பிள்ளையிடம் அதிக பிரியத்தோடு அனுபாராட்டினார்கள். இதனால் சுவற்ணாம்பாளுக்கு உபசாரம் ஜாஸ்தி ஆய் விட்டது, பிறகு, இருவரும் சாரதாம்பாளிடம் போக, அவள் ஓடிவந்து சௌந்தரராஜருக்கு நமஸ்காரம் பண்ண, அவர் மங்களம் உண்டாகுக என்று ஆசீர்வதித்து, சாரதா, நான் இல்லாத காலத்தில் என்னுடைய சுவற்ணத்தை நீ காப்பாற்றினயே உன்னைப்போல் உதவி புரிபவர்கள் யார் இருப்பார்கள். உன்னுடைய காரியங்களை நான்கேட்டதும் வேறு இடத்தில் தங்காமல், சிவந்தனாறுக்கே போய்விட்டோம். அங்கே சுப்பிரமணிய பிள்ளையால் உபசரிக்கப்பட்டபிறகு, உன் பிரஸ்தாபத்தைப்பற்றிபேச அவர் அதிகதிருப்தி உள்ளவராய் இருந்ததோடும், இன்று ராத்திரி 8-மணிக்குள் கட்டாயம் என் வீட்டிற்கு வருவதாய் வாக்களித்தார். தற்காலம் உங்களுக்கு சற்றே சிரமமாக இருந்தாலும் கூடிய சீக்கிரம் புருஷனோடு நீ. சௌக்கியத்தை அடைவாய். சுப்பிரமணியப்பிள்ளை சாமான்னியமானவர் அல்ல, பி. ஏ. பட்டம் பெற்றவர், மகா புத்திமான். தவிர சினேகத்திற்கு பாத்திரமானவர். உன்னை ஒருநாளும் கைவிடமாட்டார், என்று சொல்ல, சாரதாம்பாள் நீங்கள் சௌக்கியமாய் வந்தீர்களே அதுவே எனக்குப் பெரிய சந்தோஷம். நீங்கள் சமயத்தில்

சுவற்ணத்திற்கு உதவிபுரியாவிட்டால் என் காரியம் எப்படி நிறைவேறும். நான் இந்த நிர்பந்தத்திலிருந்து என்ன விதமாக வெளிக்கிளம்பமுடியும். அநேகதேசகாலம்தங்களோடுபேசவும் முடியவில்லை. யாராவது அடிக்கடி வந்து விடுவார்கள் ஆகையால், எனக்கு யோசனை சொல்லிவிட்டு நீங்கள் போங்கள். சாவகாசமாய் நான் தங்களிடம் பேசிக்கொள்ளுகிறேன் என்று சொல்ல சுவற்ணம், உனக்கு இந்த வீட்டை விட்டு வெளிக்கிளம்பத் தெரியாதா? நீ தானா பிழைக்கப் போகிறாய்! ஆசை மாத்திரம் மலை அத்தனை பெரிதாக இருக்கிறது! ஒரு பெண்பிள்ளை, வீட்டை விட்டுப் போகமுடியாதா? இது ஒரு பெரிய காரியமா? என, சாரதாம்பாள், நீ அப்படித்தான் சொல்வாய், உனக்கு இந்த மாதிரிகாவல் இருந்து கிளம்பச் சொன்னால் விழிப்பாய். அப்பொழுது நீ பத்துபேரை யோசனை கேட்பாய் என்றாள். சுவற்ணம் வீண் கலவி நன்றாய் உனக்கு பேசத்தெரியும்! நான் சொல்லுகிறபடிசெய். இன்று விளக்கு வைத்து 7½-மணி சுமாருக்கு உன்தமயன் கோபாலன் உடுப்புபெட்டி திறவுகோலை எடுத்து அவர் பெட்டியில வைத்திருக்கிறசட்டை, வேஷ்டி தலைகுட்டையெல்லாம எடுத்து அணிந்துகொண்டு ஜோட்டையும் காலில் மாட்டிக்கொண்டு வெளியே கிளம்பி விடு. அப்பொழுது கோபாலனதான் போகிறான் என்று எல்லோரும் நினைத்துக் கொண்டிருப்பார்கள். மெள்ள வேறு வழியாய் போக்குக்காட்டி என் வீட்டிற்கு வந்தால் அதற்குள் சுப்பிரமணியப் பிள்ளையும் வந்துவிடுவார், மேல் ஆகவேண்டிய காரியத்திற்குப் பிறகு யோசித்துக் கொள்வோம என்றாள். மறுபடியும் உங்களை எப்பொழுது பார்க்கிறதென்று சாரதா, கேட்க, சௌந்தரராஜப்பிள்ளை அடிக்கடி நாங்கள் ஏன் வரவேண்டும்? நான் வரும்பொழுது, என்னுடைய சாமான்கள் ஒன்றும் கொண்டு வரவில்லை, அவைகள், சிங்கனூரில் இருக்கிறது. சிங்கனூர் அத்தான் அண்ணாப்பிள்ளையும் என்

ளோடு வந்திருக்கிறார். நாங்கள் நாளையதினம் அவசியமாய் போய்ச்சேர வேண்டும். வரும்பொழுது ஒருவரிடமும் சொல்லிக்கொண்டு புறப்பட இல்லை. அவர்கள் விசாரப் பட்டுக் கொண்டு இருப்பார்கள். உன் காரிய உத்தேச மாகத்தான் இங்கே இருக்கிறோம். நான் போய் வருகிறேன், நான் சொன்னபடியே செய், என்று சொல்லிவிட்டுவெளியே கிளம்பி விட்டார். சுவர்ணமும் கூடப் புறப்பட்டு விட்டாள். இவர்களும் வீடுபோய்ச் சேர்ந்தார்கள்.

கலியாணத்திற்கு வேண்டிய வைபவங்கள் இருகிறத் தார் வீட்டிலும் பலமாய் நடந்து கொண்டே இருக்கிறது. ஜமீன்தார் மத்தியானம் ஏராளமான பந்துக்கள் சிநேகிதர் களோடு நிச்சயதாம்பூலத்தை எதிர்பார்த்தவராய் அதற்கு வேண்டிய சர்க்கரை பழம் முதலியதோடு கேழ்க்கிறவர் களுக்கெல்லாம் ஏதோ மூணாவது தாரம் கலியாணம் செய்கி றேன், சீக்கிரம் குழந்தைபிறக்க ஆசீர்வாதம் செய் யுங்கள் என்றுசொல்லி, இப்படியாக ராத்திரி 7½-மணிக் கெல்லாம் அநேக சந்தனாதி தாம்பூலங்களோடும், வாத்திய கோஷங்கள் தாசி நர்த்தனங்களோடும், பிராமணர்கள் சைவர்கள் மற்றும் எத்தனையோ பேர்களின் கூட்டங்களோ டும், தீவட்டி மத்தாப்பு பாண வேடிக்கைகளோடும், திவ்ய அலங்கார பூஷிதராய் பரிமளங்கலந்தவாசனையோடு 4 குதிரை கட்டின பீட்டனில் ஏறிக்கொண்டு, நிச்சயதாம்பூலம் செய்ய பெண் வீட்டிற்குக் கிளம்பி விட்டார். அவர்கள் வருகிறார்கள் என்றது தெரிந்து, கிருஷ்ணப்பிள்ளைவாள் வீட்டில் எந்த இடங்களிலும் ஷேட்டும் குளோப்பும் கொளுத்திவைத்து, கீழே ரத்தினகம்பளம், ஜமுக்காளம், பட்டுப் பாய்முதலி யதும் பரப்பி வெள்ளிசெடிகளில் ஊதுவத்தி முதலானது கொளுத்தி வைத்து வந்தவர்களுக்கு உபசரிக்க, சந்தனம், புஷ்பஹாரங்கள், பூச்செண்டுகள், சேகரித்து அநேக

விதமான பக்ஷணங்களோடு சுமார் 1,000 பேர்களுக்கு சமையலுக்கு எத்தனம்செய்து தயாராய் ஜமீன்தார் வரவை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சாரதாம்பாளுக்கு அலங்காரம் செய்ய அனேகதாதிகள் கேட்க, நானே அலங்கரித்துக்கொண்டு சபாமத்தில்வந்துவிடுகிறேன் எனக்காக ஒருவரும இங்கே வரவேண்டாமென்று வேலைக்காரனைக்கூடப போகச்சொல்லி விட்டு இவ்வளவுகூட்டத்தில் நான் எபபடி தபபித்துக் கொண்டு வெளியே போகிறது, அப்படி நான்போகும்பொழுது என்னைக் கண்டுபிடித்து என்னைத்தடுத்தால நான் அவாகளுடன மன்றாடியாவது தபபித்துச் செலவேனென்று சொல்லிக கொண்டே கோபாலன் பெட்டியைத திறந்து தனக்கு வேண்டிய சட்டை, தலைகுட்டை முதலியனவை தரிதது,மல்லை அரையில் தட்டுச்சுத்தாய தன புடவையின்மேல் கட்டிக் கொண்டு, தன்னுருவை முழுதும நிலைக்கண்ணாடியில் பார்ததாள். நான் கோபாலன் மாதிரியாகவே இருக்கிறேன்! என்னை ஒருவரும் கண்டுபிடிக்கப் போகிறதில்லை போய் விடலாம் என்பிராணநாதனை, வந்திருக்க வேண்டுமே. வராமல் இருநதால் என்கதி எப்படியாகுமோ? எதுவேணுமோ அது வரட்டும் என் வினையை நான் அனுபவிக்காது வேறுயார் அனுபவிக்கப் போகிறார், என்று ஜோட்டை மாட்டிக் கொண்டு மாடியிலிருந்து வாசல் பக்கமாய் இறங்குகிறபடிகளின் வழியாய் கீழே இறங்கி மடமடவென்று ஜமீன்தார்சாரட்டு வருகிறபக்கமாகவே போனாள், இவள் போகுமபொழுது வழியில் கண்டவர்கள் கோபாலா! எங்கே போகிறாய் என்று கேட்ச, அடுத்த தெருவில் ஒரு சினேகர் ஒருவர் வரவில்லை அவரை அழைத்துக்கொண்டு சீக்கிரமாய் வருகிறேன் எல்லாரும போங்கள், நிச்சயதாம்பூலத்தை சிரப்பாய் நடத்துங்கள் என்றுசொல்லிவிட்டு, சற்றுதூரம்கிழக்கேபோய், அங்கு

ஒரு சந்தின் வழியாய் அடுத்தத்தெருவில் சேர்ந்து, அங்கிருந்தே கொல்லையில் பாழும் மனை இருக்கிற அடையாளம் தெரிந்தவளானதால், அதன்வழியே போய் சுவற்ணாம்பாள் வீட்டுக்கொல்லைக் கதவைத்தட்டினாள். சுவற்ணாம்பாள் ஓடிவந்து கதவை திறக்க, எனது நாதன்வந்துவிட்டாரா? என்று சாரதா கேட்க, இன்னம் வரவில்லை, வந்துவிடுவார், உள்ளேவா என்று தன் வீட்டிற்குள் அழைத்துப் போனாள். சுப்பிரமணியன் வரவை எதிர்பார்த்துக்கொண்டு வெளியே போய் பார்க்கிறதும் உள்ளே வருவதுமாக இருந்தார்கள். $8\frac{1}{2}$-மணி வரையில் பார்த்தார்கள் வரஇல்லை நான் என்ன செய்வேன் என் உடம்புபறக்கிறதே என்று சாரதா தவிக்க அவளுக்கு தைரியஞ்சொல்லிக்கொண்டு $9\frac{1}{2}$-மணிவரையில் பார்த்தார்கள் வர இல்லை. சாரதாம்பாள் அவர் நிச்சயமாய்வரமாட்டார் புறப்படமுடியாமல் ஏதோ அசந்தர்ப்பம் நேரிட்டிருக்கும் அதுவும் என்விதிவசந்தான், நான் இனி இவ்விடத்தில் அரைநிமிஷங்கூட தங்கக்கூடாது அப்படி இருப்பேனால் என்னைத் தேடிக்கொண்டு எல்லோரும் வந்து விடுவார்கள், என்னைக் கண்டு பிடித்துக்கொண்டால், நான் சிக்ஷிக்கப்படுவதோடும் குடித்தனத்தைவிட்டு வெளிக்கிளம்பின குடிகேடி என்று எனக்கு அபக்கியாதியான பெயரும் வந்துவிடும். அதனால் உங்களுக்கு உபத்திரவமும் எனதுபெற்றோர்களால் நேரிடலாம். நான் இங்கே இருக்கலாகாது எங்கேயாவது ஓடிவிடுகிறேன், இத்தனைநாள் நான் அருமையாய்பிறந்துவளர்ந்து உன்னோடு சிநேகம் செய்து கடைசியாக பிரயோசனமற்றவளாய் ஒன்றியாய் ஓடிவிடவேண்டியகாலம் வந்துவிட்டது. எனக்குண்டான வியசனம் நான் சாகும்வரையில் மாறாது. திரும்பிவீட்டிற்குபோய்விடவும்முடியாதகாரியம் ஒரே அடியாய் பெரிய பாறாங்கல் என் தலையில் விழுந்துவிட்டது. சுவற்ணம்! நீ அழுவதால் காரியம் ஆவது ஒன்றுமில்லை! பிள்ளையவாள்!

நான்போகிறேன். நான் உயிரோடு ஒரு சமயம் இருக்கும் படி நேரிட்டால் உங்களைப் பார்க்கிறேன் இல்லாவிடில், என்னைப்பற்றி அடிக்கடி நினைத்துக் கொண்டு வியசனப்படா திர்கள்! எனக்காக வருத்தப்படுகிறவர்கள், உங்களைத் தவிர வேறுகிடையாது என்றதும் சுவற்ணம், சாரதாவைக்கட்டிக் கொண்டு உன்னை எப்படி நான் பிரிவேனடி? உனக்காக எவ்வள்வோ பாடுபட்டேனே! அவ்வளவும் வியர்த்தமாய்போய் நீயும் அனாதையாகும்படி நேரிட்டுவிட்டது, ஐயோ! கட்டாயம் வருகிறேன் என்றவர், வராமல் இருப்பாரா? மகாபாபி நான் செய்தபாபம்! உன்னை நல்ல நிலைமையில் பார்க்கக் குடுத்துவைக்கவில்லையே! என்று அலற; சாரதா—நீ துக்கப்படுவதால் என்னகாரியம் முடியும் நாழி அதிகமாகிறது அவர்கள், திடீரென்று வந்து விடுவார்கள். நான் போகிறேன் என்று, கையைப்பிடிங்கிக்கொண்டு வீட்டைவிட்டு வெளியே வந்தாள். தெருவில் லாந்தர் வெளிச்ச மிருந்ததால் வெகு சீக்கிரமாக ஊரை விட்டு வெளியே போகையில், ஒரு வழியொன்று தென்பட்டது. தான் இன்ன ஊருக்குப் போகிறதென்று நிதானமில்லாதவளாய், இந்த வழியோடு போனால் என்னை எங்கேயாவது கொண்டு சேர்க்கட்டும், என் உயிர் போகாதா! தற்கொலை செய்துக்கொண்டால் மகா பாபமாச்சுதே! இந்த இருட்டு காலத்தில் கொஞ்சங்கூடவழி தெரியவில்லையே! அறிநி என்னை இப்பொழுது திருடர் கண்டு அடித்துக் கொல்ல மாட்டார்களா! பெரும்பாம்புதான் என்னைக் கடிக்காதா! அல்லது மிருகாதிகள் வந்து என் சரீரத்தை பிய்த்து பிடிங்கித் தின்றால் மோக்ஷம் என் பார்களே! அப்படித்தான் கடிக்காதா? ஒரு சமயம் என் அன்பனைப் பார்ப்பேனா! அவர்பயப்படாதே என்று கை கொடுப்பாரா; தேசாந்தரியாய் பரதேசிக் கோலமாய் போகுமெனக்கு அந்த எண்ணம் தான் ஏன் என்று முன்போல

அழுதுக்கொண்டு, கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகப் போகும் வழியும் தெரியாமல், போகிற பொழுது வழியும் குறுகிவிட்டது. சற்றுதூரம் நடக்கையில், தான் நடக்கவும் முடியாதவளாய்க் களைத்துக் கீழே விழுந்தாள். ஆகா! நான் தங்குவேனு! என்னை உபத்திரவிக்க ஒன்றையும் காணேமே! நான் போகிறேன், பத்திரகாளியே? உன்னை தினம் தவறுது பூஜை பண்ணினதற்கு அடையாளமாய் இக்கெதியில் என்னை விட்டாய்! நான் பிரார்த்தித்த தெய்வங்களுக்குக் கண்ணில்லையே! என்று அலறிக்கொண்டு போகையில் அந்த வழியானது ஒரு பெரிய காட்டில் போய் சேர்ந்தது. அந்தக் காட்டில் போனதும் கொடிவழிகள் அனேகமாய்ப் பிரிந்துபோயின. இதுவரையில், நல்ல மண்ரோட்டில் நடந்துவந்தவள், இனி கற்கள் முட்கள் நிறைந்த காட்டுப் பாதையில் போக வேண்டியதாயிற்று. இவள் போகும் பொழுது வழிதெரியாமல் எதிரே நிற்கும் மரத்தில் மோதிக் கொள்வாள், பக்கத்தில் திரும்பிப்போனுல் குத்துக்குத்தான கருங்கல் துண்டுகள் காலைக் கிழித்துவிடும், முட்கள் தைக்கிறது, இருட்டோ தெரியவில்லை. புலி, கரடிகள் இவள் கிட்டவந்தாலும் ஒன்றும் செய்யாது ஓடிவிடுகிறது. மிருகங்களா! என்னைக்கொன்று விடுங்கள், என்று அதின் சமீபத்தில் நெருங்கி பிடிக்கப்போவாள், அவைகள் ஓடிவிடும் ஐயோ! நான் புலியிலும், கொடூரமானவளா! என்னைக்கண்டு இந்த மிருகங்களும் ஓடிவிடுகிறதே! என்று புத்தில் ஏறி காலையும் கையையும் புற்றுக்குள் விடுவாள், ஒன்றையும் காணேமே என்று மறுபடியும் எழுந்திருப்பாள். ஓடி இந்த முட்கள் நிறைந்தசெடியில் விழுந்துவிட்டால் என்பிராணன் போய்விடும் என்று, செடிமேல் விழுவாள் அது புஷ்பங்களோடுகூடிய ஜாதி, செண்பகச்செடியாய் இருந்து இவளுக்கு உபத்திரவம் செய்யாது நிற்கும், இந்த நிலைமையில், கால்கள் கற்களாலும் முட்களாலும் கிழிபட்டு இரத்தம் ஓடுகிறது.

சிரசு முதலியமற்ற அவயவங்கள், மரங்களாலும், கற்பாறை களாலும், முட்களாலும் தாக்கப்பட்டு தாறுமாறாய் பிளந்து உதிரம் பெருகுகின்றன. ஐயோ! என்சரீரம் இப்படி ஆகுமா! என்று ஏங்குவாள். உடனே இதற்கு எவ்விதமான மலினம் வந்தால் தான் என்ன! ஜாஸ்தியான தொந்தரவை நான் அடைய வேண்டியதை விட்டு சுவல்பமாகத்தானே ஹிம்சையை அடைகிறேன் என்று கத்திக்கொண்டு அவ் விடத்தில் சமமாகக் காணப்பட்ட ஒரு கற்பாறையின் மேல் படுத்துக்கொண்டாள் அப்பொழுது சுமார் 2-மணி இருக்கும்.

என்னை முகத்தில் வகித்து பரோபகார முள்ளவளாய் சீதளமான, வார்த்தைகளைக் கொண்டு ஜனங்களை திருப்தி செய்துவைக்கும் மகாபாக்கியவதியான இந்தப் பெண், கஷ்டப்படுவதை அதிககாலம் பரீக்ஷிக்கலாகாதென்ற எண்ணத் தோடு சந்திரன் தனது குளிர்ந்த கிரணங்களோடு பிரகாசித்துக்கொண்டு கிளம்பினான். சற்றுநேரத்திற்கெல்லாம் நல்ல நிலவு உண்டாயிற்று. சாரதா தூக்கம் வராதவளாய் எழுந்து உட்கார்ந்துக்கொண்டு இந்தப் பக்கத்தில் நான் தங்கி இருந்தால், மூலைமூலையாய் என்னைத் தேடிக்கொண்டு வருகிறவர்கள் கண்டுபிடித்து விடுவார்கள் சரீர ஆசுவாசத் திற்கு நான் தங்குவது தகுதியா? கண்ணுக்குத் தெரியாத இடங்களுக்குப் போய்விடவேணுமே! என்றால் ஒரு அடி கூட பெயர்த்து வைக்க முடியாதுபோல் இருக்கிறது, நான் என் செய்வேன், ஐயோ! சுப்பிரமணியா நான் சென்னையில் இருக்கும் பொழுது, கிணற்றில்விழுந்து விட்டேனே! அப் பொழுதே சாகலாகாதா! கூடத்தில் படித்துக்கொண்டிருந்த நீ ஓடிவந்து என்னைத் தூக்கி எடுத்தாயே! உன் அன்பான கை என்மேல் பட்டபொழுது இனிநீ ஒருவன் நீங்கலாக வேறொருவர்களின்கைஎன்மேல் படக்கூடாது என்று பிரமாணம் செய்து கொண்டேனே! அது உனக்குத் தெரியாதா?

எவ்வளவோ பிரியமாய் என்னிடத்தில் நீ இருந்துவிட்டு என்னை அனாதையாகும்படி விட்டு, சௌக்கியத்தை அடைந்துகொண்டிருக்கிறாயே! நல்லது எப்படியாவது நீ க்ஷேமமாய் இருக்கிற சேதி என் காதில் கேட்டால் போதுமானது. ஹாரார்பின்ளையாகிய உன்னை என்னொந்துகொள்ளவேண்டும். என்னை சிருஷ்டித்த பிர்ம்மா, இப்படி அலைந்துகெட்டுப்போ என்று என் தலையில் எழுதி இருக்க உன்னைச் சொல்வதால் என்ன பிரயோசனம் என்று கதறிக்கொண்டு எழுந்தாள். மறுபடி நடந்தாள், நிலவு வெளிச்சம் இருந்ததால் மலைக்குன்றின் ஒற்றை அடிப்பாதை ஒன்று காணப்பட அவ்வழியே தட்டுத் தடுமாறிச் சென்று ஒரு மலையின் அடிவாரம் போய்ச் சேர்ந்தாள். அப்புறம் வேறு வழியில்லை, அம்மலையின் மேலாக கருங்கல் படிக்கட்டுகளோடு செங்குத்தான வழியைக்கண்டு இந்த மலையின்மேல் ஏறுவதைத்தவிர மார்க்கம் ஒன்றுமில்லை என்று தெரிந்து இம்மலையின்மேல் ஏறினால் அது எவ்விடத்தில் என்னைச்சேர்க்குமோ தெரியவில்லையே என சற்று திகைத்து, தைரியமுடையவளாய் ஏறினாள்.

கொஞ்சதூரம் போவதற்குள் சாரதாவுக்கு கட்டோடு, அடி எடுத்துவைக்க முடியவில்லை படியின்மேலேயே உட்கார்ந்துகொண்டு மலையைப்பார்க்கையில் மரக்கூட்டங்கள் ஆகாயமளாவிவளர்ந்தும், அவைகள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு சப்திப்பதையும், அதின் கிளைகளில் உள்ள குரங்குகள் மரத்தில் தன் குட்டிகளோடு தாவுவதையும், குத்துச்செடிகளின் அடப்புகளின் கீழ் நரிகள் கத்திக்கொண்டு கூட்டம் கூட்டமாய் நிற்பதையும் செந்நாய்கள் குறுந்தைகள் குறுக்காக ஓடுவதையும், மரங்களினுடைய இலைகளின் நடுவே சந்திரகிரணத்தின் ஒளிவானது பூமியில் பாய அதனால் உண்டான பிரகாசத்தால் மினுமினு பூச்சிகள், ஊரும் அலங்காரமும், காட்டுப் புஷ்பங்களின்மீது மலைக்காற்றுவீச

அப்புஷ்பங்கள் கிளைகளோடு ஆடிக்கொண்டு அதின் மகரந்தப்பொடிகளை உன்னுடைய குளிர்ச்சியான குணத்திற்கு வாசனை ஊட்டுகிறேன் என்று சொல்லி காற்றோடு பொடிகள் சேர்ந்து வாசனையாக வீசவும், அக்காற்றுகளை அகண்டாகாரமான மலைப்பாம்புகள் வாயைத் திறந்துகொண்டு சுவாசிக்கவும் மான்கள் தன் குட்டிகளோடு மலைக் கற்பாறையின்மீது கூத்தாடவும் சிலமான்கள் தன்னுடைய நீளமான வால்மயிர்களை முட்செடிகளின் மத்தியில் மாட்டிக்கொண்டு முன் போகாமல் தயங்கி நிற்பதையும், மயில்கள் தன் பேடுகளோடு இறக்கைகளை விரித்துக்கொண்டு கூத்தாடுவதையும், முத்துக்களைப் பதித்ததுபோல் தன்தளிர்களில் பனித்துளிகளை அடைந்த புற்கள் எங்கே பார்த்தாலும் பச்சென்று பிரகாசித்துக் கொண்டிருப்பதையும், உன் பனி முத்தை உதிர்த்து வாடச் செய்கிறேன், வழி தெரியாமல் தவிக்கும் இந்த உத்தமஸ்திரீயை நல்வழிப் படுத்துகிறேன் உன்னால் நானும் வியசனத்தையடைந்து என்முகமும்சிவந்துவிட்டன பார் என்று சூரியன் புறப்படுகிற விமரிசையையும் கண்டு ஈசுவரன் சிருஷ்டிகோடிகளின் பெருமையே பெருமை, நான் வீட்டில் இருந்தால் இந்த அதிசயங்களைக்கண்டு களிக்கமுடியுமா, ஒவ்வொரு பிராணிகளும் அவைகளுக்குத் தக்கபடி அங்கங்களையும், கூட்டுறவுகளையும் உண்டாக்கி அவைகள் ஆனந்தமாய் வாழ்ந்துக்கொண்டிருக்கவும், கேவலம் அற்பப்பிராணிகளும், தனக்கு வளைகள் பொந்துகளை ஏற்படுத்திக்கொண்டு காலாகாலங்களில் ஆகாரங்களைச் சேர்க்கவும் அவற்றைத் தின்று களிக்கவும், தன் பொறுப்பாக ஒவ்வொரு காரியத்தைச் செய்யவும் அதை அனுசரித்து சேர்ந்தவைகள் ஒற்றுமையோடு நடக்கவும் அற்பமான செடிகொடிகளும் சுவரையோ, அல்லது பற்றுதலை அடைந்தோ பார்ப்பவர்களுக்கு தன் சுவபாவத்தின் பெருமையைக் காட்

டிக்கொண்டு இருக்கவும், பஞ்ச அறிவும் பகுத் தறிவும் உண்டாக்கிய கடவுள் பேதா பேதங்களை கண்டுபிடிக்கத் திராணி உள்ளவர்களான மனிதர்களின் கூட்டங்களுக்கு மாத்திரம் தன்னிலையோடு தளர்ச்சி அடையாமல் இருக்கும் படி என் ஆக்ஞை படுத்தக்கூடாது, உன்னத நிலைமையில் இருப்பவர்களை அதை விட்டு மாற்றவும், தாழ்ந்தோர்களை உயர்த்தவும்,சலனப் பிரயோகங்களுக்கு அநுகூலமாக இருக் கும்படி செய்திருப்பது கடவுளின் பெருமைக்குக் குறைவில் லையா? இவ்வளவும் மனிதர்களின் கூட்டுறவு இல்லாத கார ணமே தவிர தெய்வச்செயலாய் சம்பவித்தது என்ற அநுவ சியமான பெயரைக் கொடுப்பது நியாயமல்ல, பிரயத்தனத் துக்கு மாறாக, விபரீதங்கள் உண்டானால் அச்சமயம் ஒரு வாறு சொல்லலாம், அப்படிச் சொல்வதும் அநுசிதமே. இவைகளைப்பற்றி யோசிக்க யோசிக்க வளருகிறது. சூரிய னும் உதயமாய்விட்டார். இதோ இருக்கிற இந்தமலைஅருவி ஜலமானது எவ்வளவு தாவள்ளியமாய் இருக்கிறது. கருங் கல்லின் இடையே ஊடுருவி, வருவதின் சத்தம் என் காதி ற்கு இனிமையை உண்டாக்குகிறது இது எவ்விடமிருந்து வருகிறதோ தெரியவில்லை, இவ்வளவு அற்புதமான நீரோட் டத்தின் ஜலம் சுத்தமாயும் சீதளமாயும் சாப்பிட ருசிகர மாயும் இருப்பதில் தடையில்லை என்று அந்த அருவியின் பக்கமாய்ப் போய் அதின் ஓரத்தில் ஜலத்தின்மேல் நீண் டிருந்ததோர் கருங்கல்லின்மேல் உட்கார்ந்து கொண்டு ஜலத் தில் தன் கால்களைத் தொங்கவிட்டுக் கையால் ஜலத்தை எடுத்து தன்முகத்தில் மரங்களினால் அடிபட்டு காயமடைந்து காய்ந்து இருக்கும், இரத்தங்களை அலம்பி சற்று களைதெளி ந்து கை கால்கள் முட்களால் கீறப்பட்டுள்ள சிறு சிறு இரணங்களை யெல்லாம் கழுவி சில்லென்ற தண்ணியையும் அள்ளிக் குடித்து சூரியப் பிரகாசமும் ஓங்கி வருவதனால்

அவ்விடம்விட்டு எழுந்திருக்க மனமில்லாதவளாய் உட்கார்ந்திருக்கையில் கற்பாறையின் கீழ் இருந்த சிறியதோர் நாகப்பாம்பு வெளிக்கிளம்பி சாரதாவினுடைய முழங்காலின் கீழ் உள்ள சதையைக்கடித்துவிட்டது. ஐயோ! என்னவோ காலில் கடித்துவிட்டதே என்று காலைத் தூக்கும்பொழுது கடித்தபடியே தொங்கிக்கொண்டிருந்த பாம்பையும் பார்த்து கடித்த இடத்திலிருந்து பாம்பைப் பிடுங்கி எறிய பயந்தவளாய் சற்று நேரத்திற்கெல்லாம் விஷந்தலைக் கேற பக்கத்தில் இருந்த மரத்தடியில் ஓடிவந்து படுத்துக்கொண்டாள், ஒன்றும் தெரியாது மூர்ச்சை போய்விட்டாள். — இது நிற்க,

அரையில் கட்டின முண்டுவேஷ்டியுடன் மேல் உத்தரீயத்திற்கு பதிலாக கைக்குட்டையைப் போட்டுக்கொண்டு வேர்வையானது கொட்ட பயந்த சுபாவமுடையவனாய் வேகத்தோடு இருக்கும் அதிர்ச்சியால் கண்கள் விறுவிறுத்து பார்வையும் மங்கி களைத்த மேனியுடன் நிதானிக்கமாட்டாதவனாய் தயங்கினான். மறுபடியும் வெருண்டுபார்த்து, நீராவியின் பக்கத்திலுள்ள விருக்ஷத்தின் கீழ் படுத்திருப்பது யாராய் இருக்கலாம் அவரிடம் போய் கேட்டால், பக்கத்து ஊர்களுக்குப்போக வழிகாட்டமாட்டாரா, இந்தக் காட்டிலும் மலையிலும் பாதை தெரியாமல் விழிக்கவேண்டியதாய் இருக்கிறதே என்ற எண்ணத்தோடு மரத்தடியில் போய்ப் பார்த்து இவர் யாரோ தெரியவில்லை அயர்ந்து தூங்குகிறாப் போல் காண்கிறது. மேலே வேஷ்டி கட்டிக்கொண்டு உள் பக்கமாய் புடவை கட்டியிருப்பதையும் மற்ற அடையாளங்களாலும் ஒரு ஸ்த்ரீ மாதிரி காண்கிறது. இவர் ஏன் இப்படி தூங்கவேண்டும், என்று கிட்ட நெருங்கிப்போய் பார்த்தான் வாஸ்தவமாகவே இவள் பெண்தான் ஏதோ வழி நடந்துவந்த சிரமத்தால் களைப்படைந்து இருக்கலாம் கால்களும் கைகளும் முட்களால் கீறப்பட்டிருக்கிறது, நெற்றியி

லும் சொஞ்சம் காயமாக இருக்கிறது இவளின் சொத்துக்களைப் பிடுங்கத் திருடர்கள் ஏதாவது ஹிம்ஸை செய்துவிட்டார்களோ தெரியவில்லை. இவளைப்பார்த்தால் எனது பிரிய நாயகி சாரதா மாதிரி காண்கிறதே! சாரதா இத்தனை நாழி கலியாணக்கோலத்தோடு இருப்பாளே அவள் இப்படிவரக் காரணம் என்ன என்று கூப்பிட்டான், விழித்துக்கொள்ள வில்லை. தன் கையால் புரட்டினான், அப்பொழுதும் ஒன்றும் பேச்சைக்காணோம், ஆனால் கடித்தபடியே பாம்பு காலில் தொங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்து, ஐயோ! இதென்ன விபரீதம் கரும்பாம்பல்லவோ கடித்துக்கொண்டிருக்கிறது என்று சட்டென்று பாம்பின் வாலைப் பிடித்து இழுத்து எறிந்தான். உடனே கருமையான இரத்தம் வர, நான் தெறிகெட்டுவருகையிலும் இப்படிப்பட்ட கஷ்டமடைந்த இந்த ஸ்திரீயா என்கண்ணில் படவேண்டும் விஷம் சரீரத்தில் பரவிவிட்டதால் உடம்பெல்லாம் கறுத்து உதடுகறுத்து பல் கிட்டிப்போய்விட்டது. இவருக்கு அடையாளமும் தெரியவில்லை மூச்சு இருக்கிறதோ என்று மூக்கில் கையைவைத்துப் பார்த்தான் சுவாசம் சுவல்பமாய் வந்துகொண்டிருந்தது. இவனுக்கு அந்த பெண்ணினிடம் பரிதாபம் ஜாஸ்தியாக உண்டானதால் அவளைத் தூக்கி தன்மேல் சாய்த்துக் கொண்டு தன் மேல் சவுக்கத்தால் விசிறினான். அரைவேஷ்டியும் அவிழ்ந்து விட்டது. உள்புடவை மாத்திரம் கெட்டியாய் கட்டப்பட்டிருந்தது அதிக இறுக்கமாக இருக்கிறதே என்று அந்த பெண்மேல் போட்டிருந்த சட்டையை கழட்டினான், சட்டை பையில் ஒரு காகிதம் ஒன்று தென்பட்டது. அதை எடுத்து வாசித்துப்பார்க்க தன் கையெழுத்து மாதிரி இருந்தது. இது சாரதாம்பாளுக்கு எழுதின லெட்டர் என்று தெரிந்துகொண்டு, ஐயோ! இவள் எனது சாரதாம்பாளா! இப்படியா என்னை மோசம் செய்யவேண்டும் என் கண்மணி! உன் கண்ணைத்திறந்து சற்று விழித்து என்னைப்

பார்க்கலாகாதா! இன்னும் நான் வரவில்லையென்று ஓடி வந்துவிட்டாயோ, என் உயிரே! உன்னை இந்த நிலைமையி லேயா நான் பார்க்கவேண்டும் நான் என்ன செய்வேனடி சாரதா! உன்னிமித்தம் என் ஆஸ்திகளையெல்லாம் இழந்து விட்டு கிளம்பிவிட்டேனே! நீ உன் தகப்பனார் எண்ணம் போல் ஜமீன்தாரை கலியாணம் பண்ணிக்கொண்டு சௌக் கியமாய் வாழலாகாதா. இம் மகாபாபி வாக்குதத்தம் தவறி னவன் என் பொருட்டா நீ வெளிக்கிளம்பி உன் உயிரை விட்டுவிடவேண்டும் உன் சரீரம் முட்களால் கிறப்பட்டிருக் கிறதே, இந்த கொடுமையை என் கண்ணால் பார்க்க என் உயிர் போகிறதே! உன்னைக் கடித்தபாம்பு என்னையும் கடித் திருக்கக்கூடாதா! உன்உடம்பெல்லாம் கறுத்துப்போய்விட் டதே. மகா பாதகன் நான் ஸ்திரீஹத்தி செய்தேனே இங்கு ஒருவரையும் காணேமே விஷத்திற்கு மருந்து கொடுக்க எனக்கு ஒன்றும் தெரியாதே! உன்னை இங்கேயே விட்டு விட்டு எவ்விடம்போய் யாரைத் தேடிவந்து மருந்து கொடுக் கச் செய்வேன், தனியே விட்டுப் போகவும் என் மனம் வராதே! ஒரு சமயம் நான் போய் வருவதற்குள் உன்உயிர் போய்விட்டால், நாய்கள், நரிகள், கழுகுகள் உன் சரீரத் தைப் பிடுங்கித்தின்றுவிடுமே தெய்வமே! இந்த துக்கத்தைப் பார்க்கவா வீட்டைவிட்டுக் கிளம்பினேனென்று எழுந்திருப் பான், அலறுவான், மறுபடியும் பாம்பு உன்னைக் கடித்த பொழுது உன் உடம்பு எம்மாதிரி பதறிற்றோ, நீ அப்பொ ழுது யாரை நினைந்து துக்கித்தயோ சாரதா! உன்னைப் பார்க்கும் என் கண்களை பிடுங்கிக்கொள்ளட்டுமா என்று தலையிலும் கண்களிலும் அறைந்துகொள்வான். எழுந்து ஓடி ஒரு செடியின் இலையைப் பிடுங்கிவந்து கசக்கி கடித்த காயத்தில் சாற்றைப் பிழிவான். அதனால் பிரயோசனம் இல்லையென்று கண்டு இந்த செடியின் இலையாவது அமிர்த சஞ்சீவி இலையாக இருக்கலாகாதா என்று அதைப் பிடுங்கி

வந்து கசக்கி காயத்தில் பிழிவான். இப்படியாக, அந்தபக்கத்திலுள்ள பச்சிலைகள் வேர்கள் எல்லாவற்றையும் கொண்டு வருவதும், கசக்கிப்போடுவதுமாய் நெடுநேரம்வரையில்சிகிச்சை செய்துகொண்டிருந்தான், ஒன்றும் பிரயோசனமில்லாமல் போனதைக்கண்டு, கடவுளைப் பிரார்த்தித்து, மண்ணையெடுத்து நெற்றியில் இடுவான் ஜலத்தைசவுக்கத்திலுனைத்து வைத்து காயத்தில்விட்டு அலம்புவான். இந்த சமயத்தில் சாரதாவுக்கு சற்று சோகம் தெளிந்து கண்ணை மருள விழித்துப்பார்த்தாள், வாய்கிட்டியிருந்ததால் திறக்கமுடியவில்லை. பக்கத்தில் உட்கார்ந்திருந்த சுப்பிரமணியன்மீது கையைப் போட்டுக்கொண்டு, சற்று நிதானமாய் பார்த்துக்கொண்டிருக்கையில் மறுபடிசோகம்வந்துவிட்டது, கண்ணை சுழட்டிற்று அப்படியேமூடிக்கொண்டாள். ஐயோ! சாரதா என்னை மோசம்பண்ணுதே நான் பரதேசியாய்விடுவேன்! மறுபடியும் கண்ணை சுழட்டி மூடிக் கொண்டனையே. தெய்வத்திற்கும் உன்விஷயத்தில் கிருபை இல்லாமல் போய் விட்டதே. நானும் உன்னோடு இறந்துவிடுகிறேன் என்று எழுந்து ஓடுவான், மறுபடியும் கல்லில் தலையை மோதிக் கொள்ள எத்தனிப்பான். ஒருகால் இப்பொழுது கண்ணை விழித்ததுபோல் விழித்து, ஒருவார்த்தை பேசமாட்டாயா! உன்னிடம் என் குறையைச் சொல்லிவிட்டு பிறகு இருவரும் சேர்ந்தே இறந்துவிடுவோம் என்பான். இப்படியாக சாரதா பக்கத்தில் சுப்பிரமணியன் உட்கார்ந்து அழுது கொண்டிருக்கையில் மலைகளில வசிக்கும் வேடன் ஒருவன் இதை வெகுநேரமாய் தன் பெண்ஜாதியோடு பார்த்துக் கொண்டே தான் கொன்ற[illegible]ானை சுள்ளிகளாலும் செத்தைகளாலும், கொளுத்தி வேகவைத்துக்கொண்டிருந்தான்.

வேடத்தி தன் புருஷனைப்பார்த்து அந்தாலே பார்த்தங்களா ஒருமனுசி படுத்துக்கினு இருக்க பக்கத்தில் ஆம்

பிள்ளை ஒருத்தன் அளுவுறான் அங்கிட்டுபோய் பாக்கலாம் வாங்களே என்றுகூப்பிட இருவரும் அவ்விடம்போனார்கள். எம்பிள்ளே அளரே என்றுவேடன் சுப்பிரமணியனைக்கேட்க, ஏ புண்ணிய புருஷா! சமயத்தில் எங்களுக்கு உதவிசெய்ய வந்தாயே! இதோ படுத்திருப்பவள் எனது பிரியநாயகி இவளை பாம்பு கடித்துவிட்டது, இறந்து விடுவாள்போல் காண்கிறது! ஏதாவது மருந்துகொடுத்து சுவஸ்தம் பண்ணினால் உனக்கு மிகுந்த புண்ணியம் உண்டு என்று கெஞ்சினான்.

வேடன் — பாம்பு எந்தலே கடித்திட்டிச்சு.

சுப்பிரமணியன் — முழங்காலின் கீழ் என்று காலைத் தூக்கிக் காட்டினான்.

வேடன் — ஆகாகா நல்ல விசபாம்பு கடிச் சுட்டுது இவள் பிழைக்கமாட்டா தம்பி? நீ பசிச்சு இருக்காப்பிலே இருக்கு மான் நலலா வேகவச்சிருக்கேன், தின்கலாம் போவோம, நீ இவளை நம்பாதே.

சுப்பிரமணியன் — முன்னிலும் அதிகமாய் வருந்தி ஐயா! எப்படியாவது பிழைப்பியுங்கள் மூச்சு இருக்கிறதே கடிமருந்தேதாவது கொடுத்து பார்க்கக்கூடாதா? என்றான்.

வேடத்தி — இந்த பெண்ணுக்கு கண் சோளையிட்டுப் போச்சுது, மூச்சு கொஞ்சநேரந்தான் நிக்கும் மருந்து கொடுத்தும் பிரயோசன மில்லே, வீட்டிலே போய் சோறு ஆக்கிப்போடறேன். நம்ப வீட்டிலேயே நீ இருந்துடு அப்பா போகலாம் வா, என்றாள்.

வேடன் — எட்டி என்னடி பையலைக் கண்டுபிட்டு ஒரு மாதிரியாய் பேச்சரே அவனை இளுத்துக்கிட்டா போக யோச்சனை பண்ரே. நல்லது குட்டி பலிக்குமா நாயாரென்று நினைச்சுக் கிட்டே ஒரு நொடியில் இவளை எளுப்பிரேன் பாரு என்று மடமடஎன்று ஓடி ஒருவேப்பிலைமரத்தில் ஏறி

ஒரு கட்டு தழையை ஒடித்துவந்தான், அதை அலகு அல
காய் ஆய்ந்து ஒரு பிடி எடுத்துக்கொண்டு குழை அடிக்க
எத்தனித்து இவனது மந்திரத்தைச் சொல்லிக்கொண்டே 10
பிடி அடித்தானபிறகு சாரதாம்பாள், கண்ணைத் திறந்தாள்.
உடனே வேடன் தன் பெண்சாதியைக் கூப்பிட்டு மண்குடம்
பரணில்போய் எடுத்துக்கொண்டு, மேல் உரப்பில் கிளிஞ்சல்
ஒன்று துணியைப்போட்டு கட்டி வைத்திருக்கிறேன் எடுத்து
வா என்று அனுப்பினான், அவளும் சீக்கிரம் எடுத்துவந்தாள்.
கிளிஞ்சலில் இருந்த மருந்தை எடுத்து கண்ணில் கொஞ்சம்
போட்டு, தண்ணியை மொண்டுகொண்டு வந்து கொட்டச்
சொன்னான். ஆனால் இவன் மந்திரம் சொல்வதை மட்டும்
நிறுத்தவில்லை, 100 குடத்திற்குமேல் இருக்கும், கொட்டி
யானதும் சாரதாம்பாள் உடம்பை சிலிர்த்துக்கொண்டு தன்
மீது ஒதுங்கி இருக்கும் புடவையை இழுத்துக்கொண்டவ
ளாய் எழுந்து உட்கார்ந்தாள். அதுவரையில் சுப்பிரமணி
யன் பெருமூச்சு விட்டுக்கொண்டே மரத்தின்மேல் சாய்ந்து
நின்றுகொண்டிருந்தான். இவள் எழுந்து உட்கார்ந்ததும்
வேடத்தி கிட்டவந்து தனது மேல் தலைப்பினால் சாரதா தலை
யை துவட்டினாள். சாரதாவுக்கு முற்றிலும் சௌக்கியமாய்
விட்டது. பேசவும் தைரியம் உண்டாயிற்று. பக்கத்து மரத்
தடியில் பிரமித்துப்போய் நின்றுகொண்டிருந்த சுப்பிரமணி
யனைப் பார்த்தும் பாராதவள் போல் வேடனுக்கும் வேடத்
திக்கும் வந்தனம் சொல்லி அவர்களோடு சற்று பேசிக்
கொண்டிருந்தாள்.

சுப்பிரமணியனுக்கு மனம் தாங்காது பார்த்தயா நான்
படித்தும் முட்டாளாகி விட்டேன். கேவலம் ஒரு ஸ்திரீயை
நினைத்துக் கொண்டு என் ஆஸ்தி யெல்லாம் தோர்த்துவிட்டு
அலைந்து திரிந்து வந்து இவளை சந்தித்தும், நம்முடன் முகம்
கொடுத்துப் பேசாது வேடனுடன் சந்தோஷமாய் பேசிக்
கொண்டிருக்கிறாள்.

(" ஆலகால விஷத்தையும் நம்பலாம், ஆற்றையும் பெருங் காற்றையும் நம்பலாம், கோலமாம் மதயானையும் நம்பலாம், கொல்லும் வேங்கைப் புலியையும் நம்பலாம், சேலை கட்டிய மாதரை நம்பினல், தெருவில் நின்று திகைத்து தவிப்பரோ.")

என்று நான் படித்ததற்கு பிரயோஜனம் இன்று கண்டேன். இவளோடு கூட நான் இறந்து விடவும் யோசனை செய்து விட்டேனே. என்று பலவாறாக யோசித்துக் கொண்டிருக்கையில், சாரதாம்பாளுக்கு இந்த ஜாடை தெரிந்தவளாய் சுப்பிரமணியனை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்து மறுபடியும் முன்போல் வேடனோடு பேசிக்கொண்டிருந்தாள்.

வேடன் — சாரதாம்பாளே, நம்ம குடிசைக்கு போவோம் வா அங்கே தேன் தினைமா எல்லாம் இருக்குது அவைகளை எனது பெண்டாட்டி கொடுப்பாள் சாப்பிட்டு விட்டு இன்று இங்கேயே இரு நாளைக்கு உன்னை இந்த மலையை விட்டு கீழே இறக்கி பக்கத்துப் பட்டணம், சேர்த்து விடுகிறேன் என்றான். நல்லது அப்படியே செய்கிறேன், தாங்கள் எனக்கு தகப்பனார், இந்த அம்மாள் என் தாயார் வேறு யாரும் எனக்குத் துணையில்லை என்றாள். உடனே எல்லோரும் வேடன் குடிசைக்கு கிளம்பி விட்டார்கள். சுப்பிரமணியன், சரி! இவள் வேடனோடு போக எத்தனித்து விட்டாள், நாம் இப்படியே எங்கேயாவது போகவேண்டியது தான், என்று இவர்களைப் பாராமல் பின் பக்கமாய்த் திரும்பிக் கொண்டு போக எத்தனிக்கையில், சாரதாம்பாள் இனி நான் தாமதிக்க லாகாது எனது பிரிய சுந்தரன் ஓடிவிடுவார் என்று கிட்டப் போய் சுப்பிரமணியன் இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு தன் கண்ணில் ஒத்திக்கொண்டு கையை பிடித்து இழுத்துக்கொண்டே வேடனோடு சென்றாள். வேடன் அம்மா ஏன் அவரை இழுத்துவருகிறாய் சற்று முன்னால்

அவர் யாரோ தெரியாது என்றாயே என்று கேட்க, இல்லை அப்பா இவர் என் உயிர்க்காதலர் கொஞ்சகாலமாக என்னிடம் வராமல் இருந்தார், அதனால் தான் எனக்கு கோபமாக இருந்தது. அவரும், கோபித்துக் கொண்டதைக் கண்டு பிடித்து இழுத்து வருகிறேன் என்றாள். அப்படியா நீங்க என் முன்னால் ராசியாய்ப்போங்க என்று வேடன் சொல்ல நீ தான் அக்கினிதேவன் அனேக புண்ணிய புருஷனுக்கு சமானம், தவிர தாய், தகப்பன் என்று முன்னமேயே சொல்லிவிட்டேன், உங்கள் முன்னிலையில் தான இவரை கை பிடித்தேன். அவருக்குத்தான் கோபம் ஏது எனக்குத் தான் என்ன கோபம் போவோம் வாருங்கள் என்றாள்.

மலையினமீது நல்ல பாதையில் வேடன் வழிகாட்ட இவர்கள் பின்னோடு போனார்கள். சற்று தூரம் போனதும் அதோ மரத்தின் நுனியில் தெரிகிறதே அதுதான் எனது பரண் அதற்குப் போகும்வழி இதோ இருக்கிற படிக்கட்டுத் தான என்றான். வேடன் காட்டின மூர்க்கு இரண்டு பெரிய விருக்ஷங்களின் கிளைகளின்மேல மரக்கொம்புகளினால் கட்டப்பட்டு கொடிகள் படரவிட்டிருக்கிறது அப்படிக்கு இருப்பதினால் இராக்காலங்களில காட்டு மிருகங்களினால் உபத்திரவிக்கபபடாமல் இருக்கும் பொருட்டேயாம் அதற்குப்போகும்வழி மரத்திலிருந்து தொங்கும் விழுதுகளில் கழிகளை கொடிகளினால் கட்டி அந்தக்கட்டு சாலாகாலங்களில் அவிழ்ந்து போகாமல் இருக்கும்படி மலைகளில் உள்ள கொடிகளை அந்தக் கட்டுகளின்மேல் படரவிட்டு இருக்கிறது. இவ்விதமான படிக்கட்டுகளின்மேல் வேடர்களும் வேடந்திகளும் பயமன்றியில் ஒரு நொடியில் ஏறிவிடுவார்கள். புதிதாக அதை பார்க்கிறவர்கள், ஒருபடி கூட ஏறமாட்டார்கள். சில சமயங்களில், வேடர்களைப பிடிக்க யாராவது வந்துவிட்டால் படிகளின் அடியில் படரவிட்டிருக்கிற கொடிகளை

அறுத்துவிட்டு தாங்கள் உயர ஏறிக்கொண்டு படிகளை மேலாக சுருட்டிக்கொள்வார்கள். பிறகு கலகக்காரர்கள் இல்லையென்று தெரிந்த உடன் படிகளை கீழேவிட்டு முன்போல கொடிகளைப் படரவிடுவார்கள். அந்தக் கொடிகள் வெகு சீக்கிரமாய் படர்ந்துவிடும். இப்படியாக அந்தக் காட்டில் எத்தனையோ வேடர்கள் மரங்களின்மேல் பரண்கள் கட்டிக் கொண்டு சமுசாரிகளாக வசித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தாங்கள் எடுக்கும் தேன்களை சேகரம் செய்து வைத்திருந்து, கொஞ்ச நாளைக்கு ஒருவிசை 10-15, வேடன் வேடத்திகளாக சேர்ந்துகொண்டு சமீபத்திலுள்ள பட்டணத்திற்கு தேனைக் குடுவையில் எடுத்துப்போய் விற்றுவிட்டு தங்களுக்கு வேண்டிய பதார்த்தங்களையும் உடைகளையும் வாங்கிவருவார்கள், வேடர்கள் மயிலின் இறகு வான்கோழியின் இறகு இவைகளை நெத்தியில்வைத்து கட்டிக்கொள்வதோடும் மலைகளில் கிடக்கும் நுட்பமான மிருகங்களின் எலும்புகளை மாலைகளாகக் கட்டி கழுத்தில் போட்டுக்கொள்வார்கள். ஆனால் வேடத்தி அலங்காரம் செய்துக்கொள்வதோ பின்னிலும் விசேஷம், தாங்கள் பட்டணங்களுக்குப் போனால் சங்குமணிகளை எதேஷ்டமாய் வாங்கி காதிலும் கழுத்திலும் கையிலும் கோர்த்து அணிந்துகொள்வார்கள், நத்தாங்கூடுகளைப் பொறுக்கி துளைத்து அதைக் கோர்த்து, காலில் கட்டிக்கொள்வார்கள். கிழிந்த துணிகளை அவர்கள் எறிந்துவிடுகிறதில்லை தாங்கள் வாங்கும் புதிய வஸ்திரத்தின் பின்னால் வைத்து தைத்துவிடுவார்கள். அவர்கள் கட்டும் உடை பழையதும் புதியதுமாக ஆக ஆக ஒரு மொத்தாகாரமாக இருக்கும். சில வேடர்கள் தாங்கள் வசிக்கும் பரணை சுமார் 2000 சதுர அடிக்கு குறையாத இடத்தில் மரக்கொம்பினால் அடியில் பரப்பி அக்கொம்புகளினாலேயே நாலாபக்கமும் அடைப்பு அடைத்து நடுவில்

பங்களா மாதிரியாக குடிசைகளைக் கட்டிக்கொண்டு ஆனந்தமாய் வசிப்பார்கள். இக்குடிசை பூமியிலிருந்து, 400, 500 அடி உயரத்திற்கு குறையாத இடத்தில் கட்டப்பட்டிருக்கும்.

சாரதாம்பாள் — சுப்பிரமணியபிள்ளை கையைப் பிடித்துக் கொண்டபடியே நாதா தங்களுக்கு என்மீது என்ன கோபம்?

சுப்பிரமணியன் — கோபம் ஏன்? எனக்கென்ன கோபமிருக்கிறது.

சாரதாம்பாள் — இல்லை இல்லை, தங்களுக்கு காகிதம் எழுதினேனே அதன்படி நான் வராததற்காக கோபித்துக் கொண்டீர்கள் போலும்.

சுப்பிரமணியன் — நான் இருந்தநில்லைமையில், நீ இருந்தால் வீட்டை விட்டு இன்னம் கிளம்பி இருக்கவே மாட்டாய், வாய்ப்பேச்சு சொல்லுகிறதற்கென்ன.

சாரதாம்பாள் — என்னை இப்படி தவிக்கும்படி விட்டீர்களே அந்தக்குறை இறந்தாலும் என் மனதைவிட்டு நீங்காது, தவிர எப்பொழுதும் தங்களையே நான் நினைத்து இருந்ததால் என் ஆபத்திற்கு தாங்கள் வந்து உதவினீர்கள்.

சுப்பிரமணியப்பிள்ளை — நான் சொல்ல வேண்டியதை நீ சொல்லி விட்டாய் உன்னுடைய ஆபத்தைக்கண்டு நான் வியசனிக்காவிட்டால் உன்னிடம் நான் வைத்த அன்பு எப்படி பரிபூர்ணம் அடையும்.

சாரதாம்பாள் — என்னைப் பாம்பு கடித்து மூர்ச்சை அடைந்திருக்கையில் தங்கள் ஞாபகம் மட்டும் என் மனதை விடாது இருந்தது; ஆனால் அதை வெளியிட முடியாமல் இருந்தேன்.

இப்படியாக இவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் வேடன், என் நாம் இங்கே நிற்கவேண்டும்? பரண்மேல் ஏறலாமே என, இவர்கள் எங்களால் ஏற முடியாது என்று சொல்லிவிட்டார்கள். உடனே வேடன் சுப்பிரமணியப்பிள்ளையை தோளில் தூக்கிக்கொண்டு படிக்கட்டுகளின்மேல் ஏறிவிட்டான். வேட்டத்தியும் சாரதாம்பாளை இடுப்பில் எடுத்துக்கொண்டு வேடன் பின்னோடு சென்றாள். இவர்கள் உயர ஏற ஏற சாரதா, சுப்பிரமணியப்பிள்ளைக்கு பயம் அதிகமாய் இருந்தது, வெகு சீக்கிரமாக பரணில்போய் சேர்ந்துவிட்டார்கள். அங்கே போனதும் வேடன் மலையிலிருந்து வேகவைத்துக்கொண்டுபோன மாமிசத்தை சாரதா சுப்பிரமணியபிள்ளையை சாப்பிடச்சொன்னதும், அவர்கள் நாங்கள் சாப்பிடமாட்டோம் என்று சொல்லவே வேடத்தி தினைமாவை எடுத்து தேனை விட்டுப் பிசைந்து கொடுத்தாள். அதை சாப்பிட்டார்கள். வேடன் பரணில் இருந்தபடியே அம்பினால், பக்ஷிகளை அடித்துக்கொண்டிருந்தான். பரணுக்கு வெளிப்பக்கத்தில் மரக்கொம்புகளினால் பரப்பப்பட்டு அதன்மேல் தழைகளைப் பரப்பி மெத்தென இருந்த ஒருபக்கத்தில் சாரதா சுப்பிரமணியப்பிள்ளை இருவரும் படுத்துத் தூங்கிவிட்டார்கள்.

வேடன் மூன்று மணிவரையில் தன் வேலையைப் பார்த்துவிட்டு, இவர்களை எழுப்பினான். அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தவர்கள் எழுந்து வேடனுடன் பரணுக்குள் போய் மறுபடியும் கொஞ்சம் ஆகாரம் செய்துகொண்டார்கள். வேடத்தி இவர்களிடத்தில் மிகுந்த அன்பு பாராட்டினாள். வழக்கம்போல் வேடன், வேடத்தி, மலைக்கு இறங்க எத்தனித்தார்கள். சுப்பிரமணியப்பிள்ளை நாங்களும் வருகிறோம் என நல்லதென்று, முன்போலவே தூக்கிக்கொள்ள எத்தனிக்கையில் வேண்டாம் நாங்கள் மெதுவாய் பிடித்துக்

கொண்டு இறங்குகிறோம், என்றார்கள். அப்படியே முந்தி வேடனும் நடுவில் சாரதா, சுப்பிரமணியபிள்ளையும் பிந்தி வேடத்தியுமாக வெகு ஜாக்கிரதையாக இறங்கினார்கள். மலை மீது எல்லோருமாய் வந்த உடன் வேடன் இவர்களை ஒரு பக்கமாய் அழைத்துச் சென்றான். அவ்விடத்தில் அனேகம் பெயர் வேடன் வேடத்தி நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களோடு இவர்களும் சேர்ந்துகொண்டார்கள். சாரதா, சுப்பிரமணிய பிள்ளை அந்த கட்டடங்களைக்கண்டு பிரமித்து நமக்கு என்ன சம்பவிக்குமோ என்று யோசித்துக் கொண்டிருக்கையில் மற்ற வேடர்கள் இவர்கள் யார் என்று கேழ்க்க, இவர்களிருவரும் என்னவோ ஒரு ஊர் வழி தவறி வந்துவிட்டார்கள், நான் அழைத்துவந்தேன் என்று வேடன் சொன்னான். அந்த வேடர்களும் வேடத்திகளும். இவ்வளவு லக்ஷணமான புருஷனையும் பெண்ணையும் பார்த்துஇராததால் ஒருவேடன் வந்து சுப்பிரமணியபிள்ளையின் கையைத்தொட்டுப் பார்த்து எவ்வளவு அழகு, மூக்கால் என்னமெது என்று அவயவங்கள் ஒவ்வொன்றையும் தடவி கண்ணில் ஒத்திக் கொண்டு காலில் விழுந்தான். வேடத்திகளும் அப்படியே சாரதாவைப் பார்த்துவிட்டு ஒருவருக்கொருவர் புகழ்ந்து கொண்டு புடவையைத் தொடுவதும், மூக்குத்தி இருக்கும் பளபளப்பைப் பார்த்து அதை ஒவ்வொரு வேடத்தியாகப் பார்த்து ஆனந்திப்பதுமாய், சாரதாம்பாளை சுசக்கிவிட்டார்கள். கடைசியாக அந்த வேடர்கள் இவர்களைப் பார்த்து ஆனந்திக்கும் பொருட்டு தப்பை எடுத்துக்கொண்டு அடிக்க எத்தனிக்கவும் அதற்குத் தக்கபடி வேடத்திகளும் சிறு குழந்தைகளும் கூட நத்தாங்கூடு சதங்கை காலில் கிலு கிலு என்று சப்திக்க ஆடினார்கள். வேடர்கள் பாட்டிற்கும் வேடத்திகள் ஆட்டத்திற்கும் சாரதா, சுப்பிரமணியபிள்ளை மிகுந்த சந்தோஷம் அடைந்தார்கள். சூரியன் அஸ்தமிக்கும் சமயம்

ஆகிவிட்டபடியால் வேடர்கள் ஆட்டத்தை நிறுத்திவிட்டு, தங்களோடுகூடவே எப்பொழுதும் இருக்கவேண்டுமென்று எல்லா வேடர்களும் வேடத்திகளும் சுப்பிரமணியபிள்ளையை வேண்டிக்கொள்ள, சுப்பிரமணியபிள்ளை உங்கள் ஆகாரம் எங்களுக்கு ஒத்தாமையாகாது, பக்கத்திலுள்ள பட்டணத்தில் போய் இருக்கிறோம் அடிக்கடி உங்களை வந்து பார்க்கிறோம், அனுமதி கொடுங்கள் என்று கேட்க அவர்கள் தாங்கள் அணிந்துகொண்டிருந்த மிருகங்களின் எலும்பின் மாலைகளைக் கழட்டி சுப்பிரமணியபிள்ளை கழுத்தில் ஒவ்வொருவரும் போட்டார்கள். வேடத்தி தாங்கள் அணிந்திருந்த சங்குமணிகளைக் கழட்டி சாரதா கழுத்திலும் போட்டார்கள். இதற்குள் ஒரு வேடத்தி தன் காலில் கட்டிக்கொண்டிருந்த நத்தாங்கூடு சதங்கையைக் கழட்டி சாரதா காலில் கட்டினாள். இவர்கள், நமக்கு இதுவும் ஒரு அலங்காரமா? என்று மனதில் வருத்தம் அடைந்தவர்களாய் வேடர்களுக்கு சந்தோஷ மடைந்த பாவனையாய் சொல்லிவிட்டு தாங்கள் வேடன் வேடத்தியோடு பரணுக்குத் திரும்பிவிட்டார்கள். முன்போலவே வேடன்வேடத்தியுடைய உதவியால் பரணில் ஏறி அங்கே கொஞ்சம் ஆகாரம் செய்துவிட்டு இவர்கள் படுத்துக்கொள்ள புலித்தோல் மான் தோல்களை வேடன் கொடுக்க அதைப் போட்டுக்கொண்டு பரணில் படுத்துக் கொண்டார்கள். வேடன், தன் வில்லை கையில் எடுத்துக் கொண்டு பரண் வாசல்படியில் உட்கார்ந்துகொண்டான்; தாங்கள் ஏன் படுத்துக்கொள்ளவில்லையென்று சுப்பிரமணியபிள்ளை வேடனைக் கேட்க, ராத்திரியில் கரடி, கருங்குரங்கு முதலிய மரம் ஏறும் பிராணிகள் ஒரு சமயம் பரணில் வந்துவிடும் அவைகள் வாராமல் பாதுகார்த்துக் கொண்டிருக்கிறேன், தாங்கள் கவலையற்று சௌக்கியமாய் தூங்குங்கள் என்று வேடன் சொன்னான்.

இவன் இது சொன்னதும் சாரதாவும், சுப்பிரமணியப்
பிள்ளையும் கொஞ்சம் திகில் அடைந்தவர்களாகி தூக்கம்
வந்ததும் வராததுமாக படுத்துக்கொண்டிருந்தார்கள். ராத்
திரி முழுவதும் வேடன் பானைக் காத்துக் கொண்டிருந்து
பொழுதுவிடிந்தவுடன் படுத்துக்கொண்டு 10-நாழிகைவரை
யில் தூங்கினான். சாரதா, சுப்பிரமணியபிள்ளை இருவரும்
எழுந்திருந்து உட்கார்ந்திருந்தார்கள். வேடன் எழுந்தவுடன்
இவர்களை அழைத்துக் கொண்டு மலையில் இறங்கினான்.
அங்கே மலையிலிருந்து ஓடின நீரூற்றில், இவர்கள் யாவரும்
கால்கை அலம்பி, பல் தேய்த்தார்கள். வேடத்தி தன் கை
யில் கொண்டுவந்திருந்த பிருக பக்ஷணங்களை, வேடனும்
தானும் சாப்பிட்டு, இவர்களுக்கு தேனும் தினைமாவும் பிசை
ந்து கொடுத்தாள். அதை சாப்பிட்டுவிட்டு, அடுத்தபட்டணத்
தில் எங்களைக் கொண்டுபோய் விடவேண்டுமே என்று சுப்
பிரமணியப்பிள்ளை வேடனை கேட்டுக்கொள்ள, அவன் நல்ல
தென்று அவர்களை நல்ல பாதையோடு அழைத்துச் சென்
றான். வேடத்தியும் பின்னோடு சென்றாள். வெகுதூரம் நடந்த
பிற்பாடு மலையின் அடிவாரம் போய்ச் சேர்ந்தார்கள். நடுவே
சாரதா, நடக்க முடியவில்லையே என்று தவிக்கும்பொழுது
வேடத்தி சாரதாவை தூக்கிக்கொள்ள யத்தனிப்பாள். இப்
படியாக மத்தியானம் 12-மணிமுதல் மூன்றுமணி வரையில்
நடந்து, சாமுண்டிபட்டணம் போய்ச்சேர்ந்தார்கள். அங்கே
போனதும் நாங்கள் இனி போகிறோம், நீங்கள் திரும்பிப்
போங்கள் எமக்கு உங்களால், செய்யப்பட்ட நன்றியை ஒரு
நாளும் மறவோம், நாம் இந்த பட்டணத்திலேதான் கொஞ்ச
நாளைக்கு இருப்போம், நீங்கள் கடைகளுக்கு, சாமான்கள்
வாங்க எந்த காலத்தில் வந்தாலும் என்னைப் பார்க்காமல்
போகக்கூடாது என்று சொல்லவும், வேடன் தங்களை இந்த
பட்டணத்தில் எங்கே பார்ப்பேன் என்று கேட்க கடை
வீதிகளில், காலையிலும் சாயங்காலத்திலும் பிரதிதினமும்

வருவேன் அப்பொழுது என்னைப் பார்க்கலாம். அதற்குள் நான் எங்கேயாவது ஒரு விடுதியில் தங்கிவிடுவேன் அப்பொழுது தங்களை அழைத்துப் போய் என் வீட்டை காட்டிவிடுகிறேன் பிறகு அடிக்கடி நீங்கள் வரலாம் என்று சொல்ல, வேடன் இன்று பத்தாவது நாள் இந்தப் பட்டணத்து கடை வீதிக்கு வருகிறோம், அப்பொழுது தாங்கள் அவசியம் என்னை கடைத்தெருவில் பார்க்கவேண்டும், நாங்கள் போய் வருகிறோம் என, வேடத்தியும் சாரதாம்பாளிடம் சொல்லிக் கொண்டு திரும்பிப் போய்விட்டார்கள்.



## ஆறாம் அத்தியாயம்.



தெய்வத்தால் ஆகாதெனினும் முயற்சி
மெய் வருந்த கூலிதரும்.

சாரதாம்பாள், சுப்பிரமணியப்பிள்ளை வேடன் வேடத்தியிடம் விடை பெற்றுக்கொண்டு ஒரு தெருவின் வழியாய்ப் போகும்பொழுது, இவர்கள் போகிற சிங்காரத்தையும் இவர்களின் அழகையும், அந்த பட்டணத்திலுள்ள ஒவ்வொருவரும் பார்த்து,யாராய் இருக்கலாம் தேவாம்சம் அடைந்தவர்களோ எனத்திகைத்து எந்த ஊர் உங்களுக்கு என்று கேழ்க்க, சுப்பிரமணியப்பிள்ளை எங்களது ஊர் பக்ஷிராஜபுரம், தேசசஞ்சாரம் பண்ணவந்தோம், சாப்பிட சமீபத்தில் சத்திரம் இருக்கிறதா, என்று கேட்டதும் அவர்கள் அதோ தெரிகிறதே மெத்தைவீடு அதற்கு அடுத்தவீட்டில் சாப்பாடு போடுவார்கள் சாப்பிடலாம் போங்கள் என்றார்கள். சுப்பிரமணியபிள்ளை சாரதாம்பாளை பார்த்து சகியே, நாம் எப்படியோ நமது எண்ணப்படி புறப்பட்டு தெய்வசங்கல்பத்தால் சேர்ந்துவிட்டோம். இப்பொழுது என்னிடம், நான் கட்

டிக்கொண்டிருக்கும், வஸ்திரம் நீங்கலாக ஒரு பைசாவும் இல்லை. ராத்திரி சாப்பாட்டுக்குப் பணம் வேணுமே என்ன செய்கிறது என்று கேட்க,

சாரதாம்பாள் — தாங்கள் ஒன்றுக்கும் கவலைப்பட வேண்டாம், நான் புறப்படும்பொழுது, என் அண்ணுகோபால் பெட்டியிலிருந்து 4-பவுன் கொண்டு வந்திருக்கிறேன் அதை என் தலைப்பில் முடிந்திருக்கிறேன், இந்தாருங்கள் என்று முடிச்சை அவிழ்த்து பவுனைக் கொடுத்தாள்.

சுப்பிரமணியப்பிள்ளை — சாரதா, உன்னைப்போல் சமய சஞ்சீவி எனக்கு யார் இனி இருக்கப்போகிறார்கள், நான் உன்னையே நினைத்துக்கொண்டு, வழி தெரியாமல் திகைத்து நெறி கெட்டு ஓடிவரும்பொழுது என் முன்னால் தென்பட்டாய் என்று சொல்லி பவுனை வாங்கிக்கொண்டு, அந்தச்சத்திரம் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே போனதும், சாப்பாட்டுக்கு இன்னம் 2-நாழிகை ஆகும் என்று தெரிந்ததால், அப்படியே திண்ணையில் உட்கார்ந்துகொண்டு, கேழ்கிறவர்களுக்கெல்லாம் முன் சொன்னது போலவே, சொல்லிக் கொண்டிருக்கையில், சாப்பிட சத்திரப் பரிசாரகன் இவர்களைக் கூப்பிடவும் உள்ளே போய் சாப்பிட்டார்கள். சாப்பிட்டானதும் சுப்பிரமணியப்பிள்ளை ஒருவிந்தி ஒன்று ராத்திரி படுத்துக்கொள்ள மட்டும் கொடுத்தால் அதற்காக ஏதாவது வாடகை கொடுத்து விடுகிறோம் என்று சத்திரம் ஏஜண்டைக் கேட்க, அவன் வாசல் பக்கத்து அறை ஒன்றைக் கொடுத்து, படுத்துக்கொள்ள பாய் தலையணையும் கொடுத்தான். இவர்கள் அந்த அறையில் படுத்துக் கொண்டார்கள்.

சாரதாம்பாள், சுப்பிரமணியப் பிள்ளையைப் பார்த்து எனக்காக தாங்கள் ஆஸ்தியெல்லாம் தோர்த்துவிட்டு வந்தேன் என்றீர்களே, ஏன், எப்படி உங்கள் ஆஸ்திபோயிற்று என, சுப்பிரமணியப்பிள்ளை கண்மணி! உனது காகிதத்தை

சுவற்ணம் கொடுத்ததும் எனக்கு அடங்காத மகிழ்ச்சி உண்டாயிற்று. சௌந்தரராஜபிள்ளையையும் சுவற்ணம்பாளை யும் அக்கிரகாரத்து குப்பைய்யர் வீட்டில் சாப்பிடச்சொல்லி சாமான்களை அனுப்பிவிட்டு, நான் வீட்டிற்குச் சாப்பிடப் போனேன். எனது இளையதாயார் தன் அண்ணன் மகளை எனக்கு கலியாணம் செய்துவைக்க வேண்டிய பிரயத்தினம் பண்ணிக்கொண்டு என் தகப்பனுரை விட்டும் ஓயாது எனக் குச் சொல்லிவரச் செய்திருந்தாள். அதற்காகவே என்னி டம் பேசவேண்டுமென்ற எண்ணத்துடன், நான் சாப்பிட் டானதும் உன்னிடம் சில சமாசாரங்கள் பேசவேண்டிய தாய் இருக்கிறது சாயரக்ஷை, 5-மணிக்கு கட்டாயம் வர வேண்டுமென்று என்னுடன் சொன்னுள், சரி என்று சொல்லிவிட்டு என் பங்களாவிற்கு வந்து, அங்கிருந்தபடியே, அக்கிரகாரம்வந்து உனக்கு பதில் காகிதமும் எழுதிக்கொடுத் துவிட்டு, சௌந்தரராஜ பிள்ளையையும், சுவற்ணம்பாளையும், அனுப்பிவிட்டு வீட்டிற்குச்சென்றேன்; நான் போனதும் எனது இளையதாயார் எனக்கு பக்ஷணங்கள் முதலானது கொண்டுவந்து கொடுத்து ரொம்ப உபசாரம் பண்ணி ஆன பிறகு நான் சொல்வதை நீ என்றும் தட்டுகிறதில்லை சரி யென்றே ஒப்புக்கொள்வாய் என்றுள். நல்ல காரியமாய் இருந்தால் ஆக்ஷேபணை என்ன என்றேன்; உனக்கு கலியா ணம் பண்ணி என்கண்ணுல் பார்த்துகளிக்கவேண்டும் என்ற ஆவல் வெகுநாளாய் எனக்கு உண்டு உன் அப்பாவுக்குக் கூட அவ்வளவில்லை, ஒருசமயம் கிடக்கிறது போ பிறகு ஆகட்டுமே என்று சொல்லுகிறுர், நான் ஒரேபிடிவாதமாய் இந்தமாதத்திலேயே கலியாணம் பண்ணிவிடவேண்டும் என் றேன். ஆனல் அப்படியே முடித்துவிடுவோம் என்றுர். அதுவிஷயமாய் உன்னிடம் பிரஸ்தாபித்ததாயும் நீ என்ன வோ தகரார் சொன்னதாகவும் சொன்னுர்.

இப்பொழுது நீ என்னசொல்கிறாய் என்றாள். எனக்கு பதில்சொல்லத் தெரியவில்லை என்றாலும் சற்று யோசித்துப் பிறகு, உனதுசகோதரர் மகளை எனக்குக் கலியாணம் செய்வதாய் நீங்கள் தீர்மானித்திருப்பதை கேழ்விப்பட்டேன். அந்தப் பெண் எனக்கு இஷ்டமில்லை, அது விஷயம் உங்களுக்கே தெரியாதா? கேவலம் துஷ்டையையா எனக்கு கலியாணம் பண்ணவேண்டும், அந்தப் பெண்ணிற்கு 15-வயதாகியும், இன்னம் பேசக்கூட தெரியவில்லையே, எனக்கு வேண்டவே வேண்டாம், கலியாணம் பண்ணிவைக்க வேண்டுமென்ற பிரியம் இருக்குமானால், வேறே எங்கேயாவது பார்த்து லக்ஷணமான பெண்ணைய் நிச்சயஞ்செய்து கலியாணம்செய்துவையுங்கள் என்றேன். அதற்கவள் குடித்தனம் செய்ய வேண்டிய பெண்ணிற்கு அழகென்ன, உன் அப்பா ரொம்ப தேஜோவானே மகலக்ஷிமி மாதிரி இருக்கிற நான் அவருக்கு வாழ்க்கைப்படவில்லையா, அழகாய் இருந்தால் அவிசாரி போவாள். லக்ஷணமான ஸ்திரீ, புருஷனுக்குச் சத்துருவென்று நீ படித்ததில்லையா? ஓட்டைச் சட்டியில் சர்க்கரை இருக்கும் என்பதுபோல் அவளிடம் தான் அதிர்ஷ்டம் இருக்கும். தவிர அவாள் ஏழை பக்கத்தில் பெண்ணைவிட எனக்கு இஷ்டமில்லை என்றாள். அவாள் ஏழையாய் இருந்தால் 10,000 ரூபாய் பணம் கொடுப்போம் அதைக்கொண்டு கலியாணம் முதலியது செய்து கொள்ளட்டுமே என்றேன். கொடுக்கவும் வாங்கவும் உன்னவ்வளவு அதிகாரம் வந்துவிடவில்லை, உனக்கு இஷ்டம் உண்டா இல்லையா; மேலுக்கு அவளைக் கலியாணம் பண்ணிவைத்துவிட்டு, லக்ஷிமி மாதிரி இருக்கிற என்னைத்தான் பார்த்துக்கொள்ளேன், நீ சொல்கிறபடி எல்லாம் கேட்கிறேன் என்று, சற்று சிரித்துக்கொண்டு பரிகாசமாய் சொல்லும் பாவனையாய் சொன்னாள். சிவ-சிவ, கண்டபடி என்னிடம் பிதற்றவேண்டாம், நான் ஒருநாளும் ஒப்புக்கொள்ளேன் நான் போகிறேன் என்றேன். நீ ஒப்

புக்கொள்ளாத வரையில் உன்னை தகுந்தபடி செய்துவிடு வேன் என்றாள். எப்படிச் செய்தாலும் சரி நான் ஒப்புக் கொள்ளேன் என்றேன். உனக்கு பக்கத்திலும் கலியாணம் பண்ணுகிறதில்லை தடியன் மாதிரியாக உன்னை நிறுத்தி விடுகிறேன் என்று வீணாக சால்ஜாப் சொல்லாதே. நீ நன்றாகப் படித்தவன் பங்களாவில் போய் உட்கார்ந்துகொண்டு நன்றாக யோசனைபண்ணிப் பார். ராத்திரி சாப்பிட வரும் பொழுது உன் தகப்பனையும் வைத்துக்கொண்டு என் உடன்பிறந்தவர் வந்திருக்கிறார் அவரையும் வைத்துக் கொண்டு முடிவு சொல்லலாம் என்றாள். எனது தகப்பனார் சொன்னாலும் சரிதான், தகப்பனுக்குத் தகப்பன் இறந்து போனாரே அவர் வந்து சொன்னாலும் சரி, என் ஆஸ்தி முழுதலும் நான் இழந்தாலும் சரி, நான் ஒரு நாளும் அந்தப் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளப் போகிறதில்லை என்றேன். நீ இப்பொழுது சொன்னது சத்தியந் தானே என்றாள். வேறு அன்னிதா இல்லை யென்றேன். நான் உன்னை கொஞ்சத்தில் விடுகிறதில்லை ஒருகை பார்த்து விடுகிறேன் என்றாள். இஷ்டம் போல் செய்கிறதென்று எனது பங்களாவிற்கு வந்துவிட்டேன். நான் வந்த பிறகு எனது தகப்பனார் வந்தாராம் அவரிடம் எனது இளைய தாயார் சொல்லிக்கொண்டிருந்ததை என் சேவகன் ஒருவன் கேட்டிருந்து உடனே எனக்குத் தெரிவித்தான், அதையும் சொல்லுகிறேன் கேள் சாரதா.

அவர் வீட்டிற்குள் நுழைந்ததும், அந்த மகாபாதகி முகத்தில் படேர் படேரென்று அறைந்துகொண்டு என்னை அவமானப்படுத்தவா உங்களைத் தேடி வாழ்க்கைப்பட்டேன்! என்றாளாம். அவர் ஏன் நீ விசனப்படவேண்டும் உன்னை யார் என்ன சொன்னார்கள், அவர்களை இப்பொழுது சிக்ஷித்துவிட்டு மறுவேலை பார்க்கிறேன் என்றாராம்.

என்னை அவமானப்படுத்த வேறேயார் இருக்கிறார்கள். உங்கள் குலவழியே கெட்டது, என்று கோபமான அழுதா ளாம்.

சுப்பிரமணியன் உன்னை எதாவது கடுமையாய்ச்சொன் னானோ, அவன் ஒருநாளும் ஒருவரையும் நிந்திக்கமாட் டானே, மகாபுத்திமானாச்சுதே என்றாராம்.

நீங்கள்தான் உங்கள் புத்திரனை மெச்சவேண்டும், அவ னைப்போல்துரோகி, வெறியன் யார் இருப்பார்கள்? இதுவரை யில் குழந்தை குழந்தையென்று, நான் எண்ணி, அவனுக்கு உபசாரம் பண்ணினதற்கு பதிலாக என்னை, வெண்டுக்கு இழுக்க எண்ணங்கொண்டான். ஐயோ! எனக்கு அவனை நினைத்தால் மயிர் கூச்சல் அறைகிறதே என்று கைகளை முறித் துக் கொண்டாளாம்.

அவன் உன்னைப்பற்றியாவது வேறு எந்தஸ்திரியை பற்றியாவது, பேசமாட்டானே இந்த ஊர்முழுவதும் அவன் யோக்கியதை தெரியுமே, நீ எதையாவது நினைத்துக் கொண்டு புலம்பாதே என்றார்.

இதுவரையில் மானியாய் இருந்து விட்டேன் இனி மானக்குறைவு வந்து விட்டது புருஷனும் பிள்ளையிடம் பரிந்துபேசுகிறார், எனக்குப் பிரியமாய் பேசுகிறவர் உலகில் இல்லையே, நான் எங்கேயாவது ஓடி விடுகிறேன் என்றாளாம்.

நடந்ததைச் சொல் வீணாக குரோதம்கொண்டாடாதே அவனிடம் தப்பிதம் இருந்தால், தகுந்தபடி அவனை அழைத் து துரத்தி விடுகிறேன் என்றாராம். இன்று சாயந்தரம் 5-மணிக்கு வந்தான், குழந்தை வந்தானே என்று, ரவை தோசை வார்க்கச்சொல்லி, டீயும் வைத்துக் கொடுத்தேன் சம்பிரமாகச் சாப்பிட்டான்.

கல்யாணம் பண்ண நிச்சயம் செய்திருக்கிறது எனது சகோதரன் மகளை என்றேன், அந்த பெண் அழகில்லையே என்றான், குடித்தனம் பண்ணுகிறவளுக்கு அழகென்ன, உலகத்தில் லக்ஷணமான புருஷனுக்கெல்லாம் லக்ஷணமான பெண்ணைத்தானா கலியாணம் பண்ணுகிறார்கள், அழகுள்ளவனுக்கு அழகில்லாதபெண்ணும், அழகுள்ள பெண்ணுக்கு அவலக்ஷணமான புருஷனும், தவிர நெட்டையாய் இருப்பவனுக்கு குட்டையான பெண்ணும், குள்ளனுக்கு உயரமான பெண்ணும், இன்னம் அங்கஹீன முடையவளுக்கெல்லாம் கலியாணமும் நடக்கவில்லையா, எங்கும் ஒரே ஜோடியாகவா இருக்கிறது, சகஜந்தானே என்றேன். நீ சொல்வதற்காக வேணுமானால் கலியாணம் பண்ணிக்கொண்டு அதிரூபாவதியாய் இருக்கிற உன்னைப்பார்த்து சந்தோஷப் படுகிறேன் என் மனதுபோல் நீயும் இருப்பாய் என்றான். எனக்கு உடம்பு படபடத்துபோய் என்னடா சொன்னாய் உன் தகப்பனார் வரட்டும் சொல்லுகிறேன் என்றேன், ஓடி விட்டான் என்றாளாம்.

அவன் அப்படிக்கு உன்பேரில் ஒரு வித்தியாசமான எண்ணங்கொண்டு சொல்லி இருக்கமாட்டான் என்றாராம்.

நியாசமா ? என்னை வெறிக்கப் பார்த்த பார்வையிலேயே நான் கண்டுபிடித்துக்கொண்டேனே அவன் கெட்ட எண்ணத்தை என்றாளாம்.

சரியாய், நான் விசாரிக்கிறேன் என்று சொல்லி சாப்பிடப் போய்விட்டாராம். இந்தசமாசாரம் சேவகன் சொல்லி நான் கேட்டதும் எனக்கு ஒன்றும் தோன்றவில்லை, ராத்திரி வீட்டிற்கு சாப்பிடப் போகாமல், என்னிடத் திருந்த பிஸ்கோத்தை தின்றுவிட்டு படுத்துக் கொண்டேன். மறு

நாள் காலையில் எனது தகப்பனார் பங்களாவிற்கு வந்தார். அவர் வந்ததும் நான் எழுந்திருந்து ஒரு பக்கமாய் நின்று கொண்டிருந்தேன்.

அவர் என்னைப் பார்த்து ஏண்டா பாமாண்டாளா? உன்னை இத்தனை நாளாய் என் கண்ணைப்போல் வைத்திருந்ததற்கு அடையாளமாய் வளர்த்தகிடா மாரில் பாய்ந்தது போல உன் துஷ்ட செய்கையை என்னிடமே காட்டிவிட்டாய் என்று படபடப்பாய் பேசினார். நான் சிறு தேசகாலம் பேசாமல் இருந்துவிட்டு ஒரு தப்பிதமும் செய்யவில்லை, நான் தவறுதல் செய்ததாக உங்களுக்கு எண்ணம் உண்டாயிருந்தால் என்னை எந்தசிக்ஷை செய்யவேண்டுமோ அதைச் செய்யுங்கள் என்றேன், அவர் வீட்டிற்குவா உன் இளைய தாயார் முன்னிலையில் நேரில் ரூபிக்கிறேன் என்றார். ரூபிப்பானேன், நான் குற்றம் செய்ததாக தங்களுக்குத் தோன்றி விட்டது, என்னை இம்சை பண்ணாமல் துரத்தி விடுங்கள் நான் எங்கேயாவது ஓடிவிடுகிறேன் என்றேன். ஆனால் நீ, ஒன்றும் அவளிடம் பேசவில்லையோ என்றார் ஆம் பேசினேன், அது தப்புதான் என்றேன். அவர் சற்று தயங்கி, ஒரு சேவகனைக் கூப்பிட்டு என் இளையதாயாரை அழைத்து வரச்சொன்னார் அவளும் வந்தாள். அவளிடம் என் தகப்பனார் நீ ராத்திரி வித்தியாசமான எண்ணம் உன் விஷயத்தில் சுப்பிரமணியன் நினைத்ததாகச் சொன்னாய், அவன் சொல்வதைப்பார்த்தால் வித்தியாசமாக உன்னைப் பேசி இருப்பான் என்று நான் நினைக்கவில்லை, என்ன சொல்லுகிறாய் என்றார்.

சிறியதாயார், என் தகப்பனாரைப்பார்த்து உங்களுக்கு வயதாய் விட்டதால் புத்தியும் கெட்டுப் போய்விட்டது, ஏதோ நமதுகுழந்தை தப்பித்தவறி சொல்லிவிட்டால் அதற்காக நான் கோபித்துக்கொள்ளேன் என்று அவனைக் கண்டிக்க வந்துவிட்டீர்களே! ரொம்ப நன்றாக இருக்கிறது.

துடைப்புண்ணை வெளிக்குக் காட்டுவாருண்டோ ஒவ்வொரு வீடுகளில் காதில் கேழ்க்கக் கூடாத செய்கைகளெல்லாம் நடக்கிறதே அதை யெல்லாம் உங்களைப்போல், நடுச் சந்தியில் பேசிக்கொண்டா இருக்கிறார்கள். அவனுக்குக்கலியாண விஷயமாய் சமாதானப்படுத்தி அழைத்து வாருங்கள், நமக்கிருப்பது ஒரு பிள்ளை அவனையும் துரத்திவிடவா பார்த்து விட்டீர்கள் போதும் உங்களுக்கு பிள்ளையின் பேரில் இருக்கிற பிரியம் என்று சொல்லிவிட்டு என்னிடம் வந்தாள். நான் அவளிடம் முகம் கொடாது மௌனமாய் நின்றேன். என் கிட்டவந்து பார்த்தாயா? என்னுடைய சாமர்த்தியத்தை, உனக்கு அதில் கொஞ்சம் கோடி காண்பித்தேன், மறுபடியும் உன்னிடம் இருக்கும் அன்பால் மாற்றிவிட்டேனே, இதற்கு மேலாசக்கூட செய்யத் தெரியும், புத்தியிருந்தால் பிழைத்துக்கொள் என்றாள். இதற்குமேல் எனக்கு என்ன வரப்போகிறது உன்னால் ஆகும் சாமர்த்தியத்தைத் தெரிவித்துவிடு என்றேன். அதற்குள் என் தகப்பனார் வந்து அவள் கல்யாணம் பண்ணவேண்டும் என்றுனே உன்னிடத்தில் முன்னமேயே சொன்னேன் நீ ஒன்றும் சரியான பதில் சொல்லவில்லை நீ கட்டாயம் அந்தப் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டியதுதான் என்றார். கலியாணப் பேச்சு எடுக்கும்பொழுது எனக்கு வந்த அபக்கியாதி போதும் என்னைவிட்டுவிடுங்கள், நான் எங்கேயாவது போகிறேன் என்றேன், உனக்கென்ன அபக்கியாதி வந்தது நீ எங்கே போகிறது, வேண்டாமடா சுப்பிரமணியா சொன்னபடி கேள், நீ சொல்வதை நான் கேட்கிறேன் என்றார்.

இப்படியாக நாங்கள் தகரார் பண்ணிக் கொண்டு பேச்சு முடிவதற்கு 1-மணி வரையில் ஆகிவிட்டது. என்னை கொஞ்சத்தில் இளையதாயார் விடவில்லை, எனக்கு அவளிடம் இருந்த கௌரவம் எல்லாம் போய்விட்டது. கடைசியாக

உனக்கு ஒரு சொத்தும் வேண்டாம் என்றுயே அந்தப்படி
என் பேருக்கு எழுதிக்கொடுத்துவிட்டு நீ எங்கே வேணுமா
னாலும்போ என்றாள். என் தகப்பனார், என் அருமைக்
குழந்தைக்கு அனாதப்பிரியம்போல் நாம் பக்கத்தில் கலியா
ணம் செய்துவைப்போம். அவன் எங்கேயாவது ஓடிவிட்
டால் என் உயிர் வைத்துக்கொண்டு ஒரு க்ஷணமாவது
இருப்பேனே, அவன் போகிறேன் என்றபொழுது என்
மனம் பதைக்கிறது, வேணுமானால் நீ எங்கேயாவது தொலைந்து
போடி பெண்டி என்று அவளை வைதுவிட்டு எழுந்துபோய்
விட்டார், மறுபடியும் என் இளையதாயார் என் கிட்டவந்து
என் கையை பிடித்துக்கொண்டு, வேண்டாமடா உன்னி
டம்கொஞ்சகாலமாய்ப்பிரியம் வந்துவிட்டது என்னை, அணைந்து
கொள்ளேன் ? நான் நினைத்தபடி அந்த பெண்ணை கலியா
ணம் பண்ணிவிட்டால் பிறகு எனது எண்ணம்போல் உன்
னிடம் வாழலாம் என்று தான் அப்படிச் செய்யத் தீர்மா
னித்தேன், என் மனதை பூர்த்தி பண்ணுவியுன், நீ பிரிந்து
போய்விடுவாய் மகா பாவம் உனக்கு வந்துசம்பவிக்கும்
என்று சொல்லி என்னை கட்டிக்கொண்டாள். அடி பாவி!
பெற்ற தாயாயிருந்த நீ என்னை மகா பாதகத்திற்கு உள்ளாக்க
எத்தனிக்காதே, நான் ஒருக்காலும் உன் மனப்படி நடவேன்
என்று கையை எடுத்துக்கூப்பினேன். ஆனால் என்னோடு
இருக்க உனக்கு இஷ்டமில்லையோ என்றாள். எனக்கு மகா
துக்கம் உண்டாகி இரண்டு காதையும் பொத்திக் கொண்டு
ஒரு நாளும் உன்னை விரும்பேன் அது மகா பாவமென்பது
உனக்குத் தெரியாதா? என்னை வீணாக இம்சை செய்யாதே,
தாயே என்று நமஸ்காரம் பண்ணினேன்; உன்னை என்றைக்
கும் நான் விடுகிறதில்லை என்றாள், என் ஆஸ்தியெல்லாம்
உனக்கு நான் சொன்னபடி எழுதிக் கொடுத்து விடுகிறேன்
உன் மனம்போனபடி நீ யிரு, நான் எங்கேயாவது போய்
விடுகிறேன் என்றேன். எனக்கு வேண்டாதவனாகி விட்டாய்

எங்கே வேணுமானாலும் தொலைந்துவிடு நீ சொன்னபடி எழுதிக்கொடுத்து விட்டு, இப்பொழுதே போய்விடு என்றாள்.

(சாரதா ! நான் உனக்குக் கடிதம் எழுதினேனே அப்பொழுது எனக்கு இந்தமாதிரிதான் முடியும் என்ற தீர்மானத்தின் பேரில்தான் எழுதினேன்.) அவள் சொன்னபடி காகிதத்தில், என் தகப்பனாருக்குப் பிறகு எனக்கு கிடைக்கும் ஆஸ்திகள் யாவும், இப்பொழுது என்னிடம் இருக்கும் சொத்துக்களும் என்னுடைய இளையதாயார் சிவகாமி ஆய்ச்சி இதேர்ச்சையாய் அனுபவித்துக் கொள்ளுகிறது என்று எழுதிக் கொடுத்து விட்டு, நான் வெளியே போக வேண்டியதற்காக, சில உடுப்புகளும் கொஞ்சம் பணமும் எடுத்துக் கொள்ள எத்தனிக்கையில் இளையதாயார் ஓடி வந்து, உன் சொத்துக்களைக் கூட எனக்கு எழுதிக்கொடுத்து விட்டு மறுபடியும் பெட்டியை ஏன் திறக்கிறாய் திறவுகோலை என்னிடம் கொடு என்று பிடுங்கிக்கொண்டாள். நான் சொன்னவார்த்தைக்கு அன்னிதா இல்லை வெளியே போகிறபடியால் ஒரு சட்டையும், மேல் உத்தரீயம் ஒன்றும், 1-நாள் படிச்சிலவுக்கு ஆகும்படி ஒரு ரூபாய் பணம் மட்டும் கொடு என்றேன். ஓடிப்போகிற உனக்கு பணம் ஏன் சட்டைகள் ஏன் ஒன்றும் கொடுக்க மாட்டேன் உன் காது கடுக்கனையும் கழட்டி கீழவை என்றாள். அந்த கடுக்கன் ரூ. 1,500-க்கு சென்ற வருஷந்தான் வாங்கப்பட்டது, அதையும் கழட்டிக் கொடுத்து விட்டேன். அப்பொழுது என்னிடம் நின்ற வேலைக்காரர்கள் அதிக மும்மரமாய் அவளை ஒரே அடியாய் அடித்துப்போட எத்தனித்தார்கள். இவர்களை அடக்கி விட்டு, நான் கிளம்பும் பொழுது எல்லோரும் வந்து மறித்துக்கொண்டு போகக்கூடாது என்று அழுதார்கள். எனக்கும் விசனம் வந்துவிட்டது என்றாலும் பங்களாவை விட்டு வெளிக்கிளம்பி வாசலில் வந்து விட்டேன். உட

ளை எனது இளையதாயார் பங்களாவை பூட்டிக்கொண்டு வீட்டிற்குப் போய்விட்டாள்.

எனக்கும் இளைய தாயாருக்கும் நடந்த விர்த்தாந்தங்களை என்னுடைய வேலைக்காரன் ஒருவன் போய் சொல்லி இருக்கலாம். அவர் அலறிக்கொண்டு அடி மகா பாபி மோச சம்பன்னமிறுமியே என்று இளையதாயாரை வைதுக்கொண்டே ஓடி வந்தார். இவர் என்னை மதிப்பார் என்று நான் முன்னோக்கிச் சென்றேன். அடே கண்மணி, பிறந்தாய் என்று என்னைக் கட்டிப்பிடிக்கொண்டு என் முன்னால் வந்து திடீரென விழுந்துவிட்டார். இந்த சமாசாரம் ஊர் முழுதிலும் தெரிந்து ஒரே கும்பலாய் கூடிவிட்டார்கள். எனக்காக வியசனப்படாதவர்கள் ஒருவரும் இல்லை, உடனே என் தகப்பனாரை தூக்கினேன், அவருக்கு ஸ்மரணை தப்பிப்போய் விட்டது.

பக்கத்தில் நின்று கொண்டிருந்தவர்கள் விசிறியும் தாகத்திற்கும் கொண்டுவந்து கொடுத்தும் ஆசுவாசப் படுத்தினார்கள். நான் அழுதுகொண்டே நின்றேன், என் தகப்பனார் என்னைப்பார்த்து நானும் உன்னோடு வருகிறேன், என் துரையே என்னை விட்டுப் போகாதேயடா! உனக்கு புண்ணியமுண்டு, தயவு செய்து என்னை அநாதியாய் தவிக்க விட்டு நீ போனால் நான் பிராணனை விடுவேனடா! உன்னை அரை நிமிஷம் கூட விட்டுப் பிரியமாட்டேன். என் உயிர் துடிக்குதடா என் செல்வமே! எத்தனை பாடுபட்டுன்னை வளர்த்தேனடா கண்மணி! அந்த முண்டை, ஆஸ்தியெல்லாம் வைத்துக்கொண்டு அமோகமாய் வாழட்டும் நாம் எங்கேயாவது பிச்சை எடுத்து சாப்பிட்டுக்கொண்டு இருப்போமடா, வயோதிகமான என்னை தவிக்கச் செய்யாதே, அந்த துரோகி உன்னை ஓடி விடும்படியான இம்சை செய்து விட்டாளே! அவள் பேச்சைக்கேட்டு உத்தம புருஷனான உன்னை கோபித்துக் கொண்டேனே! அவளுடன் நான் சேர்ந்திருக்க

மாட்டேன். நான் இறந்த பிறகு என்னைக் கொளுத்திவிட்டு அப்புறம் உன் மனம்போனபடி நடக்கலாம் என்று இன்னும் பலமாதிரியாகச் சொன்னார். அதுகள் எனக்கு ஞாபகப்பட வில்லை, ஊரில் உள்ளவர்கள், உன் இளையதாயாரை இப்பொழுதே விரட்டி விடுகிறோம், இந்த அல்பமான ஸ்திரீயின் பொருட்டு நீ போவது காரியமல்ல என்று என்னை மறித்து பிடித்து இழுத்துக்கொண்டு வீட்டிற்குப் போனார்கள். நான் வரமாட்டேன் என்று என்ன சொல்லியும் கேழ்க்காமல் திருப்பி என்னை அழைத்துப் போகும்பொழுது சாயங்காலம் 5-மணி யிருக்கும். மணி ஆய்விட்டதே உன்கதி எப்படி யிருக்குமோ தெரியவில்லை 8-மணிக்குள் வருகிறேன் என்று கடிதம் யெழுதிக்கொடுத்து விட்டேனே, நான் வராததைப்பற்றி நான் எழுதினபடி நீ மறுவேஷம் பூண்டு சுவர்ணம்பாள் வீட்டிலிருந்து எப்படி தவிக்கிறாயோ என்ற வியாகூல மதிகமாய்விட்டது. ஒரு சமயம் நான்வர இல்லை யென்று நிச்சயமாய் உனக்குத் தெரிந்து, நீ வீட்டிற்குப்போய் ஜமீன்தாரை கலியாணம் பண்ணிக்கொண்டு சௌக்கியமாயிருப்பாயா? அல்லது இங்கேயே புறப்பட்டுத் தான் வருவாயோ என்ற ஏக்கம் அதிகமாய் உன் ஞாபகமாகவே நான் திரும்பிப்போகிற பிரக்ஞையும் இல்லாமல் இருந்தேன். என்னை வீட்டிற்கு அழைத்துப்போகும் பொழுது எங்கள் பங்காளி வீட்டுவாசல் போனதும் நான் வீட்டிற்கு வரமாட்டேன் இங்கேயே இருக்கிறேன், நாளையதினம் வீட்டிற்கு வருகிறேன் என்று பிடிவாதமாய்ச் சொல்லி அந்த வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்துகொண்டேன். என் தகப்பனார் அவரால் ஆனமட்டும் உபசாரம் பண்ணினார், ஒரே பிடிவாதமாய் இருந்து விட்டேன். பிறகு என் தகப்பனாரும், எனது வேலைக்காரர்கள் இரண்டொருவர்மட்டும் என்னோடுகூடவே இருந்தார்கள். இவர்கள் என்னைவிட்டு ஒரு

நிமிஷமாவது விலகிப் போகவில்லை. எனக்கு அண்ணன் முறையாக இருக்கிற எனது பங்காளி ராத்திரி சாப்பிடச் சொல்லி பிடிவாதப் படுத்தினார். நான் சாப்பிடாவிட்டால் என்னோடு கூட இருக்கிறவர்களும் பட்டினியாய்க் கிடப்பார்கள் என்று எண்ணி உள்ளேபோய் இலையில் உட்கார்ந்து எழுந்தேன்.

ஊரார் வைவார்கள் என்ற எண்ணத்தாலோ? அல்லது என் தகப்பனார் தன்னை வீட்டைவிட்டுத் துரத்திவிடுவார் என்ற எண்ணத்தாலோ, எனது சிறியதாயார் ஓடிவந்து என் முன்னால் எங்களைத் தவிக்கவிட்டு நீ போகலாமா? என் பிராணனை உன் முன்னால் விட்டுவிடுகிறேன் என்று கோவென்று ஒப்பாரிவைத்து அழுதாள். உன்னிடம் விளையாட்டாக, நீ எங்கேதான் போவாய் பார்ப்போம் என்று எழுதிவாங்கினேனே ஒழிய என் மனப்பூர்த்தியாய் வித்தியாசமான எண்ணங்கொண்டு வாங்க இல்லை. இந்தா உனது பத்திரம். நீ க்ஷேமமாய் வாழ்ந்து கொண்டிருக்க, உன்னுடைய பிரபாவத்தைப்பார்த்து ஆனந்திக்காமல் எனக்குஆஸ்திகள் ஏன்? நாங்கள் எங்கேயாவது ஓடி விடுகிறோம், நீ சௌக்கியமாய் இரு என்று அலறினாள். பத்திரத்தை மாத்திரம் கொடுக்கிற பாவனையாய் சொன்னாளே ஒழிய, அதை என்னிடம் கொடுக்கவில்லை. அவள் சொல்வதற்கெல்லாம் நான் ஒன்றும் பதில் சொல்லாமல் அந்தவீட்டின் இரேழியில், தரையில் படுத்துக் கொண்டேன், என் தகப்பனாரும் என்னோடு படுத்துக்கொண்டார். என் இளையதாயார், இரேழியின்கீழ்ப்படுத்துக்கொண்டாள். என் அண்ணன் படுக்கை கொண்டுவந்து கொடுத்து அதை போட்டுக்கொள்ளச் சொல்லி என்னை தொந்தரவு பண்ணினான். வேண்டாம் என்றே சொல்லி விட்டேன். என் தகப்பனாரும், இளையதாயும் அயர்ந்து தூங்கும் சமயம் பார்த்துக் கொண்டே இருந்தேன். வீட்டிற்குள் இருந்த

கடிகாரம் 12-மணி அடித்ததும், மெதுவாக எழுந்து கதவைத் திறந்து சற்று நின்றேன் ஒன்றும் பேச்சில்லை, வாசலில் வந்து நின்று பார்த்தேன் ஒருவரும் விழித்துக் கொள்ளவில்லை, அப்படியே வேகமாய் புறப்பட்டு ரோட்டிற்கு வந்து அங்கிருந்தபடி, ஒரு சமயம் யாராவது விழித்துக்கொண்டு என்னைத் தேடினாலும் அவர்கள் காணுமல் இருக்கும்படி குறுக்கே வயல் பாதையில் இறங்கி விட்டேன், கொஞ்சதூரம் வந்ததும், நான் பக்ஷிராஜபுரம் வருகிறது சுவற்றும்பாள் வீட்டில் தங்கி உன்னுடைய கலியாணவைபவத்தை பார்த்துவிட்டு மறுநாள் கிளம்பி எங்கேயாவது ஓட வேண்டியதுதான் எனத் நிர்மானித்து பக்ஷிராஜபுரம் இருக்கிற திக்கு பக்கமாய் திரும்பி நடந்தேன். இருட்டு அகோரமாய் இருந்ததில் வழிதெரியவில்லை. காலிலும் ஜோடு இல்லாததால் முட்கள் தைத்து அதிக இம்சை உண்டாயிற்று. என்ன கஷ்டப்பட்டு நான் நடப்பதில் சளைக்காது கடைசியாக காட்டிற்கு வந்தேன். மனதில் மாத்திரம் பக்ஷிராஜபுரம் போகிறேன் என்று நினைத்தேனே ஒழிய, இன்ன வழியாய் போகிறேன் என்று தெரியவில்லை. காட்டில் ஒரு பாதை ஒன்று தென்பட அதைப் பிடித்துக்கொண்டு நெடுக வரும்பொழுது, மலையடிவாரம் வந்து சேர்ந்தேன். சந்திரனும் உதயமாயினான். மலைமேல் ஏறினேன், கால்நடக்கமுடியவில்லை, உட்கார்ந்தேன், பொழுது விடிவதற்குள் பக்ஷிராஜபுரம்போகவேணுமே என்ற எண்ணம் மேலிடஎழுந்து மலையின்மேல் ஏறினேன். மலையுச்சிக்குவந்து அவ்விடம் சற்று உட்கார்ந்தேன், மறுபடியும் எழுந்து இறங்கும் வழியைக் கண்டுபிடித்தேன் சூரியனும் உதயமாயினன். நாலாபக்கமும் பார்க்கும்பொழுது பக்ஷிராஜபுரம் எங்கே இருக்கிறது? நான் எங்கேயோ வந்துவிட்டேனே! ஒருவழியும் தெரியவில்லையே! என்ற துக்கத்துடன் மலையிலிருந்து கீழே இறங்கும் பொழுது யாரையாவது காணமாட்டோமா? நமக்கு வழி

சொல்லமாட்டார்களா என்று வியாகூலத்துடன் இறங்கும்
பொழுது நீ கோடையின் பக்கத்தில் படுத்திருந்த உன்னைக்
கண்டு உன் காலில் கடித்திருந்த பாம்பைப் பிடுங்கி எறிந்து
விட்டு உன் சட்டையிலிருந்த வெட்டரால், உன்னை அடை
யாளம் கண்டு பிடித்து, உன்னை என்மேல் சாய்த்துக்கொண்டு
அழுதுகொண்டிருக்கும்பொழுது, வேடன் வந்தான் — அவனை
கேட்கிறேன் அவன், உனக்கு வெப்பாலை அடித்து மருந்து
போட்டு எழுப்பினான். நீ எழுந்ததும் என்னைப் பார்க்காது
வேடனோடு உல்லாசமாய்ப் பேசிக்கொண்டு அவன்பின் போக
யத்தனித்தாய் என்றார்.

சாரதாம்பாள், வேடன் கழுத்தில், ஆபரணங்களும்
இடுப்பில் கோவணம் கட்டிக்கொண்டு அதிக ரூபவா
னாய் இருந்தான் அதனால் அவன்பேரில் பிரியப்பட்டுப் போ
னேன் என, சுப்பிரமணியப்பிள்ளை சிரித்துக்கொண்டு நீ
வீட்டைவிட்டு எப்படிக் கிளம்பினாய், உன் கலியாணம் என்ன
மாதிரியாய் முடிந்தது என்று கேட்க, சாரதாம்பாள் தன்வர
லாற்றைச் சொன்னாள். பிறகு ஒருவருக்கொருவர் ராத்திரி
அநேக தேசகாலம் பேசிக்கொண்டிருந்துவிட்டு, தூங்கிப்
போய்விட்டார்கள். மறுநாட் காலையில் இவர்கள் ஒரு வீடு
ஜாகை பார்த்துக்கொண்டு அந்த வீட்டிற்குப் போனார்கள்.
சாரதாம்பாளோடு துணைக்கு இருக்கும்படி ஒரு உத்தம
வேலைக்காரி நியமிக்கப்பட்டாள். சுப்பிரமணியப்பிள்ளை
யிடம் இருந்த பவுனை மாற்றி வீட்டிற்கு வேண்டிய பாத்தி
ரங்களும் அரிசி சாமான்களும் வாங்கப்பட்டது. தனக்கு
சட்டை மேல் வேஷ்டி முதலியவைகளும் வாங்கிக்கொண்
டார். அன்று வீட்டிற்கு வேண்டியவைகளை யெல்லாம்
சேகரம் செய்துகொண்டிருப்பதே வேலையாய் இருந்தது.
மறுநாள் சுப்பிரமணியப்பிள்ளை ரீடிங்ரூம் இருக்கிற இடம்
போய் விசாரித்தால் ஏதாவது விசேஷம் தெரியாதா?

என்று போய் பார்க்கையில், தினப்பதிப்பு பத்திரிகையில், கண்ட்ரோலர்ஸ் ஆபீசில், 30-ரூபாய் சமபளத்திற்கு B. A. பட்டம் பெற்ற பிராமணர்கள் அல்லாதவர்கள் தேவை என்று எழுதப்பட்டிருந்தது. அதைத்தெரிந்துகொண்டு வீட்டிற்கு வந்தார், சாரதாம்பாளிடம் சொல்லிவிட்டு ஒரு விண்ணப்பம் எழுதி, உடனே தபாலில் போட்டுவிட்டார். சாரதாம்பாள் சுப்பிரமணியப்பிள்ளை இருவரும், கலியாணம் செய்துகொண்ட பிறகுதான், தாங்கள் இல்லற தர்மங்களை அனுசரிக்க வேண்டுமே ஒழிய வேறு கூடாது என்று ஒவ்வொருவர்களும் தீர்மானித்து அது சம்பந்தமாகப் பேசாமலே சகோதர பாவனையாய் இருந்துவிட்டார்கள்.

இரண்டு தினத்திற்கெல்லாம் சுப்பிரமணியப்பிள்ளைக்கு வேலைக்கு உத்திரவு வந்துவிட்டது, அந்த ஆபீசுக்கு தன் உத்திரவோடு போய் பெரிய துரையைப் பார்த்தார். அவர் சுப்பிரமணியப்பிள்ளையோடு பேசிப் பார்த்து சுப்பிரமணியபிள்ளையின் கம்பீரமான பேச்சுக்கும், ராஜ வசீகரமான முகத்திற்கும், இவர் நம்ம ஆபீசுக்கு வாய்த்தது அதிக மேன்மையானது என சந்தோஷப்பட்டு தங்களுக்கு இந்த மாதத்திற்கு மட்டும் 30-ரூபாய் சம்பளம் இருக்கட்டும், அடுத்த மாதத்தில் உயர்த்திவிடுகிறேன், வெலையில் போய் இரும் என்றார். சுப்பிரமணியப்பிள்ளை வேலையை ஒப்புக்கொண்டு செம்மையாகவே பார்த்துவந்தார். வரும் காகிதங்களைப் பார்க்கவும், வெளியூர்களுக்கு உத்தரவு அனுப்புவதுமான வேலையானதால், தான் போவதற்கு முந்தி கட்டுக்கட்டாக கட்டப்பட்டிருக்கிற காகிதங்களை யெல்லாம் இரண்டு நாளில் பைசல் செய்துவிட்டு, அன்றடம்வரும் கடிதங்களை உடனுக்குடனே பதில் அனுப்பிவிடுவார். ஆபீசில் ஒரு மணி தான் இவருக்கு வேலை இருக்கும், அதற்குமேல் மற்ற கிளார்க்குகளுக்கெல்லாம் உதவி புரிவார், இப்படியாக அந்த

ஆபீசு வேலை முழுமையும் தானே பார்க்கவும், சந்தேகிக்கக் கூடிய விஷயங்களை, தான் சீர் ஆக்ஷேபணையன்றியில் அதற்கு பதில் சொல்லவும் இருந்தார். ஆபீசிலுள்ள மற்ற உத்தியோகஸ்தர்கள், இவரது வேலைக்கு மெச்சிக் கொண்டும், முதல் கிளார்க்கு கூட இவரிடத்தில் சற்று பயப்படவும், துரையும் இவரிடம் சற்று யோசித்துப் பேசவும், அந்த கச்சேரியில் இருந்த ஊழல் முழுவதும் நீங்கி நல்ல நிலைமைக்கு இவராலேயே வந்தது என்றால் கேழ்ப்பானேன். கச்சேரிக்கு போன காலம் தவிர மற்றக் காலத்தில் சாரதாம்பாளிடம் பேசிக்கொண்டும், பத்திரிகைகளிலுள்ள விசேஷங்களை சாரதாம்பாளுக்குப் படித்துக் காண்பிப்பதும், ஆபீசில் நடக்கும் சங்கதிகளை சாரதாம்பாளிடம் சொல்லவும், அதற்குசரியான பதில் சாரதாம்பாள் சொல்லக்கேட்டு சந்தோஷிப்பதும், சில சமயங்களில் சாரதாவுக்கு பாடம் சொல்லிக்கொடுத்தும் இருக்கையில், ஒரு மாதத்திற்குமேல் ஆகிவிட்டது. சந்தோஷமாய் வசித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் விசாரமெல்லாம் மறந்துவிட்டார்கள், தாங்கள் கலியாணம் செய்து கொண்டு வாழ்வதை கொஞ்சம் கூட நினைக்கவே இல்லை. அது விஷயமாய் பேசவும் ஒருவருக்கொருவர் சங்கைப்பட்டுக்கொண்டு இருந்தார்கள்.



## ஏழாம் அத்தியாயம்.



இருமனப் பெண்டிரும் கள்ளுமங் கவரும்
திரு நீக்கப்பட்டார் தொடர்பு.

சுப்பிரமணியப்பிள்ளை வசித்த வீட்டிற்கு பக்கத்தில் ஒரு தாசி இருந்தாள். அவள் பெயர் சுந்தரி. அவளுக்கு ஒரே ஒரு பெண். அந்தப்பெண் அதி ரூபவதியாயும் மிகுந்த புத்திசாலியாயும் இருந்தாள். தவிர அந்தப் பெண்ணிற்கு

அபிநய சாஸ்திரமும், பாட்டுபாடவும், வீணை முதலியது வாசிக்கவும் தெரியும்; அவள் பெயர் சிகாமணி. தன் தாயி னால் அதிக செல்வமாகவே வளர்க்கப்பட்டுவந்தாள். அவ ளுக்கு சரியான வயது வந்தபிறகு பெரிய பிரபு இவளை இச்சிக்க வில்லை. ஆதலின் சுவல்பமானவர்களிடம் தன் பெண்ணை அனுப்பி ஜீவனம் செய்துகொண்டுவந்தாள். இப் படி இருக்கையில், அந்த ஊரிலேயே பெரிய பிரபு ஒரு வர் இருந்தார். அவர் பெயர் நாகரத்தினம்பிள்ளை, மகாபுத்தி மான், நன்றாகப் படித்தவர். ஒரு நாள் சிகாமணி இருக் கும் தெருவீதியோடு போகையில், வாசல்படியில் நின்று கொண்டிருந்த சிகாமணியைப் பார்த்து சற்றே தயங்கினவ ராய் நின்றார். பக்கத்தில் உட்கார்ந்திருந்த தாய்க் கிழவி சுந்தரி, என் பிள்ளையவாள் வரலாமே என, சரியென்று வீட் டிற்குள் போனார். இவர்போய் உட்கார்ந்ததும், தாம்பூலம் முதலியது கொடுத்து உபசரித்தாள். நாகரத்தினப் பிள்ளை நாம் என்ன ஒரு நாளும் இல்லாமல், இந்த தப்பான எண் ணம் வந்து தயங்கினோம். என்றாலும் வீட்டிற்குள் வந்து விட்டு வெறுமையே போகக்கூடாது. இந்த கிழவியை ஏதா வதுகேட்டு வர்ப்பொறுப்பு அறிவோம் என்று நினைத்தான்.

நாகரத்தினப்பிள்ளை — ஏ, கிழவி, உன் பெயரென்ன?

கிழவி — என் பெயர், சுந்தரி.

நாகரத்தினப்பிள்ளை — உனக்கு இந்த ஒரு பெண் தானோ வேறு பெண்களுண்டோ?

சுந்தரி — இல்லை மகாராஜா, இந்த் ஒரு பிச்சை தான் கடவுள் கொடுத்தார் அதை பல்லிகைப் புஷ்பத்தோடு வைத் துக் கொண்டிருக்கிறேன்.

நாகரத்தினப்பிள்ளை — இவள் பால்யை மாதிரி காண் கிறது, இன்னம் பெரியவளாக வில்லையோ?

சுந்தரி — பெரியவனாகி ஒரு வருஷத்திற்கு மேல் ஆகிவிட்டது, தகுந்த பிரபுக்கள் ஒருவரும் அவனுக்கு பிடிக்கவில்லை இன்னம் என்னமோ வர்ணிக்கிறான். இவன் மனதிற்கேற்றவர் கேவலம் அல்பமாய் இருக்கிறார்கள், ஒன்றும் சரிப்பட இல்லை.

நாகரத்தினம்பிள்ளை — அதனால் இதுவரையில் ஒருவரும் இல்லையா.

சுந்தரி — இல்லையென்று முன்னமே சொன்னேனே.

நாகரத்தினம்பிள்ளை — நாம் உத்தேசிக்கிறோம், உன் அபிப்பிராயம் என்ன?

சுந்தரி — தன் மகளைப்பார்த்து, பழம் நழுவிப் பாலில் விழுந்தது, நேற்று இவரை எனக்குக்காட்டி நம்ம வீட்டிற்கு வருவாரா, வந்தால் ரொம்ப சந்தோஷமுடையவளாய் இருப்பேன் என்றேயே, உன் மனம்போல் சுவாமி கொண்டுவந்து சேர்த்துவிட்டார் என்றாள்.

நாகரத்தினம்பிள்ளை — ஆனால் நேற்று என்னைப்பார்த்தாயா, நேற்று நான் இங்கு வர இல்லையே.

சுந்தரி — நேற்று அல்ல இரண்டு மூன்று நாள் இருக்கும்.

நாகரத்தினம்பிள்ளை — ஆமாம் முந்தாநாள் இப்படியே முனிசீப்தார் வீட்டிற்குப் போனேன், அப்பொழுது பார்த்திருக்கலாம்.

சுந்தரி — தங்கள் மேல் அவளுக்கு பிரியம் ஏற்பட்டுவிட்டது. இனிமேல் எனக்கு ஆகவேண்டிய காரியம் ஒன்றும் இல்லை இத்தனை சோறுதான் செலவு, அதைத் தின்றுவிட்டு திண்ணையில் இருக்கிறேன் என்றாள்.

நாகரத்தினப்பிள்ளைக்கு மனது சலிக்க ஆரம்பித்து விட்டது, நான் என் இங்கு நுழைந்தேன் என்று நினைக்கிறார், மறுபடியும் வந்ததால் தான் இவளைப் பார்த்தேன் இல்லா விட்டால் இந்த மகலக்ஷிமியை எப்படி பார்க்க முடியும் என்று மனதிற்குள் சண்டைபோட கடைசியாக இவளால் நமக்கு சுவல்ப ரூபாய்கள் தானே நஷ்டமாகும், அவசிய மில்லை இவள் என்னிடமே இருக்கட்டும், என்று கண்டிதமாய் தீர்மானித்துக்கொண்டார். சுந்தரியைப் பார்த்து உனக்கு இப்பொழுது நான் செய்யவேண்டியது என்ன? சொன்னாயானால் அப்படியே செய்கிறேன் என்றார்.

சுந்தரி — செய்ய வேண்டியது என்ன இருக்கிறது ஒன்றுமில்லை, வீடு உங்களுது, வாசல் உங்களுது, என் அருமைப் பெண் உங்களுடையது, நல்ல வேளையாய் மகாராஜா மந்திரி வந்தயளே, அது தான் எனக்கு சந்தோஷம், வேறு ஒன்றும் வேண்டாம் என்று துக்கித்தாள்.

நாகரத்தினப்பிள்ளை — என்ன கிழவி அப்படிசொல்லு கிறாய் நீ ஏதாவது கிரமம் ஏற்படுத்தி இருப்பாயே அதைச் சொன்னால் பிந்தி நான் யோசித்துக் கொள்கிறேன்.

சுந்தரி—கிரமம் என்ன அக்கிரமம் என்ன, முதல் முதல் சாந்திகலியாணம், செம்மையாய் நடத்தவேணும். நம்மவீட்டிலிருந்து எடுத்துக்கொள்ளுங்கள், பத்தாததிற்கு நீங்களும் கொஞ்சம் போட்டுக்கொள்ளுங்கள், எப்படியாவது காமா சோமா என்று காரியத்தை ஒப்பேத்தி விடுகிறதுதானே. உங்களுக்குத் தெரியாத யோசனையா நான் சொல்லப் போகிறேன் என்றாள்.

நாகரத்தினப்பிள்ளை — வாசலில் கொட்டகைப் பந்தல் போட உத்தேசித்திருக்கிறேன் உன் சம்மதம் என்ன?

சுந்தரி — என்னத்திற்கு வீண்செலவு பண்ணப் போகிறாய் என் குழந்தைக்கு காதுகழுத்து மூடினாலும் மூடலாம்.

நாகரத்தினப்பிள்ளை — ஆனால் உனது சிகாமணிக்கு நகை ஒன்று மில்லையோ.

சுந்தரி — என்னவோ இரண்டொரு ஒட்டை உடைச்சல் கிடக்கிறது. எல்லாம் புதிதாய் பண்ண வேண்டியது அதற்கு இப்பொழுது என்ன பிந்தி பார்த்துக்கொள்வோம்.

நாகரத்தினப்பிள்ளை — கல்லியாணகாலத்தில் ஆபரணம் இல்லாமலா இருக்கிறது ஏதாவது கொஞ்சம் கம்பனிக்கு எழுதிதருவித்துக் கொள்வோம் பிந்தி சிறுக சிறுக வேண்டியதுவாங்கிக் கொள்ளலாம்.

சுந்தரி — தங்கள் இஷ்டம். நகை வாங்கினல் நல்லநகையாக வாங்கவேண்டும். வைரத்தோடு ஒன்று 2000-ரூபாய்க்கும், புலாக்கு மூக்குத்தி இரண்டும், 500-ரூபாய்க்குமாத்திர மிப்பொழுது வாங்கினல் போதும், அது கூட வேண்டாம் நான் சொன்னல் நீங்கள் கேழ்ப்பீர்களா? அழகு பண்ணிப் பார்க்க உங்களுக்கு பிரியம் இருக்கலாம், நான் கெடுப்பானேன்.

நாகரத்தினப்பிள்ளை — கலியாணத்திற்கு என்ன சில வழியும்?

சுந்தரி — ஜாப்தா கொடுக்கிறேன் அந்தப்படி கடைகளில் வாங்கிக்கொண்டு வந்தால் போகிறது. இதென்ன பிரமாதம்.

நாகரத்தினப்பிள்ளை — அப்படியே செய்வோம், எனக்கு அவசரமாய் போக வேண்டிய காரியம் இருக்கிறது நான் போய் சாயரக்ஷை 4-மணிக்கு வருகிறேன்.

சுந்தரி — தங்களைக் கண்டதும் சிகாமணி மனம் பூரித்துப் போய் விட்டது. எனக்கு அதற்கு மேலாகி விட்டது எத்தனையோ ஜமீன்தார்கள், பாளையப் பட்டுகள், 20,000 குடுக்கிறேன் முப்பதாயிரம் கொடுக்கிறேன் என்று தினம்

ஆள் அனுப்பியும் தாங்கள் நேரில் வந்தும் கேட்டார்கள். சிகாமணி முகம் கொடுத்து பேசவில்லை அவள் அபிப்பிராயம் போல் தானே நான் இருக்கவேண்டும். தவிர பணத்தாசை எனக்கு கொஞ்சம் கூட இல்லை; எப்படியாவது, சிகாமணி அவள் மனதிற்கிசைந்த மாப்பிள்ளையோடு வாழ்ந்தால் போதுமென்றே பேசாமல் இருக்கிறேன் என்றாள்.

நாகரத்தினப்பிள்ளை — நான் உங்கள் வீட்டிற்கு வருவதாக உத்தேசித்து விட்டேன் இனி அன்னிதா சொல்லப் போகிறதில்லை, கட்டாயம் 4-மணிக்கு வருகிறேன் அதற்குள் ஜோசியரை கூப்பிட்டு சாந்தி கலியாணத்திற்கு நாள்பார்த்து வைத்து விடுங்கள், போய் வருகிறேன் என்று சொல்லிக் கிளம்பிவிட்டார்.

சிகாமணி —கட்டாயம் 4-மணிக்கு தங்களை நான் பார்க்கவேண்டும் வராவிட்டால் ராத்திரி சாப்பிடாமல் பட்டினியாகவே இருப்பேன் என்றாள்.

நாகரத்தினப்பிள்ளை, இந்த வார்த்தையில் அதிக சந்தோஷமடைந்து நம்முடைய அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம், ஸ்திரீகள் வலுவிலேயே நம்மை இச்சிக்கிறார்கள் என்று நினைத்துக்கொண்டு தன் வீட்டிற்கு வந்தார். வந்ததும் தன் சும்சாரத்தினிடம் என்றும் பிரியமாய்ப் பேசிக்கொண்டிருந்தவர் அவளைக்கண்டதும் உன் மூஞ்சியும், மோறையும், உன்னைப் பார்க்க வரவர எனக்குப்பிடிக்க இல்லை சீக்கிரம் சமையல் செய்யச் சொல்லு 6-மணிக்கெல்லாம் சாப்பிடவேண்டும் என்றார். இவள் பிரபு வீட்டுபெண் ஆனதாலும் பணக்காரருக்கே வாழ்க்கைப்பட்டவளானதாலும், உத்தம ஸ்திரீயுமானதால் ஒரு நாளும் என்னை உல்லங்கனமாகச் சொல்லாத எனது நாதன் இன்று ஏன் கோபித்துக்கொள்ளவேண்டும் என்று துக்கப்பட்டுக் கொண்டே போய் தன் வேலையை பார்த்துக்கொண்டிருந்தாள்.

நாகரத்தினப்பிள்ளை, நாலுமணிக்குப்போனால், மறுப
டியும் திரும்பிவரவேண்டியதாய் இருக்கும் 5-மணிக் கெல்
லாம் சாப்பிட்டுவிட்டுப் போய்விட்டால், சாவகாசமாய் வர
லாம் என்ற எண்ணத்தோடு தான் சீக்கிரம் சமையல் செய்
யச் சொன்னார். தான் தனியே உட்கார்ந்துகொண்டு நமக்கு
இந்தப்பிரமை உண்டானதற்குக்காரணமென்ன, எனது அன்
பான பத்தினியைக்கூட கோபித்துக்கொண்டு விட்டேனே,
நான் பார்த்து வந்தது முதல் அந்தப்பெண் என் கண்ணி
லேயே நிற்கிறாள்; இதென்னமோசமான வியாபாரமாய்
இருக்கிறதே, நான் இனி அவள் வீட்டிற்குபோகாமல் இரு
ந்துவிட்டால் தான் என்ன நம்முடைய குடித்தனமென்ன
கௌரவமென்ன தாசி வியாபாரத்தில் புத்தி பிரவேசித்து
விட்டதே. இனி யோசிப்பதால் என்ன பிரயோஜனம்,
அவளிடம் வருவதாய் வாக்களித்து விட்டேன். நான்
சொன்னவார்த்தை வீணாகாதபடி சாந்தி கலியாணத்தை
மட்டும் நடத்திவிட்டு பிறகு அவள் வீடேறி போகிறதில்லை
என்று தீர்மானம் பண்ணிக் கொண்டார். எழுந்து தோட்
டத்திற்கு போய், கை கால்கள் சுத்தி செய்துகொண்டு வீட்
டிற்குள் வந்தார். அதற்குள், 5-மணி ஆகிவிட்டது, தான்
அனுஷ்டானம் செய்து சாப்பிடப் போனார், சாப்பிட்டான
தும், தாம்பூலங்கூட போட்டுக்கொள்ளாமல் சட்டையை
எடுத்துப் போட்டுக்கொண்டு உயர்ந்த துப்பட்டாவையும்,
மேலே போட்டுக்கொண்டு கிளம்பிவிட்டார். தாசி சுந்தரி
வீட்டிற்கு இவர் போகும் பொழுதே நான் 4-மணிக்கே
வருகிறேன் என்று சொன்னவன் வராமல் இருந்ததைப்
பற்றி கோமணி என்ன வருத்தப்பட்டுக் கொள்ளப் போகி
றாளோ? அப்படி ஏதாவது அவள் கோபித்துக் கொண்டால்
சமாதானப் படுத்த வேண்டியது தான் என்று எண்ணிக்
கொண்டு சுந்தரி வீட்டிற்கு போய்ச் சேர்ந்தார்.

நாகரத்தினப்பிள்ளை, சுந்தரியோடு பேசிவிட்டு கட்டிற்குப் போனதும், சிகாமணி தன் தாயாரைப் பார்த்து இப்பொழுது வந்துவிட்டுப் போனாரே இவர்யார் என்று கேட்க,

சுந்தரி — எவனோ யாரகண்டா.

சிகாமணி — நீ வெகு சுவாதீனமாய்ப் பேசினையே உனக்கு அவரைத் தெரிந்திருக்கு மென்றல்லவோ நினைத்தேன். நீ ரொம்ப கெட்டிக்காரிதான் அம்மா யார் வந்தாலும் அவாளோடு அதிகநாள் பழகின மாதிரி பேசுகிறாய், எனக்கு அந்தமாதிரி சொல்லத் தெரியவில்லை.

சுந்தரி — உனக்கு படித்துப் படித்து எத்தனைதரம் சொன்னாலும் தெரியவில்லை வந்தவனிடம் எப்படியாவது பொய்யை புளுகைச் சொல்லி ஏதாவது இந்த சமயம் காசு பறித்தால் தாண்டி பிழைக்கலாம் உனக்கு 30-வயதாய்விட்டால் உன்னை யார் விரும்புவான்.

சிகாமணி — இப்பொழுது வந்தாரே அவர் 4-மணிக்கெல்லாம் வருகிறேன் என்றார், அவரிடம் நீ சாந்திகலியாணம் இன்னம் பண்ணவில்லை நீங்கள்தான் நடத்தி வைக்கவேண்டும் என்று சொல்லிவிட்டாயே, நேற்றுராத்திரி வந்த ஆலத்தூர் அய்யாகண்ணு உடையார் இன்று வந்து அவரும் வந்துவிட்டால் என்ன செய்வாய்.

சுந்தரி—நீதான் தேவடியாள்தொழில் பண்ணப்போகிறாய் எத்தனை நாள் என்னோடுபழகியும் இன்னம் உனக்கு ஜாதிதொழில் தெரியவில்லையே நான் செத்துப்போய் விட்டால் பிறகு நீ வாழ்வது தெய்வத்திற்குத்தான் வெளிச்சம், அவன் வந்தால் ஒரு மூலையில் கிடக்கிறான். இவன் வந்தால் ஒருபக்கத்தில் கிடக்கிறான். அவன் கேட்டால் இவன் மாமன் என்கிறது இவன் கேட்டால் அவன் மாமன் என்கிறது. இவர்கள் இரண்டுபேரையும் விட்டு வேறுயாராவது

வந்த பணம் ஜாஸ்தி கொடுத்தால், அதையும் சரி என்று தான் சொல்லவேண்டும்.

சிகாமணி — நீ சாந்திகலியாணம் ஆகவில்லையென்றாய் அதற்கு அவரும் நாள் பார்த்துவிடு என்று சொல்லிவிட்டாரே. இப்பொழுது அவர் வந்து நாள்பார்த்தாய் விட்டதா என்றைக்கு முகூர்த்தம் நடத்துகிறது என்று கேட்டால் என்னசொல்வாய், 3 தடவை சாந்திகலியாணத்திற்கு பணம் வாங்கிவிட்டு இன்னமும் சாந்தி ஆகவில்லை என்கிறாயே.

சுந்தரி — நீ பேசாமலிரு அவர் வந்தால் நான் சரிப்படுத்தி சரியானபடி காசும்வாங்கிப் போடுகிறேன்.

சிகாமணி — சரி உன் இஷ்டம்போல் செய் என்று உள்ளே போய்விட்டாள்.

நாகரத்தினப்பிள்ளை விளக்கு வைத்து 6-மணிக் கெல்லாம் சுந்தரி வீட்டிற்குவந்ததும், சுந்தரி,, 4-மணிக்கெல்லாம் வருகிறேன் என்றீர்களே, இத்தனை நாழி என்னதவக்கமோதெரியவில்லை ஏதாவது வேலை இருந்திருக்கலாம் என்றாலும் எனது சிகாமணிவாசலில் வருவதும் தங்களைப் பார்ப்பதும்மறுபடி உள்ளே போவதுமாக இருந்தாள். நான் கூட ஒருநாளும் எனது குழந்தையை கோபித்துக்கொள்ளாதவள் இன்று கோபித்துக் கொண்டேன், நம்முடைய வீட்டிற்கு அவர் வரவேண்டிய பிராப்தமிருந்தால் தானே வருகிறார், இப்பொழுது வந்தாரே உன்னைக் கேட்டுக்கொண்டா வந்தார் வீணைசபலம் ஏன்? நான் உள்ளேபோ என்றேன் மலமல என்று கண்ணீர்கொட்ட அழுதுகொண்டு உள்ளே போனாள், இன்னும் வெளியிலேயே வரவில்லை படுத்துக்கொண்டு இருக்கிறாள்போல் இருக்கிறது. அவளை மாத்திரம் சொன்னேனே ஒழிய எனக்கும் வருத்தந்தான் நான்யாரிடம் சொல்லுகிறது மனதிற்குள் வைத்து, மறுகிக்கொண்டிருக்கிறேன், நீங்கள் வந்தயளே, சாந்திகலியாணம் நாளைய 3-ம்தேதி நான் பார்த்திருக்கிறது, அதைத்தவிர வேறுநாள்கள் இல்லையென்று

ஜோசியர் சொல்லிவிட்டார், சரியென்று ஒப்புக்கொண்டேன். ஜாப்தாவும் ரொம்ப அடக்கியேபோட்டேன், அதுவும் 1,300 ரூபாய் ஆய்விட்டது கிடக்கிறது, நாளைக்கு கலியாணம் பண்ணப்போகிறோமோ? அல்லது வேறுபெண்கள் தான் இருக்கிறதா என்று கூடியவரையில் குறைவாகவே எழுதினேன் என்று ஜாப்தாவை நாகரத்தினப்பிள்ளை கையில் கொடுத்தாள்.

நாகரத்தினப்பிள்ளை — ஜாப்தாவை கையில் வாங்கி வாசித்துப் பார்த்து என் வீட்டில் கலியாணம் நடந்தாலும் கூட இவ்வளவு செலவு ஆகுமா இதென்ன பெருமோசமாயிருக்கிறதே இருந்தாலும், 1,300 ரூபாயோடுதானே போகிறதென்று ஜாப்தாவின் அடியில், இதில் கண்ட சாமான்களை இது கொண்டுவருகிற மனுஷியனிடம் கொடுக்கிறது என்று எழுதி தன் கையெழுத்தும் போட்டு, கிழவி! இந்த ஜாப்தாவை மேல் வீதியில் நாயனு நாய்க்கர் கிடங்கில் கொண்டு போய் கொடுத்தால் அவர் கொடுப்பார் வாங்கிக்கொள் ஆக வேண்டிய காரியத்தைப் பார்த்துக்கொள் என்றார்.

சுந்தரி — ஜாப்தாவை கையில் வாங்கிக்கொண்டு வீட்டிற்குள் போய் உடனே சிகாமணியை, பிரபுவிடம் வரச் சொல்லிவிட்டாள். அவள் சற்று சங்கைப் பட்டவளாய் வியக்கை குறியோடு வந்தாள், இவள் வந்ததும் நாகரத்னப்பிள்ளை சிகாமணி உனக்கு என்ன கோபம்?

சிகாமணி — கோபமென்ன இருக்கிறது, நான் யார் இடத்தில் பிரியம் வைத்தேனோ அவர்கள் சொல் இழக்கிறார்கள்.

நாகரத்தினப்பிள்ளை — நான் நாலுமணிக்கு வரயில்லையென்றுசொல்லுகிறாயோ? வீட்டிற்குப் போனேன், அங்கே போனதும், 6 மணிக்கெல்லாம் சாப்பிட்டு விட்டு இவ்விடம் வந்தால் சாவகாசமாய் உன்னோடு பேசிக் கொண்டிருக்

கலாம் என்ற உத்தேசத்தோடு சீக்கிரமாய் சமையல் செய்யச்சொல்லி சாப்பிட்டு விட்டு வந்தேன்.

சிகாமணி — இந்த காலத்தில் அவாளவாளுக்கு, சாப்பாடும் பணமும், பெண்டாட்டி பிள்ளைகளு மென்பதே ஒழிய மற்றப்படி யார் எப்படிப்போனால் என்ன இப்பொழுதாவது மனது வைத்து வந்தீர்களே திருப்திதான் எனக்கு நாளன்று 3-ம் தேதி கலியாணமாம், நகைகள் ஒன்றுமில்லையே எனக்கு வெட்கமாய் இருக்கிறதே என்று அம்மாவிடம் சொன்னேன் அவள் வைகிறாள், நான்வேறுயாரிடஞ் சொல்லுகிறது உங்களுக்கும் ரூ 1,300 சிலவாகிறது; தவிர உங்களிடம் நான் சொன்னதாக என் அம்மாளுக்குத் தெரிந்தால் கோபித்துக் கொள்வாள், எனக்கு நகைகள் என்னத்திற்கு நீங்கள் தான் லக்ஷம் ரூபாய் நகைக்கு சமானம் என்றாள்.

நாகரத்தினப்பிள்ளை — உனக்கு கட்டோடே நகையே இல்லையோ?

சிகாமணி — எனக்கு நகை எப்படி கிடைத்திருக்கும்? பதினாயிரம், இருபதினாயிரத்திற்கு போடுகிறேன் என்று என் காலைப் பிடித்த கிழவன்களையெல்லாம் துரத்திவிட்டேன்.

நாகரத்தினப்பிள்ளை — எனக்குப் பட்டணத்தில் இரண்டொரு கம்பெனிகள் பழக்கம் உண்டு, உனக்கு ஏதாவது ஒரு தோடு எழுதி தருவிக்கிறேன்.

சிகாமணி — எழுதவும் வரவும் நாள் எங்கே இருக்கிறது உங்களுக்கு வேண்டுமானால் என் அம்மாவுக்குத் தெரியாமல் 50-ரூபாய் பணம் வைத்திருக்கிறேன், அதை எடுத்துக்கொண்டு ராத்திரியே ரயிலில் ஏறிவிட்டால், நாளையதினம் காலை 8-மணிக்குப் பட்டணம் போய் விடலாம், ஏதாவது வாங்கிக் கொண்டு, ராத்திரியே திரும்பி விட்டால், கலியாணத்தினன்று காலையில் இங்கு வந்து விடுவோம்.

நாகரத்தினப்பிள்ளை — (சிகாமணி நம்மிடம் அதிகப் பிரியமாய் இருக்கிறாள், தன்னிடம் ரகசியமாய் வைத்திருக் கும் பொருளைக் கூட நமக்குத் தெரிவித்து விட்டாள். பழகி னாலும் இப்படிப்பட்ட ஸ்திரீயோடு தான் பழகவேண்டும் என்று மனதில் சந்தோஷ முடையவராய்) ராத்திரியே மெயில் வண்டிக்கு பட்டணம் போவோம் என,

சிகாமணி — சந்தேகப் படுவானேன் போய்விடுவோம் அம்மாளிடம் நீங்களே சொல்லுங்கள், நான் சொல்லமாட் டேன், சொன்னால் கோபித்துக் கொள்வாள் எப்படியாவது சரிப்படுத்துங்கள்.

நாகரத்தினப்பிள்ளை — அம்மாளைவக் கூப்பிடேன், என் றதும் அவள் பக்கத்தில் நின்று கேட்டுக் கொண்டிருந்த சுந்தரி வந்தாள்.

சுந்தரி — என்ன பிள்ளையவாள் உங்கள் யோசனைகளை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தேன்! ரொம்ப திறமாய் இருக்கிறது; நீங்கள் வந்து ஒருநாள் கூட ஆகவில்லை! அதற் குள் இவ்வளவா? நாளைக்கு வெளியில் போ என்று இந்த சிறுக்கிசொல்லி விடுவாள், நல்லமாதிரியாக இருக்கிறது தங் களையும் கெடுத்துவிடுவாள் பேஷ்! பட்டணமாவது; போக வாவது; நகையாவது; வாங்கவாவது என்ன அவசரம் நகை இல்லாவிட்டால் கலியாணம் நடக்காதா அப்படி வேணுமா னால் பிறகு வாங்கிக் கொள்ளலாம், படுக்கை உள்ளு ஜோ டிக்க, கட்டிலா! மெத்தையா! மடமா! கண்ணாடியா! ஒன் றுமில்லை! நாளைய சமையலுக்கு பெரிய தவலை, கொப்பரை, ஜோட்டு போகிணி, அருக்கஞ் சட்டி, அடுக்குப் பாத்திரம் ஒன்றும் இல்லை, விளக்கேற்ற குத்து விளக்கா! சரவிளக்கா, கைவிளக்கா, லாந்தரா, ஷேட்டா, குளோப்பா, வால்சயிட்டா ஒன்று மில்லை, நாளைக்கு கடையிலிருந்து சாமான்கள் வாங் கிக் கொண்டு வந்தால் அதை வாரிவைக்க ஒரு பாத்திரமும்

கிடையாது, உங்களுக்கென்ன மமதையா, நான் அதைத்தான் சொல்லுவானேன் திவ்யமாய் 1-st கிளாஸ் வண்டியில் ஏறிக் கொண்டுபோங்கள், என் சிலவுக்கு 500 ரூபாய் வேண்டும், அதைக் கொடுத்து விட்டு பிறகு உங்கள் இஷ்டம் போல் செய்யுங்கள் என்றாள்.

நாகரத்தினப்பிள்ளை — 500 ரூபாய் கொடுத்து விட்டால் நாங்கள் போகலாமோ?

சுந்தரி — குசாலாய் போகிறது.

நாகரத்தினப்பிள்ளை — ஒரு லெடர் தருகிறேன், அந்த லெட்டரை கடைத்தெருவில் கடைவைத்திருக்கும் நாட்டுக்கோட்டை, கே. ரூ. கு. சி. சிதம்பர செட்டியிடம் கொடுத்தால் பணம் கொடுப்பார். வாங்கிக் கொண்டு உன் சிலவு செய்து கொள்ளலாம் என்று லெடர் எழுதிகொடுத்தார்.

சுந்தரி — கலியாணத்தன்று காலையில் தவறாது வந்து விட வேண்டும், குழந்தையோடு தங்களையும் மணையில் வைத்துப் பார்க்க வேண்டும்.

நாகரத்தினப்பிள்ளை—நான் உட்காரலாமா, அதுவெட்கமாய் இருக்குமே.

சுந்தரி — தங்களை குழந்தையோடு கூடவைத்து ஒவ்வொரு கலியாணமும் நடத்திவிட்டால்; கலியாணத்திற்கு?

நாகரத்தினப்பிள்ளை — உங்கள் சம்மதப்படி நடத்த வேண்டியது தானே.

சுந்தரி — எங்கள் வழக்கப்படி அவளுக்கு முந்தியே நடத்திவிட்டது, இப்பொழுதுசெய்வதுஉங்களுக்காகத்தான்.

நாகரத்தினப்பிள்ளை — நாங்கள் பட்டணம் போகநாழிகை ஆய்விட்டது, போய் விட்டு நாளையன்று இங்கே வந்து விடுகிறோம்; பிறகு, யோசித்துக் கொள்ளலாம் என்று சொல்லிவிட்டு சிகாமணியை அழைத்துக்கொண்டு கிளம்பி விட்டார்.

சிகாமணி — தன் கையிலிருந்த ரூ. 50 தோடு பிள்ளையவாள் பின்னோடு ஜட்கா வண்டியில் உட்கார சீக்கிரமாய் ரயிலடியில் போய்ச்சேர்ந்தார்கள். பட்டணம்போகிற மெயில் வர இருவரும் 1-st கிளாஸ் டிக்கட்டு வாங்கிக் கொண்டு ரெயிலில் ஏறி மறுநாள் காலை 7-மணிக்கெல்லாம் சென்னை வந்து இறங்கினார்கள்.

இவர்கள் இருவரும் கோச்சு ஒன்று அன்று முழுதலுக்கும் வாடகைக்கு அமர்த்திக்கொண்டு அதில் ஏறி ஹோட்டலுக்குப்போய் கொஞ்சம் ஆகாரம் சாப்பிட்டுவிட்டு பிறகு கம்பனிக்குப் போனார்கள். ஏற்கனவே அந்த வியாபாரி நாகரத்தினப் பிள்ளைக்கு தெரியுமாதலாலும் பிள்ளையிடம் வியாபாரிகளுக்கெல்லாம் நல்லமதிப்பு ஆனதாலும் வேண்டிய தினுசு நகைகள் எடுத்துக்கொடுத்தார்கள்.

சிகாமணி — எதைப்பார்த்தாலும் அது தனக்கு வேணும் என்றாளே ஒழிய, வேண்டாமென்று ஒன்றையும் சொல்லவே இல்லை. கடைசியாக ரூ 4,000க்கு நகை பொறுக்கி எடுத்துக் கொண்டாள். அங்கேயே அலங்காரம் செய்து கொண்டு இருவரும் சாயரக்ஷை ரயிலுக்கு கிளம்பி மறுநாள் காலையில் ஊர்வந்து விட்டார்கள்.

நாகரத்தினப்பிள்ளை—கலியாணவைபவத்தை எதிர்பார்த்தவராயினும் சுந்தரிவீட்டில் அந்தப்பேச்சையே காணோம்; இவர் வந்ததும் சுந்தரியைக் கூப்பிட்டு கலியாணம் ஏன் நடத்தவில்லை என்று கேட்க, தாங்கள் தான் வேண்டாம் என்று சொல்லிவிட்டுப் போய் விட்டீர்களே, அதனால் தான் நிறுத்திவிட்டேன். தங்களுக்கும் இன்னம் சிறுபிள்ளைத்தனம் இருக்கிறது. பணத்தைச் செலவு செய்து கண்டவர்கள் வந்து தின்றால் தான் கலியாணமோ, இல்லாவிட்டால் கலியாணமில்லையோ, காரியம் ஆகவேண்டியது பிரதானம், வீட்டிற்குப்போய் சாப்பிட்டுவிட்டு ராத்திரி 8-மணிக்குமேல் சீக்கிரமாய் வந்துவிடுங்கள் என்றாள்.

நாகரத்தினப்பிள்ளை — நல்லதென்று சொல்லி வீட்டிற்குப் போய், சாப்பிட்டுவிட்டு பட்டணம்போன சிரமம் ஆனதால் படுத்துக்கொண்டு தூங்கிப்போய்விட்டார்.

சுந்தரி — பட்டணத்திற்கு இவர்கள் போய்வருவதற்கு முன் நாட்டுக்கோட்டை செட்டியிடம் போய் பிள்ளையவாள் சீட்டுப்பிரகாரம் தொகையை வாங்கிக்கொண்டாள். மேலே வீதி நாயனு நாயக்கரிடம் போய் ஜாப்தாபிரகாரம் சாமான்கள் வேண்டாம், 1,000 ரூபாய்க்கு 750 ரூபாய் ரொக்கமாய்க் கொடுத்து விடுங்கள் என்று கேட்க அவரும் அப்படியே கொடுத்துவிட்டார், அதையும் வாங்கிக்கொண்டு வந்துவிட்டாள். சிகாமணியினிடம் ஏற்கனவே பழக்கமாய் இருந்த பிரபு, சிகாமணி எங்கே என்று சுந்தரியை விசாரிக்க, ஒரு பிரபு ஒருவர் வந்திருக்கிறார் அவர் இன்னம் ஒருமாதம்தான் இங்கு வருவார். அதின்பிறகு நீங்கள் வரலாம், நடுவில் உங்களுக்கு சிகாமணியைப் பார்க்க பிரியமாய் இருந்தால் பகலில் வந்துவிட்டுப் போங்கள் என்றாள், சரியென்று சொல்லிப் போய்விட்டார்.

சிகாமணி — அணிந்திருந்த ஆபரணங்களைப் பார்த்து சுந்தரி அதிக சந்தோஷப்பட்டவளாய் தன் மகளைப்பார்த்து பையல் நம்மிடம் சரியானபடி சிக்கிக்கொண்டான். இந்த சமயம் அவனிடம் ஏதாவது சம்பாதித்தால் தான் நமக்கு காசு, இல்லாதவரையில் நம்மை யார் லக்ஷியம் பண்ணி 10-ரூபாய் சேர்ந்தாபோல் கொடுப்பார்கள் என்றாள். இப்படியாக அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். சாப்பிட்டு விட்டு படுத்துக்கொண்ட நாகரத்தினப் பிள்ளை 4-மணிக்கு எழுந்து இரண்டாந்தரம் சாப்பிட்டு வேலைகளை கவனித்திருந்து பிறகு வழக்கம்போல் ராத்திரி 8-மணிக்கு சாப்பிட்டான பிறகு தன் படுக்கைக்குப்போகாமல் வெளிக்கிளம்ப எத்தனப்பட்டார். உத்தமஸ்திரீயான இவருடைய பெண்

டாட்டி வெளியே போகிறாரே இருட்டில் வண்டி கூட இல்லாமல் எங்கே போகிறாரோ தெரியவில்லையே என்று விசாரத்தோடு வாசலில் வந்து வண்டிக்காரனைக் கூப்பிட்டு பிள்ளையவாள் எங்கே போகிறார் பார் என்றாள். அவன் ஓடி பிள்ளையைக் கூப்பிட்டு இருட்டில் எவ்விடம் போகிறீர்கள் என்று அம்மாள் கேழ்க்கச்சொன்னார்கள் என்றான். அடுத்ததெருவில் ஒரு சினேகிதர் வீட்டுக்குப் போய்விட்டு இதோ வந்துவிடுகிறேன் என்று சொல் என்றார். வண்டிக்காரன் திரும்பி வந்து அம்மாளிடம் தெரிவித்தான்.

நாகரத்தினப்பிள்ளை, ஒரேவேகமாய் தன்னை ஒருவரும் பார்க்காமல் இருக்கும்படி தலையில் துணியைப் போட்டு மூடிக்கொண்டு சுந்தரி வீட்டிற்கு வந்தார். இவர் வந்ததும் மிகுந்த உபசாரத்தோடு பிள்ளையவாளை வீட்டிற்குள் சுந்தரி அழைத்தாள், அன்றிரவு சிகாமணியோடு உல்லாசமாய் பேசிக்கொண்டு சயனித்துக்கொண்டார். மறுநாள் காலையில்சிகாமணி நாகரத்தினப்பிள்ளையை வீட்டிற்குப்போகவிடவில்லை, தன்னிடமே எப்பொழுதும் இருக்கவேண்டும், தாங்கள் இல்லாவிட்டால் அரை நிமிஷங்கூட இருக்க மாட்டேன் என்று ஒரே பிடிவாதமாய்ச் சொன்னதின்பேரில், நாகரத்தினப்பிள்ளை கிளப்பிலிருந்து சாப்பாடுவரவழைத்து சாப்பிட்டுக்கொண்டே, 4-நாள் வரையில் இருந்துவிட்டார். பிள்ளையவாள் வீட்டில் இவர் வராததைப்பற்றி இவர் எங்கேயோயிருக்கிறார் என்றதை விசாரித்துவர மூலைக்கு மூலை ஆள் அனுப்பிக் கொண்டிருந்தார்கள், கடைசியாக சுந்தரி வீட்டில் இருக்கிறதாக தெரிந்து அழைத்துவர வேலைக்காரன் ஒருவனை அனுப்பினார்கள். அவன் வந்து நாகரத்தினப்பிள்ளையைக் கூப்பிட பிள்ளை தூங்கி விழித்துக் கொண்டவர்போல் அடாடா என்ன தவறுதல், 4 நாள் இங்கு இருந்து விட்டோமே என்று வேலைக்காரனோடு வீட்டிற்கு வந்தார்.

நாகரத்தினப்பிள்ளை — வீடுவந்து சேர்ந்ததும் அவரை வெகுபேர்கள் எங்கே போயிருந்தீர்கள் என்று கேட்டார்கள். அவர்களுக்கு மாறுதலாக சொல்லிவிட்டார். அவர்சம்சாரம் மீனும்பாள் தாங்கள் மகாபுண்ணிய புருஷாளாச்சுதே தாசி வீடு போகலாமா என்று கேட்க, தவறிப் போய்விட்டேன் அதனால் கொஞ்சம் செலவு ஆகிவிட்டது, இனி நான் போகவில்லை என்று சொல்லி தன் வீட்டு வேலையைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

நாகரத்தினப்பிள்ளை — ஒருநாள்முழுதலும் சுந்தரிவீட்டிற்கு போகாமல் இருந்துவிட்டதால், சுந்தரி பிள்ளையை கையோடு அழைத்துவர ஆள் அனுப்பினாள். அவன் பிள்ளையிடம் வந்து கூப்பிட்டான். பிள்ளை வரமாட்டேன் என்று சொல்லிவிடு என்று சொல்லி ஆளை அனுப்பிவிட்டு பிறகு சற்று யோசித்துப் பார்த்து, போய்விட்டுத்தான் வருவோமே, என்ன விசேஷமோ அவளிடம் இனி சாவகாசம்வேண்டாம் போய்வருவதால் என்ன தவறுதல் இருக்கிறது என்று சற்று நேரத்திற்கெல்லாம், சுந்தரி வீட்டிற்குப்போனார். சிகாமணி சற்று முன்னால் தாங்கள் வருகிறதில்லை என்றுசொல்லி அனுப்பினீர்களே, இப்பொழுது என் நீர் வரவேண்டும் என்றுகேட்க, நாகாத்தினப்பிள்ளை ஆனால் போகிறேன் என்று எழுந்தார், சிகாமணி மேல் உத்தரீயத்தை இழுத்துக் கொண்டு உன் அப்பன்மேல் இருக்கிறது போகாதே என்று சொல்லி விட்டு உள்ளே போய்விட்டாள். இவர்கள் கோபத்தை சுந்தரி சமாதானப்படுத்த இருவரும் சுவல்ப நேரத்திற்கெல்லாம் ராஜியாய் போய்விட்டார்கள்.

சிகாமணி தங்களை என் உள்ளத்தில் வைத்துக்கொண்டிருப்பது போல் தங்களுக்கும் இருந்தால் இங்கே வராமல் இருப்பீர்களா புருஷர்களின் பிரியமெல்லாம், ஒருபிரியமா? தங்களோடு நான் அனுபவித்த சுகத்தை நினைத்துக் கொண்

டிருந்தால் என் உயிர் இருக்கிறது, இல்லாவிட்டால் நேற்றே இறந்திருப்பேன்.

நாகரத்தினப்பிள்ளை — சிகாமணீ உன் கண்கள்வேறுபட்டு நீர் சொரிகின்றதே ஏன்?

சிகாமணி — தாங்கள் என்னிடம் அருள்செய்யாமைக்கு துக்கப்படுகிறது.

நாகரத்தினப்பிள்ளை — உனது கண் என் உயிரை உண்ணும் காட்சியாக மறிக்கொண்டிருக்தலால் எமனோ? அல்லது மருளும் தன்மையை யோசிக்க, மானோ? அல்லது கண்தானோ? தெரிகிலேன்; உன்னுடைய இரண்டு கண்களில் ஒரு கண்பார்வை எனக்கு நோய் உண்டுபண்ணுகிறது, மற்றது அதற்கு மருந்து செய்கிறது, தவிர நான் உன்னைப்பார்க்கையில் நீ பூமியைப் பார்க்கிறாய், நான் பாராதபோது என்னை நீ பார்த்து சிரிக்கிறாயே.

சிகாமணி — இப்பொழுது என்னைப்பார்த்து நான் திருப்தியடைய வீணாக புகழுகிறீர்களே ஒழிய, நேற்று என்னை மறந்து நினையாமல் தானே இருந்தீர்கள்.

நாகரத்தினப்பிள்ளை — உன்னுடைய குணங்களை, நான் மறந்தேனாயின் நினைப்பேன், ஒரு பொழுதும் மறதியை அறியேன் ஆதலால் நினைத்தலும் இல்லை.

சிகாமணி — நான் இதுவரையில் ஒருவர் முன்னால் நின்று கொண்டு பேசினது இல்லை, தாங்கள் வந்த பிறகு என்னிடம் எப்போது மிருந்த பயமும் வெட்கமும் தங்களின் மேல் உள்ள ஆசையால் பறந்து போயிற்று.

நாகரத்தினப்பிள்ளை — சிகாமணி நீ ஏன் கண்ணிற்கு மை தீட்டிக் கொள்ளவில்லை.

சிகாமணி — தாங்கள் என் கண்ணுள்ளேயே இருப்பதால், மறைந்து விடுவீர்களென்று மை எழுதிக்கொள்ள

வில்லை, தவிர தாங்கள் என் நெஞ்சிலேயே இருப்பதால் தங்களைச் சுடுமோ என்று சூடான ஆகாரத்தையும் உட்கொள்ளுகிற தில்லை.

நாகரத்தினப்பிள்ளையின் மனது சிகாமணியினிடமே பூரணமாகச் சென்றுவிட்டது. அவள் சொல்லுகிறபடி இவர் நடக்கத் தவறுகிறதில்லை. வீட்டுக்கு சில சமயம் போவார், தன் சம்சாரம் ஏதாவது சொன்னால் கடுமையாய் அவளை கோபிப்பார்; இவர் எங்கு தன்வீட்டிற்குக்கூட வராமல் இருந்துவிடப் போகிறாரோ என்று பயந்து அந்த உத்தமஸ்திரீ தான் சொல்வதையும் நிறுத்தி விட்டாள். ஒரு மாதத்திற்கெல்லாம் தாசி சுந்தரி தினம் கொஞ்சமாய் அதுவேணும் இதுவேணுமென்று சொல்லி தனக்கு வேண்டிய யாவும் பெற்றுக் கொண்டாள். தான் புதிதாய் ஒரு வீடும் நாகரத்தினப்பிள்ளையின் உதவியால் கட்டிக்கொண்டாள். இப்படியிருக்கையில் தங்களிடமே சிகாமணி இருக்க வேண்டுமானால் ரூ. 20,000-க்கு நிலம் வாங்கிக் கொடுத்துவிட்டால் உங்கள் ஆயசு பரியந்தம் சிகாமணியோடு இருக்கலாம், இல்லாவிட்டால் வேறு ஒரு பிரபு நிலம் வாங்கிக் கொடுப்பதாய் பேசுகிறார், அவரிடத்திலேயே இருக்க வேண்டியதாய் இருக்கும், உங்கள் அபிப்பிராயம் சொல்லி விடுங்கள், நீங்களும் ஏதோ பொன் வைக்கிற இடத்தில் பூவையாவது வைத்துக் கொண்டு வந்தீர்களே அதனால் தான் தங்களிடம் தெரிவித்தேன் என்று சுந்தரி சொன்னாள். இதுவரையில் ரூபாய் 20,000 செலவு செய்து விட்டோம், இந்த நிலம் வாங்கிக் கொடுக்க முடியாமல் விட்டு விட்டால் இதுவரையில் செலவு செய்ததின் பிரயோசனம் ஒன்றுமில்லாமல் போய்விடுகிறது, ரூபாய் பதினையாயிரத்திற்காவது நிலத்தை வாங்கித் தொலைத்து விட்டால் அப்புறம் இவள் ஆயுசுக்கு நம்மிடத்திலேயே இருப்பாள், பிறகு சொத்தெல்லாம் நம்முடையது

தானே என்று யோசித்து ரூபாய் பதினையாயிரத்திற்கு நிலம் வாங்கிக் கொடுத்து விடுகிறேன், அதற்குமேல் முடியாது என்றார். சுந்தரி, போகிறது அதிகமாய் தங்களை சிரமப் படுத்த இஷ்டமில்லை, பணம் எப்பொழுது கொடுக்கிறயள் என்றாள். நாகரத்தினம்பிள்ளை இது முதல், 10-தினத்திற் குள் கொடுத்து விடுகிறேன் என்றார். சுந்தரி போய்விட் டாள். நாகரத்தினம்பிள்ளைக்கு கடன்கொடுத்த பேர்வழிகள் பிள்ளையவாளை பணம்கேழ்க்க ஆரம்பித்துவிட்டார்கள். இவர் அதிகமானியும் நாணயஸ்தரு மானதாலும், சுந்தரிக்கு ரூபாய் கொடுக்க வேண்டியிருப்பதாலும், வீட்டிற்கு வந்து நாணயம் வாங்கவேண்டிய விஷயத்தைப்பற்றி இவருக்கு சினேகிதரான இரண்டொருவர்களிடம் யோசனை பண்ணி னார். இரண்டொருவரைப் பணமும் கேட்டனுப்பினார், இவருடைய நடத்தைப் பிசகைப்பற்றி எல்லோருக்கும் இவ ரிடம் அவமதிப்பு உண்டாகி விட்டதால் ஒருவரும் பணம் கொடுக்க சம்மதப்பட இல்லை. கடைசியாக இவருடைய பூமி இருக்கிற ஏலத்தூர்கிராமம் ரூ. 40,000 நாற்பது வேலி நிலத்தையும் ஒரு பிரபுவினிடம் கிரயம் பேசினார்கள், அது நல்ல பாச்சலுள்ள கிராமமானதால் அதை அந்த பிரபு ரூ. 40,00-ம் நாகரத்தினம்பிள்ளைக்கு ரொக்கமாய்க் கொடுத் துவிட்டு நிலத்தை வாங்கிக்கொண்டார், நாகரத்தினம்பிள்ளை இந்த ரூபாய்க்கொண்டு சுந்தரிக்கு ரூபாய் 15,000-மும், மற்றப்படி தனக்கு இருக்கும் கடன்களையும் கொடுத்தார். விற்றதுபோக பாக்கி நாகரத்தினம்பிள்ளையின் சம்சாரத்தினி டம் இரண்டாயிரம் ரூபாய்க்கு நகைகளும், பாக்கி இருக்கும் நிலமும் வீடுவகையராவுமாக ரூ. 4,000, ஆக 6,000-த்திற்கு சொத்து மீதி ஆயிற்று. நாகரத்தினம்பிள்ளை பாக்கி இருக் கும் சொத்து நமக்குபோதும், தாசி சிகாமணிக்கும் இனி ஒரு பைசாகூட கொடுக்க வேண்டியதில்லை, இனி ஒழுங்கா கவே இருக்கலாம் என்று நினைத்தார். இவருடைய சம்சா

ரம் தன் புருஷனுடைய கெட்டநடவடிக்கையைப் பற்றியும் அதனால் சொத்துக்கள் விரயமாய் போய்விட்டதைப் பற்றியும் ஓயாது நினைத்து வியாகூல மடைந்தவளாயினும், தன் புருஷனுக்கு சிசுருஷைசெய்வதில் குறைவுகிறதில்லை. அவர் சொல்படியெல்லாம்கேட்பாள். நாகரத்தினப்பிள்ளை ஓயாது இவளைத் திட்டுவதுதான், வேலை என்றாலும் அதற்கு அலுப்படைகிறதில்லை. எதா சர்வகாலமும் தாசி வீட்டிலேதான் இவர் இருக்கிறது. சாப்பிடுகிற வேளைக்குமட்டும் மடமட என்று வருகிறது சாப்பிட்டானதும் தாசிவீடு போய்விடுகிறது.

சுந்தரி ரூபா பதினையாயிரம் வாங்கிக்கொண்ட உடனே அந்த ஊரிலேயே கொஞ்சம் நிலம் வாங்கிக் கொண்டாள். இவ்வளவு பணம் நாகரத்தினப்பிள்ளை கொடுத்தும் வீட்டுச் சிலவுக்கு இவரைக் கேட்காமல் இருக்கிறதில்லை, தினம் ஏதாவது கேட்பாள் இவர் கொடுக்காமல் இருந்து விட்டால் கோபித்துக்கொள்வாள், பிள்ளைவாளுக்கு மயக்கம் தலைக்கேறிவிட்டதால் தன் சம்சாரத்தை அடித்து நகைகளைப்பிடுங்கிக்கொண்டு விற்று சிலவு செய்து விட்டார். மற்ற இதர சொத்துக்களும் தீர்ந்துவிட்டது, தன் வீட்டுச்சிலவுக்கு ஒரு பைசா கூட கொடுக்கிறதில்லை. மகாபதிவிரதையான இவர் சம்சாரம், தன் புருஷனுக்கு சொத்துக்கள் முழுதலும்போய் விட்டதே என்ற வெட்கத்தால், பந்துக்கள் வீட்டிற்காவது தாய்தகப்பன் வீட்டிற்காவது போகிறதில்லை. சாப்பாட்டுக்கில்லாமல் இருந்தாலும் தன் புருஷன் முன்னிலையிலேயே தான் இறக்கிறது என்ற தீர்மானத்தின்பேரிலேயே இருந்து விட்டாள். நாகரத்தினப்பிள்ளைக்கு இருந்த சொத்துக்கள் யாவும் போய்விட்டன என்று தெரிந்துகொண்ட சுந்தரி இவரைக் கடுமைப்படுத்த எத்தனித்துவிட்டாள். சிகாமணி வழக்கம்போல் ஒருநாள் நாகரத்தினப்பிள்ளையவாளைப் பார்

த்து நான் அப்பட்டா 10 ரூபாய்க்குத் தானே வாங்கித் தாருங்கள் என்றேன் கொடுத்தீர்களா, அதுகிடக்கிறது தச்சனிடம் சொல்லி பெரியபெட்டி ஒன்று வேலை செய்து கொண்டுவரச்சொல்லுங்கள் என்றேனே அதுதான் வந்ததா? இருக்கட்டும் காபிக்கு பால் நல்லதாய் அகப்படவில்லை ஒரு பசுமாடு 50 ரூபாயில் ஒன்று வாங்குங்கள் என்று ஒருமாதமாய்ச் சொன்னேனே வாங்கினையளா ? போகிறது சமையல் உள்ளுக்கு சன்னகாரை வைக்கவேண்டும் என்றுசொல்லி எத்தனைமாத மாசாது செய்தியளா ? தேவடியாள் வேணுமென்ற ஆசைமாத்திரம் இருக்கிறது குடுக்கிறதற்கு கையில்லாத கப்பி என்முன்னால் இருக்காதேயும் எழுந்திரும் என்று உதறிப்பேசினாள். நாகரத்தினப்பிள்ளை கோபித்துக் கொள்ளாதே, எல்லாம் இன்னம் இரண்டு நாளில் முடித்துவிடுகிறேன், ஒரு அனந்தா வார்சு பாத்தியம் இருக்கிறது அதில் சில தொகை கிடைக்கும் அதைக்கொண்டு எல்லாம் உன் மனம்போல் செய்துவிடுகிறேன் சற்று பொறுத்துக்கொள் என்றார். இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கையில் ஏற்கனவே சிகாமணியை வைத்துக் கொண்டிருந்த ஆலத்தூர் உடையார் வந்தார். அவர் வந்தவுடன், சிகாமணியைப்பார்த்தார். சிகாமணி தன் கங்கணத்தை தளர்த்திக் காண்பித்தாள், உடனே அவர் சிகாமணியின் தலைமயிரைப் பார்த்தார் அவள் தன் வைபிரமூக்குத்தியைத் தொட்டுக் காண்பித்தாள், உடையார் தான் நின்ற இடத்தைவிட்டு நகர்ந்தார். சிகாமணி வெற்றிலைக் காம்பைக் கிள்ளி மூன்று துணிக்கையைகிட்டவைத்துவிட்டு, அப்புரம் ஒன்றை சாடையாகக் கிள்ளிவைத்தாள். உடையார் சிகாமணியைப் பார்த்த பொழுது கங்கணத்தை தளர்த்தி விட்டதால் இவர் இத்தனைநாள் வராததால் உடம்பு இளைத்துப்போய் விட்டதென்றும், இவர் ராத்திரி இருட்டில் வரலாமோ என்ற எண்ணத்தால் தலைமயிரைப் பார்த்ததால், நிலவு வெளிச்சம் ஆனபிறகு வாரும்

என்று சொல்ல மூக்குப்பொட்டை காண்பித்ததாயும், இவர் எந்த இடம் வரலாமென்று கேட்க, இடத்தைவிட்டு நகர்ந்த அடையாளத்தைக் கொண்டு வெத்திலைக் காம்பைக் கிள்ளி சிகாமணி வைத்த அடையாளத்தில் இதுமுதல் தென் பக்கமாய் மூன்று வீடுபோய் 4 வது வீட்டுக்கு வாரும் என்று சொல்லுகிற சமிக்கையை உடையார் தெரிந்து கொண்டு போய்விட்டார்.

சுந்தரி — நாகரத்தினப் பிள்ளையைப் பார்த்து ஏதோ பணம் கப்பலில் வரப்போகிறதென்கிறீர்களே? எத்தனை மூட்டை வரப்போகிறதென்று கேட்டாள். கிழவி நீ வர வர, ஏளனம் பண்ணுகிறாய் உனக்கு நம்மிடத்தில் பிரியம் இல்லைபோல் இருக்கிறது.

சுந்தரி — பிரியமில்லாமலா எத்தனை ரூபாய் வரும் சாதாரணமாய்த்தான் கேழ்க்கிறேன் சொல்லுங்கள் என்றாள்.

நாகரத்தினப்பிள்ளை, சுமார் 10,000 ரூபாய் வரையில் வரலாம், அதையும் சீக்கிரம் வாங்க பிரயத்தனப்படுகிறேன் முடியவில்லை, இருந்தாலும் வாங்கிவிடுகிறேன், என்றார். சிகாமணி, அதை வாங்கிக்கொண்டு அப்புறம் இங்கே வாரும் என்றாள் சரியென்று பிள்ளைவாள் சொல்லிவிட்டு வீட்டிற்குப் போய் அதுவிஷயமாய் இவர் பேசியபோது, வியாஜ்யம் செய்தாலொழிய அந்தப்பணம் இவருக்கு கிடைக்க வழியில்லாமல் இருந்தது. விவகாரம் செய்யவோ இவரிடம் பணம் இல்லை. இந்த நிலைமையில் வீட்டிலிருந்த பாத்திரங்களை அடகுவைத்தும் சில சாமான்களை விற்றும் காலக்ஷேபம் நடந்துவிட்டது. ஒரு நாள் தாசி வீட்டிலிருந்து சாப்பாட்டுக்கு தன் வீடுவந்தார், வீட்டில் அரிசி சாமான்கள் அன்று கட்டோடே இல்லை, கடன் வாங்கவும் வழியில்லை, புண்ணிய சீலியான இவர் சம்சாரம் தனது நிற்பாக்கிய தெசையை யோசித்து அழுதுகொண்டிருந்தாள். நாகரத்தினப் பிள்ளை

ஏன் சமையல் செய்யவில்லை என்றுகேட்க, அரிசி முதலியது ஒன்றும் இன்றைக்கு இல்லையே, நான் என்ன செய்வேன்? அரிசியா இல்லை நீ இருக்கிற இடத்தில் எப்பொழுதும் தரித்திரம் தான் பிடிங்கித்தின்னும் என்று கூடத்து உள்ளியில் போய் சட்டிகளை எடுத்துவைத்து பார்க்கும்பொழுது ஒரு சட்டியில் அரைக்கால் படி அரிசி கொழியல் இருந்தது, அதை எடுத்துவந்து, நான் சாப்பிடாமல் பட்டினியாய்ப் போய்விட்டால் பிறகு இதை பொங்கித்தின்க தீர்மானித்தாயோ உன் எண்ணம் எனக்கு நன்றாய்த் தெரியுமே என்று அடி, அடி என்று அடித்தார். நாதா! தங்களை நான் வஞ்சிப்பேனு என்று எவ்வளவு சொல்லியும் கேழ்க்காமல் தாசி வீடு போய்விட்டார். மீனும்பாள் ஐயோ என்ன அபசாரம் செய்தேன் இந்த அரிசி கிடந்தது என் கண்ணுக்குத் தெரியாமல் போய்விட்டதே இதை கஞ்சியாக வைத்தாலும் என் நாதன் சாப்பிடுவாரே என்று சீக்கிரமாய் அந்தக் கொழியிலைப்போட்டு கஞ்சி காய்ச்சினுள், அதை எடுத்து மூடி வைத்துவிட்டு தன் புருஷன் வரவை எதிர் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். நாகரத்தினப்பிள்ளை தாசிவீடு போனதும் சுந்தரியைக் கூப்பிட்டு ஒருரூபாய் பணம்கொடு, நாளையதினம் அந்தப்பணம் வரப்போகிறது உனக்கு எதேஷ்டமாய்த் தருகிறேன் என்று கேட்க சுந்தரி கொடுத்தாள். அதை கிளப்பில் கொடுத்து சாப்பிட்டுவிட்டு ராத்திரி 9 மணிக்கு தாசி வீடு போனபொழுது, சிகாமணியினிடம் உடையாரைத்தவிர வேறு பிரபு ஒருவர் ராத்திரிக்கு பேசிக் கொண்டு படுக்கைக்குவந்து சிகாமணியோடு சயனித்துக் கொண்டிருந்தார். நாகரத்தினப்பிள்ளை கதவை இடித்ததும் சிகாமணி அந்தப்பிரபுவை அப்புறப்படுத்திவிட்டு கதவைத் திறந்து உள்ளேபோய் படுத்துக்கொண்டாள். நாகரத்தினப் பிள்ளை சிகாமணியை என்ன கூப்பிட்டும், எழுந்திருக்கவில்லை அவ்விடத்தில் சிந்திக்கிடக்கும் புஷ்பங்களையும் சந்த

ணங்களையும் பார்த்து என்ன புஷ்பம் மெத்தையின் மேல் இறைந்திருக்கிறது என்று கேட்கையில் தாங்கள் வருவீர்களென்று இத்தனை தேசகாலம் பார்த்தாள் வரஇல்லை என்னைக் கூப்பிட்டு வாசலில்பார்க்கச்சொன்னாள். 10 தடவைபார்த்தேன், தாங்கள் வரஇல்லை, புஷ்பத்தை பிய்த்து எறிந்தாள், சந்தனத்தை கொட்டினாள் படுத்துக்கொண்டாள் உனக்கு என்ன தெரியும் வேணுமானால் சமாதானப் படுத்துங்கள் என்றுசொல்லிப்போய்விட்டாள். நாகரத்தினப்பிள்ளை சிகாமணியைக்கூப்பிட்டு உனக்கு என்ன குறை வைத்திருக்கிறேன், வேண்டியதுகொடுத்தேன் இன்னம் எவ்வளவுவேணுமோ அதுவும் கொடுக்கத் தயாராய் இருக்கிறேன் எழுந்திரு என்று உபசரித்தார். சிகாமணி கண்ணை விழித்துக் கொண்டு நீங்கள் இதுவரையில் வராமல் பண்ணின மோசத்திற்கு இங்கு நான் படுக்கிறதில்லை என்று எழுந்துவெளியே வந்து உள்கதவை சாற்றி பூட்டிவிட்டாள், கதவை என் பூட்டுகிறாய் என்று நாகரத்தினப்பிள்ளை கேட்க சுந்தரி நீங்கள் கோபித்துக் கொண்டு வெளியே போய்விடுவீர்களே என்றுதான் பூட்டினாள் என நாகரத்தினப்பிள்ளை படுத்துக் கொண்டார், சிகாமணி பிரபுவினிடம் போய் சற்றே படுத்துக்கொண் டிருந்துவிட்டு, என்னை எப்பொழுதும் ஸ்திரமாய் வைத்திருக்கிறவர் வந்து விட்டார், நீங்கள் போய்விடுங்கள் பிறகு பார்த்துக்கொள்ளலாம் நான் எங்கேபோய்விடுகிறேன் என, அவர் சரியென்று போய்விட்டார். நிலவு வெளிச்சம் ஆய்விட்டதால் மத்தியானம், தான் வரச்சொன்ன வீட்டிற்கு அவர் வந்திருப்பார் என்றுவீட்டைவிட்டுகிளம்பி அந்த வீடுபோய், உடையாரோடு இருந்துவிட்டு காலையில் தன் வீடுவந்த பிறகு, நாகரத்தினப்பிள்ளையவாள் சயன அறையை திறந்து விட்டு, பல்விளக்கப் போங்கள்என்று அவரைபோகச்சொல்லிவிட்டு ராத்திரி முழுதலும் கண்விழித்தவளானதால் கதவை சாற்றி தாழ்ப்பாள் போட்டு படுத்துத் தூங்கினாள். நாகரத்தினப்

பிள்ளை வீடுபோய் சாப்பிட்டு சுந்தரி வீடுவந்ததும், சுந்தரி நேற்று பணமூட்டை என்றதும் நேற்றுவெட்கப்பட்டயளே அந்த மூட்டை இன்று எங்கே என்று கேட்க,

நாகரத்தினப்பிள்ளை — ஏதோ இன்று வரஇல்லை அனேகமாய் நாளையதினம்வந்துவிடும் என்று சொன்னார். கெடுப்படி மறுநாளும் வராததால், தாசிகள் இருவரும் இவரை ஏகதேசமாய்ப் பேச ஆரம்பித்து விட்டார்கள். கிளப்பில் கொடுத்த ஒரு ரூபாய் பணமும் சாப்பிட்டாய்விட்டது, வீட்டிற்கு மறுபடி போனார். மீனும்பாள் இவர் வரவை எதிர்ப்பார்த்து சந்தோஷித்து தான் பக்கத்துவீட்டில் போய் வேலைசெய்து வாங்கிவந்த அரிசியை சமயல்செய்து போட்டாள். சாப்பிட்டு ஆனதும் தாசிவீடு சென்றார். மீனும்பாள் தான் வேலைசெய்து அதனால் கிடைக்கும் கூலியைக் கொண்டு தன் புருஷனுக்கு சமையல் செய்துபோட்டு மீதம் இருந்தால் சாப்பிட்டுக்கொண்டே தன் காலத்தைத் தள்ளினாள். நாகரத்தினப்பிள்ளை முன்னிலையிலேயே வேறு பிரபுவிடம், பேசுகிறது இவரை லக்ஷியம் பண்ணுகிறதில்லை, என் வீட்டிற்கு ஏன் வந்தாய் என்கிறது, இப்படியாக கஷ்டப்படுத்த ஆரம்பித்து விட்டார்கள். இவர் ஏராளமான சொத்துக் கொடுத்தவரானதால், உனக்கு அது கொடுத்தேனே, இது கொடுத்தேனே, இப்பொழுது தூறுகிறாயே, உனக்கு தருமமா? என்று கேட்க, சுந்தரி சும்மா கொடுத்தாயோ இந்த பாக்கியத்தை, சீ போ இங்கே நில்லாதே என்றாள்; என்னைத் காவடியாய் அடித்துவிட்டு என் சொத்துக்களை கொள்ளை அடித்ததும் தவிர என்னை வைகிறாயா முண்டை என்று பக்கத்து மூலையில் சார்த்திஇருந்த உலக்கையை எடுத்துக்கொண்டு இடுப்பை முறித்தார். அவள் கத்திக்கொண்டுகீழே விழவே, சிகாமணி இன்னம் அவ்விடமிருந்த பிரபுக்கள் எல்லாரும் நாகரத்தினப்பிள்ளையிடம் சண்டைக்கு

வர தலைக்கு ஒன்று உலக்கையால் வலுவாய் கொடுத்துவிட்டு தன் வீடுவந்து சேர்ந்தார்.

தாசி, இவனை இத்தோடு வெறுமையே விட்டுவிட்டால் மறுபடியும் வந்து ஹிம்சை செய்வான், இதற்கு என்ன செய்யலாம் என்று எல்லோரும் யோசித்துக் கொண்டிருக்கையில் பிடபுக்களில் ஒருவன், இதென்ன ஒரு பிரமாதமா? எனக்கு போலீஸ் இனிஸ்பெக்டரைத் தெரியும், அவருக்கு ஏதாவது சரிப்படுத்திவிட்டு இந்த பயலை திருட்டுகேசில் சம்பந்தப்படுத்தி தண்டித்தாலொழிய நமக்கு உபத்திரவம் செய்யாமலிருக்கமாட்டான் என்றான். சரி அப்படியே செய் கிறது என்று, தான் அடிபட்ட உபத்திரவத்தால் சொல்லி விட்டாள். அவர் ரூபாய் 100 சுந்தரியிடம் சிலவுக்குவாங்கிக் கொண்டுபோய் அதை இனிஸ்பெக்டரிடத்தில் சொத்துகேசு தயார் செய்துவிட்டான். மறுநாள் கொள்ளைக்கேஸில் நாக ரத்தினப்பிள்ளை சம்பந்தப்பட்டதாய் போலீஸ் காரர்கள் பிடித்துப் போய், மாஜிஸ்டிரேட்டினிடம் விசாரணைக்கு வந்து அவர் குற்றத்தை ஸ்தாபித்து, மற்ற குற்றவாளிக ளோடு இவரையும் கடுந்தண்டனை விதிக்கக்கூடிய தனக்கு மேலான ஆபீசுக்கு அனுப்பி விட்டார். இவரை தண்டிக்க வேண்டிய விஷயத்தில் ரூபாய் 1,000-த்திற்குமேல் சிலவு செய்தது மல்லாமல், கேசை நடத்துகிறேன் என்று சொல் லுகிற ஒவ்வொருவருக்கும் இவள் சரீர உதவியுங்கூட இரை மாகச் செய்ய வேண்டியதாயிற்று. ஸெஷன் கோர்டில் நாக ரத்தினப்பிள்ளை போயிருப்பது அவருடைய சம்சாரம் மீனம்பாளுக்குத் தெரியவே ஏழு எட்டு நாளாக வீட் டிற்கு வரவில்லையே என்று நினைத்தேனே, இப்படியா வந் தது எனக்கு மோசம் என்று வாயிலும் வயிற்றிலும் அறைந் துகொண்டு எங்கள் கௌரவமும்போய் சகல ஐசுவரியமும் போய் பந்துக்கள் யாவரையும் துறந்து சாப்பாட்டுக்கும்

கஷ்டப்பட்டு பக்கத்து வீடுகளில் வேலைசெய்துகாலக்ஷேபம் செய்துக் கொண்டிருக்கிற கொடூரமான திசையில் என் பதிக்கு ஆபத்து சம்பவிக்குமா, எதுவேணுமானாலும் போகட்டும் அவர் உயிருக்கு ஹானி இல்லாமல் இருந்தால் போதும் என்று நினைத்தேனே, பரமாதரை நம்பலாகாதென்ற பழமொழியை அடிக்கடி எனக்குச் சொல்லிக் கொண்டிருந்த என் அன்பன் தாசிவலையில் சிக்கி ஆஸ்திகள் இழந்ததும் தவிர சிர தண்டனைக்கும் உள்ளாகிவிட்டாரே, பிரபோ? தங்களை போலீஸ்காரர்கள் ஹிம்சை செய்த பொழுது என்ன பாடுபட்டதோ, ஐயோ என் வயிறு குமறுகிறதே? எனக்கு நடக்க சக்தியும் இல்லையே என்று அலறிக்கொண்டு 3-மைலில் தூரத்திலிருக்கிற பெரியதுரை பங்களாவை விசாரித்துக்கொண்டு ஓடும்பொழுது, பார்த்தவர்கள் யாவரும் இந்த பாக்கியவதிக்கு என்ன தொந்தரவு நேர்ந்ததோ என்று பின்னோடு சென்றார்கள். நாகரத்தினப்பிள்ளை தண்டனைக்கு உள்ளாகப்போகிறார் என்ற சமாசாரம் அவர் சிநேகிதர்களுக்கும் பந்துக்களுக்கும் தெரிந்துவிட்டதால்எல்லோரும்வந்துவிட்டார்கள், சுமார் 1,000 ஜனங்களோடு மீனாம்பாள், பங்களாவிற்கு ஓடி பெரிய துரையின் முன்னால் திடீரென்று விழுந்து அலறினாள். துரையவர்கள் மீனாம்பாளை எழுப்பி விசாரிக்க, மகா உத்தமரான என்புருஷர் ஒருஅக்ஷரம்கூட பொய்சொல்லார், பிறர்சொத்தை விஷமாய் நினைப்பார், அவரை இந்த ஊர் தாசி சுந்தரி மோசம்செய்து சொத்துக்களை அபகரித்துக் கொண்டதும் அல்லாமல், தண்டனைக்கும் உள்ளாக்கி சமுகத்தில் விசாரணைக்கு வந்திருக்கிறார், காப்பாற்ற வேண்டும், என் பக்கத்திற் நிற்கிற இவ்வளவு ஜனங்களும என் புருஷரால ஆதரிக்கபபடடவாகள என்று அழவே, துரை பங்களாவிற்கு வெளியே வந்து பார்க்கையில் கண்களுக்கு எட்டியவரையில் ஒரே கும்பலாய் காணப்பட்ட ஜனங்களும் அவர்கள், கோ என்று அலறிக்கொண்டு

காப்பாற்ற வேண்டும் என்று சொல்லுகிற சத்தத்தையும் கேட்டு உடனே குற்றவாளி நாகரத்தினப்பிள்ளையைக் கூப்பிட்டு விசாரிக்க, நான் ஒன்றும் அறியேன் என்றார், மற்ற கைதிகளைக் கூப்பிட்டு இவன் உங்களோடு சேர்ந்து கொள்ளைக்கு வந்தானா என்று கேட்க, இவர் எங்களோடு வர இல்லை, இவரை எங்களுக்குத் தெரியவே தெரியாது என்றார்கள். ஆனால், நாகரத்தினப்பிள்ளையை விட்டு விட்டார். உடனே போலீஸ்காரர்களுக்கு கட்டளை அனுப்பி கேசின் உண்மையை விசாரிக்க தாசி சுந்தரி வாக்கு மூலத்தால் இவரை பிடித்தோம் என்று தங்கள் குற்றத்தை தாசி தலையில் போட்டார்கள். உடனே தாசிக்கு வாரண்டு பிறந்து அவர்கள் இருவரையும் கைக்கு விலங்குபோட்டு இழுத்துச் சென்றார்கள். ஊரில் உள்ளவர்கள் திருப்தி அடைந்தார்கள்; இவளை விசாரிக்க குற்றவாளி அல்லவென்று தப்பித்துக் கொண்டு வருகிறதற்கு வக்கீல்களுக்கும் சாக்ஷிகாரர்களுக்காகவும் படி செலவுகளுக்கும் செலவு செய்ததில் இவள் சொத்துக்களும் நகைகளும் வீடு முதலியதும் முன் இருந்தது உள்படவும் செலவுசெய்து இவர்கள் மீண்டு வந்தது தெய்வபிரயத்தன மாச்சுது. கடைசியில் கஞ்சிக்குகூட வழியில்லாமல் காலணாகொடுப்பாரும் இல்லாமல் பிச்சைவாங்கி ஜீவித்தார்கள்.

நாகரத்தினப்பிள்ளை வீட்டிற்குவந்ததும் தான் அநியாயமாய் கெட்டுப்போய் விட்டேன் என்று தன்னைத் தானே வெறுத்துக்கொண்டார். தன்னுடைய பெண்டாட்டியால் நாம் மீர்தோம் என்று அவளிடம் அன்புபாராட்டி பந்துக்களின் உதவியால் ஜீவித்துக் கொண்டிருக்கையில், அனந்தரவார்சு பணம் ரூபாய் 50,000 இவருக்கு திராக்ஷேபணையாய் கைக்கு வந்துவிட்டது. அந்தப் பணத்தைக் கொண்டு குடித்தனபாங்காய் இருந்து ஒருபைசா அளவில் விருதா செலவு செய்யாமல் இருந்ததால் 10-வருஷத்திற்கெல்லாம் லக்ஷாதிபதியாய்

குழந்தைகளும் பிறந்தது. சந்தானமும் சம்பத்தும் உடைய வராய் க்ஷேமமாய் வாழ்ந்துகொண்டிருக்கிறார். தாசி சுந்தரி ஒரு குச்சுவீட்டில் மாதம் 3-அணுவாடகைக்கு சுப்பிரமணி யப்பிள்ளை வீட்டிற்கு பக்கத்து வீட்டில் இருக்கிருள்.

இவ் விஷயங்களெல்லாம் தெரிந்து கொண்ட சாரதாம் பாள்தேவடியாள் வைத்துக்கொண்டால்,நாகரத்தினப்பிள்ளை மாதிரிதான் முடியுமோ என, சுப்பிரமணியப்பிள்ளை இல்லை சில உத்தமான தாசிகள் இருக்கிறார்கள், அவர்கள் இந்த மாதிரி செய்யமாட்டார்கள், கலியாணம் பண்ணின பெண் டாட்டியை விட பதின்மடங்கு அனுகூலமாய் இருப்பார்கள் என்ருர். ஆனல்தங்களுக்கு தாசிபழக்கமும் உண்டா? என, இல்லை கேழ்வையில்மட்டும் சொல்லுகிறேன் என்று சுப்பிர மணியப்பிள்ளை சொல்ல அது விஷயமாயும், இன்னம் பல விஷயமாயும், இருவரும் தினம் விவகரித்துக்கொண்டு அந்த பட்டணத்திலேயே ஆறுமாதகாலமாய் இருக்கிருர்கள்.



## எட்டாம் அத்தியாயம்.



சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில்
நீர்மையுடையார் சொலின்.

பக்ஷிராஜபுரத்தில் சக்கராயப்பட்டி ஜமீன் முருகப்பிள் ளையவாள் நிச்சய தாம்பூலத்திற்கு அனேக பரிவாரங்களோடு பெண் வீட்டிற்கு கிளம்பினர் என்று முன் சொல்லப்பட் டிருக்கிறதல்லவா. இவர் சம்மந்தி ஜாகைக்குப் போனதும் சாரதா தகப்பனர், தமையன், அனேக பந்துக்கள் சினேகி தர்கள் உள்பட மேளவாத்தியத்தோடு மாப்பிள்ளையை எதிர் கொண்டு அழைத்து மங்களஹாரத்தி எடுத்து வீட்டிற்குள் அழைத்துப்போய், வெள்ளிப்பீடத்தில், முருகப்பிள்ளையை அமர்த்தி பிள்ளையவாளோடு கூட வந்தவர்களுக்கும் இதரா ளுக்கும் சர்க்கரை வழங்கி தாம்பூலம் முதலியது கொடுத்து

உபசரித்தார்கள், நிச்சய தாம்பூலத்திற்கு லக்கினம் வந்துவிட்டதா என்று ஜோசியனைக் கேட்க, ராத்திரி $10\frac{1}{2}$-மணிக்குமேல் தான், அதற்குள் போஜனம் பண்ணிக்கொண்டு விடலாம் என்று சொல்ல அப்படியே எல்லோரும் சாப்பாட்டுக்கு உட்கார்ந்து விட்டார்கள். ஏராளமாய் சமையல் செய்யப்பட்டிருந்ததால் சம்மந்திகளுக்கு எதேஷ்டமாய்ப் போட்டு, மிகுதியும் ஆய்விட்டது. சாப்பாடு ஆனதும் நிச்சய தாம்பூலத்திற்கு உட்கார்ந்து, பிள்ளையவாளால் வாங்கிக்கொண்டு வந்த உயர்ந்த பீதாம்பரப்புடவையும் வயிர சந்திரஹாரமும் சபையில் வைக்கப்பட்டிருந்தது. பெண்ணை அழைத்துவர, சாரதா தாயார் மெத்தைமேல் ஏறிப்போய் பார்த்தாள் காணோம், மூலைக்கு மூலை பார்த்தாள் சாரதாம்பாளைக் காணவில்லை, மறுபடி கீழே இறங்கிவந்து தன் மகளைக் காணோம் என்று சொல்லவே காரியத்தை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளாமல் எல்லோரும் தேட ஆரம்பித்துவிட்டார்கள். எதைக் காணோம் என்றதே தெரியாமல் வந்தவர்கள் இருந்தவர்கள் தேடிக்கொண்டிருக்கையில் முருகப்பிள்ளையவாள் யாரைத் தேடுகிறீர்கள் என்று கேட்க, ஒன்றுமில்லை என்னவோ காணோமாம் என்று சொல்லவே பிள்ளையவாளும் விஷயத்தைப் பூர்த்தியாய்க் கேட்காமலே தானும கழியில் தட்டித் தட்டி நடந்துகொண்டு தேட ஆரம்பித்தார். பிள்ளையவாள் தேடிக்கொண்டு போகையில் கூடத்து உள்ளேபோய் விட்டார். அந்த உள் கர்ணாடகமாகக் கட்டப்பட்டிருந்ததால், உள்ளேபோனவர் வெளியேவர வழியொன்றுந் தெரியவில்லை, இவர் என்ன கூப்பிட்டும் வெளியில் இருந்த சந்தடி இறைச்சலால் ஒருவருக்கும் கேழ்க்காததால் இவரால் ஆனவரையில் கத்திவிட்டு நிச்சய தாம்பூலம் நின்றுவிட்டதே என்ற வியாகூலத்தோடு, உள் கொடிகளில் போட்டிருந்த துணிகள், புடவைகள் முதலியவைகளை எடுத்துக் கீழேபோட்டு படுத்துக்கொண்டு அந்த

துணியையே மூடிக்கொண்டு தூங்கிப் போய்விட்டார். இந்த உள் நீங்கலாகபாக்கி இடமெல்லாம் தேடியாய் விட்டது. வெளியில்தேடி னவர்களுக்கு சாரதாம்பாளைக்காணேம் என்று தெரிந்துவிட்டதால், தேடினவர்களில் ஒருவன் விளக்கு வெளிச்சத்துடன் கூடத்துள்ளிற்கு வந்தான். இங்கே முக்காடிட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிற ஜமீன்தாரரைப்பார்த்து சாரதாம்பாள் தான் என தீர்மானித்து, எழுப்பாமல் சாரதா தமயன், சுந்தரப்பிள்ளையிடம் ஓடிவந்து பேர் வழி அகப்பட்டுவிட்டாள் என்றுசொல்ல சுந்தரம்பிள்ளை இத்தனை நாழி அதாவது ராத்திரி 2-மணிவரையில் எங்கள் எல்லோரையும் அலையவிட்டு இந்தக்குட்டி உள்ளேபோய் படுத்துக்கொண்டாள் இவளை நான் ஜமீன்தாருக்கு கலியாணம் பண்ணிவைக்காமல் விட்டுவிடுவேனே, இவளை நான் அடிக்காமல் விடுகிறதில்லை என்று அதிக கோபாவேசத்தோடு பிரம்பை கையில் எடுத்துக்கொண்டு போகவே அவ்விடம் இருந்த எல்லோரும் அவளை அடிக்காதே ஏதோ சிறியவள் தப்பிதம் செய்தால் அதற்காக நாமும் கோபித்துக்கொள்கிறதா என்று என்னசொல்லியும் சுந்தரம்பிள்ளை என்னை அவமானப்படுத்தின இந்த முண்டையை நான் கொஞ்சத்தில் விடுகிறதில்லை என்று உள்ளே ஓடி, முக்காடிட்டு புடவையைப்போட்டு மூடிக்கொண்டு படுத்திருந்த முருகப்பிள்ளையை சாரதாம்பாள் என நினைத்து பிரம்பினல் பளீர் பளீரென்று 5-6- அடி அடித்தவுடன், முருகப்பிள்ளையவாள் ஐயோ! எனக்கு கல்லியாணம் வேண்டாம், நான் ஊர் போகிறேன், இதற்காகவா என்னை இங்கு வரவழைத்தீர்கள் உங்களை நாளைக்கு பார்த்துக்கொள்கிறேன், என்று முக்காட்டை எடுத்துக்கொண்டு பிள்ளையவாள் தலையைக்காண்பித்தார், சுந்தரம்பிள்ளை பிரமித்திப்போய் என்ன தவறுதல் செய்து விட்டேன், சாரதாம்பாள் படுத்துக்கொண்டிருந்ததாக சொன்னதின்பேரில் அடித்துவிட்டேன் மன்னிக்க

வேண்டுமென்று கேட்டுக்கொண்டும் பிள்ளையவாள் கலியாணம்வேண்டாம் என்றுசொன்னரே ஒழியவேறில்லை. பிள்ளையவாளை சேர்ந்தவர்கள் ஓடிவந்து அவரை தேறுதல் சொல்லி வெளியே அழைத்து வந்தார்கள். பிள்ளையவாள் ஒரே பிடிவாதமாய் கலியாணம் வேண்டாம் என்று சொல்லிவிட்டு வெளியேவந்து பல்லக்கு கொண்டுவரச்சொல்லி அதில் ஏறிக்கொண்டு ராத்திரியே சக்கராபப்பட்டிபோய்ச் சேர்ந்தார். சாரதா தகப்பனர் தேவராஜப்பிள்ளைக்கு பெண்காணமல் போனது ஒரு துக்கம், ஜமீன்தாரை அடித்து விட்டதால் அவர் கோபித்துக்கொண்டு போனது ஒரு துக்கம் இவைகளை சகிக்கமுடியாது கத்திக்கொண்டு திண்ணையில் உட்கார்ந்து விட்டார். கோபாலன், சாரதா தாயார் கௌரி ஆச்சி, சுந்தரம்பிள்ளை மூவருமாய் வீடு, கொல்லை புழக்கடை முதலிய சந்துபொந்து, மாட்டுக்கொட்டில், நெல்களஞ்சியம் யாவும் தேடிவிட்டு அந்தத் தெருவில் வீடுதப்பாது தேடியும், பக்கத்துதெருவு சுவற்றும்பாள் வீட்டிலும் போய் பார்த்தும் காணமல் குளம் குட்டை, கிணறு, மரத்தடி முதலிய இடங்களிலும் தேடிப்பார்த்து, மறுநாள் காலையில் வீட்டிற்கு வந்தார்கள். அதற்குள் வீட்டில் ஒருவருமில்லாததால், கலியாணத்திற்கு வந்தவர்களில் சிலர் கையில் அகப்பட்டதை எடுத்துக்கொண்டு சொல்லாமல் ஊர்போய்ச் சேர்ந்தார்கள். கலியாணத்திற்கு வந்திருந்த வித்வான்கள், மேளக்காரர்கள், இருந்தவிடம் தெரியவில்லை. பஞ்சபஞ்ச உஷக்காலத்தில் ஸ்நானம் பண்ணிப்போட்டு விபூதியை பட்டைபட்டையாய் போட்டுக்கொண்டு முந்திப்போய் முகூர்த்தப் பந்தலில் உட்கார்ந்து விட்டால் ஏதோ கூடியவரையில் சுமாரான வரும்படி கிடைக்கும் என்று பறந்துகொண்டு நான்முந்தி நீமுந்தி என்று இடித்துத் தள்ளிக்கொண்டு வந்ததும், கிழவன் சாரதாம்பாள் சாரதாம்பாள் என்று அழுது கொண்டிருக்கிற துக்கத்தைப்பார்த்து, சாரதா இறந்து விட்

டாளென நினைத்து, விசேஷம் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற தங்களை சிரமப்படுத்த இஷ்டமில்லை என்றார்கள். தேவராஜபிள்ளை அதற்கு ஏது வேணுமானாலும் செய்கிறேன் யோசிக்கவேண்டாம் எப்படியாவது பெண்வந்தால் போதுமென்று சொல்ல பிராமணர் அக்கினி வளர்த்தி, அனுமாருக்கு கொஞ்சம் ஆர்த்தி செய்யவேண்டும், அதற்கு அரைக்கால் ஆடம் நெய்யும் கொஞ்சம் திரவியமும் செலவாகும் என, தேவராஜப்பிள்ளை, சுந்தரம்பிள்ளையைக் கூப்பிட்டு சங்கதிகளை சொல்லி அப்படியே செய்து விடும்படி சொல்லிவிட்டார். பிராமண கூட்டங்கள் பள்ளே போய் அந்த கிரியை செய்ய அதுவேணும் இதுவேணும் அந்த தானம் செய்தால் நல்லது என்றுசொல்லி, பணத்தை பிடுங்கிக்கொண்டு ஓமத்தை செய்து பெண் இன்றைய அஸ்தமனத்திற்குள் தானாகவே வந்துவிடுவாள் என்று சொல்லிக் கிளம்பிப் போய்விட்டார்கள். தேவராஜப்பிள்ளை தினம் தவறாது ஜோசியரைத் தருவித்து ஜோசியம் கேட்பதும் மூலைக்கு மூலை மனுஷியாள் அனுப்பி பெண்ணைத் தேடுவதுமாய் இருந்தார். கோபாலனுக்குமட்டும், சாரதாம்பாள், சிவந்தனூர் சுப்பிரமணியப் பிள்ளையிடம் சேர்ந்திருப்பாள் என்ற எண்ணம் உண்டு, ஆனால் அதை வெளியிடாமல் நம்மிடம் அத்தியந்த பிரியமான சுப்பிரமணியன் ஏதோ சில சூதான வேலைசெய்து சாரதாம்பாளைக் கொண்டு போயிருக்கிறான். இது விஷயம் என்னிடமும் சொல்லி, அழைத்துப்போனால் நான் வேண்டாமென்று சொல்லுவேனா காரியம் எவ்வளவு ஒழுங்காய் முடியும் என்று பலவாறாக சுப்பிரமணியப் பிள்ளையிடம் கோபித்துக் கொண்டு இருந்து விட்டான்.

சாரதாம்பாள் இருக்கிற இடம் தெரியாமல் இரண்டு மூன்று மாதமாகவே, தேவராஜப்பிள்ளை கோபாலனைக் கூப்பிட்டு, 200 ரூபாய் பணம் கொடுத்து, பெரிய பட்டணங்க

ளில் போய் இருக்கிறளா பார்த்துவிட்டுவா என்று சொல்லி சில ஊர்களையும் குறிப்பிட்டுச் சொன்னார். கோபாலன் சரியென்று ரூபாயை வாங்கிக்கொண்டு, சுவர்ணாம்பாள் வீட்டில் வந்து விசாரிக்க, அவள் தன் புருஷனோடு கடலூர் போய்விட்டதாகத் தெரிந்தது. அந்த இடத்தை விசாரித்துக் கொண்டு, மறுநாள் கடலூர் போய்ச் சேர்ந்தான். அங்கே போலீஸ் இனிஸ்பெக்டர் சௌந்தரராஜபிள்ளை இருக்கிற வீடு விசாரித்துக்கொண்டு போய் அங்கே சுவர்ணாம்பாளைக் கண்டு விசாரிக்க, அவள் நடந்த விஷயங்கள் யாவும் கோபாலனிடம் சொல்லிவிட்டு, சாரதாம்பாள் போனவிடம் தெரியாததால் அதைப்பற்றி நானும் வியாகூலப்பட்டுக்கொண்டிருக்கிறதாகவும் தெரிவித்தாள். கோபாலன் அன்று முழுதலும் அவ்விடம் இருந்துவிட்டு மறுநாள், சிவந்தலூரார் சுப்பிரமணியப்பிள்ளையிடம் போய் விசாரித்தால் தகவல் புரிந்துவிடும் என்று சுவர்ணாம்பாளிடம் சொல்லிக்கொண்டு சிவந்தலூருக்கு வந்தான். சுப்பிரமணியப்பிள்ளை வீட்டில் கோபாலனுக்கு எல்லோரையும் தெரியாதவனாலும் சுப்பிரமணியப்பிள்ளைக்கு கோபாலன் அத்தியந்த சிநேகிதனானதாலும், இவனைக்கண்டதும் அந்த வீட்டிலுள்ள எல்லோரும் திருப்தி அடைந்து சுப்பிரமணியப்பிள்ளை இருக்கிற இடத்தைக்கேட்க ஆரம்பித்தார்கள். தனது புத்திரன் தன்னை விட்டுப்பிரிந்தது முதல், அன்னம் ஆகாரம் இல்லாமல் எப்பொழுதும் தனது மகனையே நினைத்துக்கொண்டு அழுவதும் குடித்தன விவகாரமாய் தன்னிடம்சொல்லுகிறவர்களிடம் எனது குமாரனை அழைத்து வந்தால் உனக்கு வேண்டிய காரியங்கள் யாவும் செய்து கொடுக்கிறேன் அது வரையில் என் முன்வாராதே என்று யாவரிடமும் சொல்வதும், எங்குபார்த்தாலும்தேடும்படி ஆள் அனுப்புவதுமாக, தன் கையில் இருந்த ரொக்கத்தை எல்லாம் செலவு செய்து கொண்டு ஓயாது வியாகூலத்

தோடு வியாதியையும் அடைந்த சுப்பிரமணியப் பிள்ளையின் தகப்பனார், கோபாலன் வந்தான் என்றதும் தன் மகன் வந்தது போல் நினைத்து படுத்துக் கொண்டிருந்தவர் தைரியமுடையவராய் எழுந்திருந்து, கோபாலனைக் கூப்பிட்டு கேழ்க்கையில், சுப்பிரமணியப் பிள்ளை இருக்குமிடம் தனக்கு தெரியாதென்றும் சுவர்ணம்பாள் சொன்ன விர்த்தாந்தங்களையும் சாரதாம்பாள் கலியாண விஷயமாய் நடந்த காரியங்களையும் கிழவரிடம் ஆதியோடந்தமாய்ச் சொல்லவே கிழவர் தனது குமாரன் சாரதாம்பாளோடு எங்கேயாவது இருக்க வேண்டுமென்று நிர்மானித்துக் கொண்டு கோபாலா? நீ தான் எங்கிருந்தாலும் தேடி அழைத்து வந்து சாரதாம்பாளோடு எனது அருமை மகன் என் வீட்டிலேயே இருக்கும்படி செய்யவேண்டும், நான் யாரைத் தேடும்படி அனுப்பினாலும் காணோம் என்று வருகிறார்களேயொழியவேறில்லை. எனக்கு உடம்பு அசௌக்கியமான பிறகு என்னை எனது இளைய சம்சாரம் க்ஷயம் பண்ணமனும் எனக்கு பைத்தியம் பிடித்துப்போய் விட்டதென்றும் எங்கேயும் யாரிடத்திலும் சொல்லி என்னைத்தள்ளிப் போட்டு தமது சகோதரனுடைய உதவியின் பேரில் என் குடும்பத்திற்கு ஒரு ஐயங்காரை ஏஜண்டாய் நியமித்துக் கொண்டு சகல நடவடிக்கையும் நடத்திக்கொண்டு வருகிறாள். என்னுடைய செல்வ புத்திரன் ஒருவன் இங்கே இருந்தால் இந்த பைசாசங்கள் கிட்ட நெருங்குமா? அவனுடைய தர்மமான புத்தியும் அதிர்ந்து பேசாத வார்த்தையும், யாவரிடத்திலும் பிரியமாய் நடப்பதும், மேன்மையான குணமும், பக்ஷபாதமில்லாத நடவடிக்கையும், சுவஜனாபிமானமும், என்னிடத்தில் அதிகப்பிரியமும், நீழ்ப்படிந்த சுபாவமும் உள்ள என் கண்ணைத் தோர்த்து தெருவில் விட்டு இப்படி அனாதியாய் இருக்கிறேனே கோபாலா! அவனைப்பற்றி நினைத்தால், என்னுடைய சதைகள் ஆடுகிறது, மயிர்க் கூச்சல் அடைகிறது, ஒரு

வரிடமும் பேச மனம் வர இல்லை, என் பிராணனும் இன்னம் 4, 5 நாள்களுக்குமேல் நிற்காது. என்னை உபசரிக்க ஒருவருமில்லை நான் இறக்கிறேன்; என் குழந்தையைக் கண்டால் உன்னால் உன்பிதா இறந்தார் என்று சொல், ஒரு சமயம் நான் இறப்பதற்கு முந்தி என் கண்மணியைக் கண்டுவிட்டால் என் பிராணன் போகாது ஜீவிப்பேன் என்று அலறினார். இந்த சமயத்தில் சுப்பிரமணியப்பிள்ளை இளைய தாயார் சிவகாமி ஆச்சி கோபாலன் வந்திருக்கிறதைப் பார்த்து, சுப்பிரமணியனைக் கண்டாயோ? அவன் சொத்தெல்லாம் எனக்கு எழுதிக் கொடுத்து விட்டு எங்கேயோ போய்விட்டான், அவனுக்கென்ன சாண்பிள்ளையாய் இருந்தாலும் ஆண்பிள்ளை, எங்கே போனாலும் பிழைத்துப்போகிறான் இந்த கிழமோ ஒபாது புலம்பிக்கொண்டு ஜடாயுமாதிரி உட்கார்ந்திருக்கிறது குடித்தனமோ பெரிது, நான் ஒண்டி, சகல காரியமும் பார்த்து நடத்திக்கொண்டு வருகிறேன். எல்லாம் ரொம்ப கிரமமாய் இருக்கிறது என்றாள். கோபாலன் பெரிய குடித்தனம் தகுந்த புருஷர்கள் இருந்து பார்த்தாலே அதிகசிரமமாய் இருக்கும், அதிலும் தாங்கள் பெண்ணாய் இருந்தாலும் கெட்டிக்காரி ஆனதால் கவனித்துக் கொண்டு வருகிறீர்கள் என்றான். சிவகாமி ஆச்சி நானும் ரொம்ப கவனித்து வருகிறேன், தவிர இந்த ஊரில் இருந்த சாமர்த்தியசாலியான அய்யங்கார் ஒருவர் இருக்கிறார் அவருக்கு இந்த குடும்பத்தில் பிரியம் ஜாஸ்தி, தவிர என்னிடத்திலும் விசுவாசம் வெகு நாளாய் உண்டு அவரைக்கொண்டு சகலகாரியங்களையும் நடத்தச் செய்திருக்கிறேன். இப்பொழுதுதான் குடித்தனம் சரியான நிலைமைக்கு வந்தது என்றாள்.

கோபாலன் வாஸ்தவந்தான் கேழ்விப்பட்டேன், சுப்பிரமணியப்பிள்ளை இருந்தாலுங்கூட இவ்வளவு விமரிசையாய் நடக்காது.

சிவகாமி ஆச்சி — கிழவன் முன்னால் அவன் விஷயம் பேசினால், அவருக்கு சுருக்கென்று இருக்கும் உள்ளே வாரேயன் அவனுடைய கெட்ட நடத்தையை சொல்லுகிறேன் என்று கூப்பிட்டாள்.

கோபாலன் கிழவரிடம் இதோ வருகிறேன் என்று சொல்லிவிட்டு, உள்ளே போனான். அங்கே சிவகாமி ஆச்சி தன்னை சுப்பிரமணியப்பிள்ளை கற்பழிக்க எத்தனித்தான், இன்னும் என்னென்னவோ தவறுதல்கள் செய்தான் கடைசியாக என்னால் சகிக்க முடியவில்லை "அறுத்துக்கொண்டதாம் கழுதை எடுத்துக்கொண்டதாம் ஓட்டம்" என்பது போல் நாடிமாறிபோல் ஓடிப்போய் விட்டான். இப்பொழுது எனக்கென்ன நஷ்டம் என்று சுப்பிரமணியப்பிள்ளைக்கு விரோதமாகச் சொன்னாள்.

கோபாலன் சரிசரி யென்று கேட்டுக் கொண்டிருந்து விட்டு நாம் இங்கே சாப்பிடவும் கூடாது, இந்த முண்டை மகாபாபி, அய்யங்காரை வைத்துக்கொண்டு குடித்தனத்தை அழிக்கிறாள், சுப்பிரமணியப்பிள்ளையை எங்கு இருந்தாலும் தேடி அழைத்துவந்து அப்புறம் இவளுக்குத் தகுந்த சிக்ஷை பண்ணவேண்டும் என யோசித்து, நான் ஊர்போய் வருகிறேன் உத்திரவு கொடுங்கள், வண்டி கார்த்துக்கொண்டிருக்கிறது என்றான். சிவகாமிஆச்சி சாப்பிட உபசாரம் பண்ணியும் கோபாலனுக்கு சாப்பிட மனம் வர இல்லை. பிறகு அவளிடம் சொல்லிக்கொண்டு, கிழவரிடம் வந்தான் அவரிடம் கூடிய சீக்கிரம், சுப்பிரமணியப்பிள்ளையோடு இங்கே வருகிறேன் என்று சொல்லிக்கொண்டு அந்த ஊரில் ஒரு பிராமணர் வீட்டில் வந்து, பணம் கொடுத்து சாப்பிடலாமா என்று கேட்க அவர் சரியென்று ஒப்புக்கொண்டார். அப்படியே சாப்பிட்டுவிட்டு, சுப்பிரமணியப்பிள்ளைவீட்டு சங்கதிகளை விசாரிக்க அந்த பிராமணன், மகாகுடிகேடி சிவகாமி

ஆச்சி, தர்மசீலனை சுப்பிரமணியப்பிள்ளையை துரத்தி விட்டு ஒரு அய்யங்காரை வைத்துக்கொண்டு பாபி வெகு இம்சை செய்கிறாள். கிழவர் புத்திர சோகத்தில், கீழேவிழுந்தவர் எழுந்திருக்கிறதில்லை, குடித்தனத்தைப்பற்றி கவனிக்கிறதும் இல்லை, இந்த ஊரில் அவர் வீட்டில் பிழைக்கக் கூடிய அநேக ஏழைக்குடிகளை அநியாயமாய்க் கெடுத்துவிட்டாள், நாங்கள் படுகிறபாடு சொல்லவேண்டியதில்லை, ஈசுவரனிடம் ஒப்புவித்துவிட்டு சிவ, சிவ என்று இருக்கிறோம்; வருஷா வருஷம் எங்களுக்கு கொடுக்கும் வர்த்தனையை இந்த வருஷம் அடியோடு நிறுத்திவிட்டாள். நாங்கள் 6-மாதககாலமாய் தவிக்கிறோம், உங்களிடத்தில் பணம் வாங்கிக்கொண்டா சாப்பாடு போடுவோம் இல்லாத கொடுமையால் இப்படிச் செய்கிறோம், ஐயா! இன்னம் கொஞ்சநாள் ஆச்சி நாட்டாமையில் இருந்தால் நாங்கள் எங்கேயாவது ஓட வேண்டியதுதான், மகாராஜன் அய்யங்கார் குடித்து வைத்தான் நன்றாக பிடுங்கித்தின்கிறான், இந்த அல்ப காலத்திற்குள் கூட 10,000 த்திற்குமேல் சம்பாதித்துப் போட்டான், அவன் இல்லாமல் அரைக்கால் நிமிஷங்கூட ஆச்சி இருக்கிறதில்லை என்று பிராமணன் சொன்னதை கோபாலன் கேட்டு அதிக வியாகூலமடைந்து பிராமணரிடம் விடைபெற்றுக்கொண்டு அந்த ஊரைவிட்டுக் கிளம்பினான்.

கோபாலன் சிவந்திபுரம் இருந்து புறப்பட்டதுமுதல் பகல் தங்கின இடம் இராத்தங்காமல் ஊர் ஊராய் தேடிக்கொண்டு ஒரு இடத்திலும் சாரதாவையும் சுப்பிரமணியப்பிள்ளையையும் காணாததால் அதிகவியாகூலமடைந்து கடைசியாக சாமுண்டிப்பட்டணம் வந்துசேர்ந்தான். இவ்விடத்தில் அவர்களைக் கண்டாலாச்சுது, இல்லாதவரையில் இனி வேறு எங்கும் தேடுகிறதில்லை ஊர்திரும்புகிறதுமில்லை, இங்கேயே நானும்ஒருவர் கண்ணிலும் தென்படாமல் ஏதாவதுஆகாரத்

திற்குமட்டும் சுவல்ப ஜீவனம் சம்பாதித்துக் கொண்டுஇருந்தாலிட வேண்டியதுதான் என்ற தீர்மானத்துடன் அந்தப் பட்டணம் முழுவதும்தேடினன். இவர்களைப் பற்றிய பேச்சைபேசாமேனும், 4 நாள் வரையில் தேடிப் பார்த்துவிட்டு அகப்படாததால், கையிலிருந்தபணமும் செலவழிந்துபோய் விட்டதின் பேரில் ஏதாவது உத்தியோகத்திற்கு ஏற்பாடு செய்வோமென்று விசாரிக்கையில் கண்ட்ரோலர்ஸ் ஆபீஸில் குமாஸ்தா வேலை காலியா இருப்பதாய் தெரிந்துகொண்டு, அந்த வேலைக்கு மனுகொடுத்துவிட்டு பதில் உத்திரவை எதிர் பார்த்துக்கொண்டு அந்தப் பட்டணத்திலேயே ஒருகிளப்பில் ஜாகை வைத்துக்கொண்டு இருந்தான்.



## ஒன்பதாம் அத்தியாயம்.



பற்றற கண்ணும் பழமை பாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணேயுள.

சாமுண்டிப் பட்டணத்தில் சாரதாம்பாளோடு சுப்பிர மணியப்பிள்ளை வசித்துக்கொண்டு கண்ட்ரோலர்ஸ் ஆபீசில் வேலை பார்த்து வருகையில் ஒருநாள் உத்திரவுகளுக்கு நகல் எடுத்துக் கொண்டிருக்கையில் குமாஸ்தாவேலைக்கு ரூபா 25 க்கு கோபாலபிள்ளைக்கு ஸன்னது செய்யப்பட்டது என்று உத்திரவு போட்டிருந்த மனுவைப் பார்க்கையில் கோபால பிள்ளை கையெழுத்துமாதிரி இருந்ததைக் கவனித்து மனுவை முழுமையும் வாசித்துப்பார்த்து இது கோபாலபிள்ளை கை யெழுத்துதான் என்று தெரிந்து அவர் விலாசத்தைக்குறித்து சட்டைப்பையில் போட்டுக்கொண்டு கச்சேரி வேலை முடிந்ததும் வீட்டிற்கு வந்தார்.

சாரதாம்பாள் — சுப்பிரமணியப்பிள்ளையைப் பார்த்து இன்று என்ன சீக்கிரமாக வந்து விட்டீர்கள் என,

சுப்பிரமணியப்பிள்ளை—வேலை முடிந்து விட்டது வந்து விட்டேன்.

சாரதாம்பாள் — முகத்தில் சந்தோஷகளையா யிருக்கி றீர்களே என்ன விசேஷம்.

சுப்பிரமணியப்பிள்ளை—நீதான் புத்திசாலி சொல்லேன.

சாரதாம்பாள் — எனக்கு என்ன தெரியும் தாங்கள் முகக்குறியால் சகலவிஷயமும் சொல்லி விடுவீர்கள், தவிர பி. ஏ. பட்டம் பெற்று உத்தியோகம் பண்ணுகிறீர்கள். இன்று ஆபீசில் வந்ததையெல்லாம் படித்து உத்திரவு போட்டீர்களா? என்று சுவாரஸ்யமாய் ஆபீசில் நடக்கும் வேலைகளைப்பற்றி அடிக்கடி சுப்பிரமணியபிள்ளை சொல்லக் கேட்டிருப்பவளானதால் கேட்டாள்.

சுப்பிரமணியப்பிள்ளை — இதைக்கேட்டபோது இவளுக்கு எப்படி இந்த சமாசாரம் தெரிந்தது. ஒருசமயம் கோபால பிள்ளையிடம் விசாரித்துக்கொண்டு வந்துவிட்டாளோ என்று யோசித்து சற்றுப்பொறுத்து நீ எதை உத்தேசித்துக் கேட்கிறாய் என்றார்.

சாரதாம்பாள் — உத்தேசம் என்ன இருக்கிறது மனு வுக்கு உத்திரவு எழுதினீர்களே அதில் ஏதாவது விசேஷ முண்டோ?

சுப்பிரமணியப்பிள்ளை — இல்லை.

சாரதாம்பாள் — ஏதோ விசேஷமிருக்கிறது, அதைச் சொல்லமாட்டேன் என்கிறீர்கள் நீங்கள் சொல்லா விட்டா லும் எனக்குத் தெரியாதா ?

சுப்பிரமணியப்பிள்ளை — உனக்குத்தெரிந்தால் நீதான் சொல்லேன்.

சாரதாம்பாள் — உங்களுக்கில்லாத பொறுப்பு எனக் கென்ன நான் சொல்லவில்லை நீங்களும் சொல்லவேண்டாம்.

சுப்பிரமணியப்பிள்ளை — கோபால பிள்ளை இங்கேவந்தாரோ?

சாரதா—கோபாலபிள்ளையார்? எனக்குத் தெரியாதே.

சுப்பிரமணியப்பிள்ளை — உனது அன்பான சகோதரன் தான்.

சாரதாம்பாள் — என் தமையன் கோபாலனு! நான் பார்க்க இல்லையே? நீங்கள் கண்டீர்களோ?

சுப்பிரமணியப்பிள்ளை — இல்லை அவர் எழுதினமனுவாங்கள் ஆபீசுக்கு வந்து அவருக்கு ரூபா 25-சம்பளம் போட்ட உத்திரவு என்னிடம் வந்தது. நான் வாசித்துப்பார்த்து அவர் விலாசத்தையும் குறித்துக் கொண்டு வந்தேன். இந்தா அந்தவிலாசம்குறித்தகாகிதம் என்றுசட்டைப்பையில் இருந்த காகிதத்துண்டை சாரதாம்பாளிடம் கொடுத்தார்.

சாரதாம்பாள் அதைப்பார்த்துஇந்தஊரிலேகோபாலன் வர நியாயம் ஒன்றுமில்லையே ஒரு சமயம் நம்மைத் தேடிக்கொண்டு வந்திருக்கலாம் எனக்கு அவரைப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் மிகுதியாய் இருக்கிறது. இப்பொழுதேகிளம்புங்கள் போவோம் என்றதும் சுப்பிரமணியப்பிள்ளை சரியென்று சொல்லிவிட்டு வெளியேபோய் ஒருவண்டியை வாடகைக்குப் பேசினர். சாரதாம்பாள் உயர்ந்த புடைவை கட்டிக்கொண்டு அந்த ஊரிலேயே சுப்பிரமணியப்பிள்ளையால் செய்யப்பட்ட நகைகளையும் அணிந்து கொண்டு வந்தாள். அதற்குள் சுப்பிரமணியபிள்ளை வண்டியைக்கொண்டுவந்து வாசல் பக்கத்தில் நிறுத்தி தான் கோச்சுப்பெட்டியில் உட்கார்ந்துகொண்டு சாரதாம்பாளை வண்டிக்குள் உட்காரச்சொன்னர். இவர் உட்காரும்படி சொன்ன ஜாடையைக் கொண்டு ஒருவருக் கொருவர் ஏற இறங்கபார்த்த விமரிசையால் சாரதாம்பாள் உத்தமபுருஷன் எனதுநாதனேடு சேர்ந்

திருக்க எக்காலம் சம்பவிக்குமோ என்னை அக்னிசாக்ஷியாய் கலியாணம் பண்ணுகதினுல் இந்த மகான் என்னைத் தாய் மாதிரி பாவித்துக் கொண்டிருக்கிறார் என்று எண்ணத்தோடு வண்டிக்குள் உட்கார்ந்தாள். சுப்பிரமணியப்பிள்ளை அன்னிய ஸ்திரீகளிடத்தில் ஒருபுருஷன் இருக்கவேண்டிய மரியாதை யோடு எக்காலத்திலும் இருந்து தன் வாழ்நாளைக் கழிக்க வேண்டுமே என்ற எண்ணத்தோடு வண்டியின் கோச்சுப் பெட்டியில் உட்கார்ந்தார். வண்டி இவர்கள் காட்டின தெருநோக்கிச் சென்றது. சாரதாம்பாள் எண்ணமானது தான் மகாபதிவிரதையாயினும் தானாகவே தேடிக்கொண்ட புருஷனிடம், சேர்ந்து வாழாமல் இருக்கிறேமே என்ற ஏக்கம் உண்டாயிற்று. சுப்பிரமணியபிள்ளைக்கோ தானுக வரித் துக்கொண்ட வரையிலும் பாணிக்கிரகணத்தை முன்னிட்டு தனக்கு ஸ்திரீயாக ஆகப்போகிறாள் என்ற எண்ணங் கூட இல்லாமல், அன்னிய ஸ்திரீமாதிரியாகவே நடந்தார். பிரபுக் களே! இவ்விருவர்களில், யார் விசேஷம், அந்தவிசேஷத்தை அனுஷ்டானத்திற்குத் தக்கபடி ஒற்றுமைப் படுத்துங்கள், இவர்கள்வண்டி கோபாலபிள்ளை இருக்கும் தெருவுக்குப் போனதும் வாசலில் நின்றுகொண்டிருந்த கோபாலபிள்ளை சுப்பிரமணியப்பிள்ளையைப்பார்த்ததும் வண்டியிலிருந்த,சுப் பிரமணியபிள்ளை திடீரென கீழே குதித்து, கோபால பிள்ளை யைப் போய் கட்டிக்கொண்டார். கோபால பிள்ளை இவ ரைப் பார்த்தும் மனம் திடுக்கிட்டு, பேசத்தெரியாமல் வாய்குழற, அண்ணு, அண்ணு, என்று சொல்லிக்கொண்டி ருந்தார். இவர்கள் படபடப்பு சற்று தெளிந்ததும் கோபால பிள்ளை தங்களை இன்றுகண்டேனே நான் என்ன பாக்கியம் பண்ணினேன், இந்த ஊரில் வந்த ஒரு மாதமாய் தங்களை எந்த இடத்தில் தேடியும் அகப்படவில்லையே என்னுடைய துக்கத்தைப்பார்த்து சுவாமி தங்களை வலுவிலேயே என்னி டம்சேர்ப்பித்தார்,சௌக்கியமா? சாரதாம்பாள் க்ஷேமமாய்

சுப்பிரமணியப்பிள்ளை — கோபால பிள்ளை இங்கேவந்தாரோ?

சாரதா—கோபாலபிள்ளையார்? எனக்குத் தெரியாதே.

சுப்பிரமணியப்பிள்ளை — உனது அன்பான சகோதரன் தான்.

சாரதாம்பாள் — என் தமையன் கோபாலனா! நான் பார்க்க இல்லையே? நீங்கள் கண்டீர்களோ?

சுப்பிரமணியப்பிள்ளை — இல்லை அவர் எழுதினமனுவாங்கள் ஆபீசுக்கு வந்து அதை அவருக்கு ரூபா 25-சம்பளம் போட்ட உத்திரவு என்னிடம் வந்தது. நான் வாசித்துப்பார்த்து அவர் விலாசத்தையும் குறித்துக் கொண்டு வந்தேன். இந்தா அந்தவிலாசம்குறித்தகாகிதம் என்றுசட்டைப்பையில் இருந்த காகிதத்தன்னை சாரதாம்பாளிடம் கொடுத்தார்.

சாரதாம்பாள் அதைப்பார்த்துஇந்தஊரில்கோபாலன் வர நியாயம் ஒன்றுமில்லையே ஒருசமயம் நம்மைத் தேடிக்கொண்டு வந்திருக்கலாம் எனக்கு அவரைப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் மிகுதியாய் இருக்கிறது. இப்பொழுதேகிளம்புங்கள் போவோம் என்றதும் சுப்பிரமணியப்பிள்ளை சரியென்று சொல்லிவிட்டு வெளியேவந்து ஒருவண்டியை வாடகைக்குப் பேசினர். சாரதாம்பாள் உயர்ந்த புடைவை கட்டிக்கொண்டு அந்த ஊரிலேயே சுப்பிரமணியப்பிள்ளையால் செய்யப்பட்ட நகைகளையும் அணிந்து கொண்டு வந்தாள். அதற்குள் சுப்பிரமணியபிள்ளை வண்டியைக்கொண்டுவந்து வாசல் பக்கத்தில் நிறுத்தி தான் கோச்சுப்பெட்டியில் உட்கார்ந்துகொண்டு சாரதாம்பாளை வண்டிக்குள் உட்காரச் சொன்னர். இவர் உட்காரும்படி சொன்ன ஜாடையைக் கொண்டு ஒருவருக் கொருவர் ஏற இறங்கபார்த்த விமரிசையால் சாரதாம்பாள் உத்தமபுருஷன் எனதுநாதனேடு சேர்ந்

திருக்க எக்காலம் சம்பவிக்குமோ என்னை அக்னிசாக்ஷியாய் கலியாணம் பண்ணுகிறதினால் இந்த மகான் என்னைத் தாய் மாதிரி பாவித்துக் கொண்டிருக்கிறார் என்ற எண்ணத்தோடு வண்டிக்குள் உட்கார்ந்தாள். சுப்பிரமணியப்பிள்ளை அன்னிய ஸ்திரீகளிடத்தில் ஒரு புருஷன் இருக்கவேண்டிய மரியாதை யோடு எக்காலத்திலும் இருந்து தன் வாழ்நாளைக் கழிக்க வேண்டுமே என்ற எண்ணத்தோடு வண்டியின் கோச்சுப் பெட்டியில் உட்கார்ந்தார். வண்டி இவர்கள் காட்டின தெருநோக்கிச் சென்றது. சாரதாம்பாள் எண்ணமானது தான் மகாபதிவிரதையாயினும் தானாகவே தேடிக்கொண்ட புருஷனிடம், சேர்ந்து வாழாமல் இருக்கிறேனே என்ற ஏக்கம் உண்டாயிற்று. சுப்பிரமணியபிள்ளைக்கோ தானாக வரித் துக்கொண்ட வரையிலும் பாணிக்கிரகணத்தை முன்னிட்டு தனக்கு ஸ்திரீயாக ஆகப்போகிறாள் என்ற எண்ணங் கூட இல்லாமல், அன்னிய ஸ்திரீ மாதிரியாகவே நடந்தார். பிரபுக் களே ! இவ்விருவர்களில், யார் விசேஷம், அந்தவிசேஷத்தை அநுஷ்டானத்திற்குத் தக்கபடி ஒற்றுமைப் படுத்துங்கள், இவர்கள்வண்டி. கோபாலபிள்ளை இருக்கும் தெருவுக்குப் போனதும் வாசலில் நின்றுகொண்டிருந்த கோபாலபிள்ளை சுப்பிரமணியப்பிள்ளையைப்பார்த்ததும் வண்டியிலிருந்த, சுப் பிரமணியபிள்ளை திடீரென கீழே குதித்து, கோபால பிள்ளை யைப் போய் கட்டிக்கொண்டார். கோபால பிள்ளை இவ ரைப் பார்த்தும் மனம் திடுக்கிட்டு, பேசத்தெரியாமல் வாய்குழற, அண்ணா, அண்ணா, என்று சொல்லிக்கொண்டி ருந்தார். இவர்கள் படபடப்பு சற்று தெளிந்ததும் கோபால பிள்ளை தங்களை இன்றுகண்டேனே நான் என்ன பாக்கியம் பண்ணினேன், இந்த ஊரில் வந்த ஒரு மாதமாய் தங்களை எந்த இடத்தில் தேடியும் அகப்படவில்லையே என்னுடைய துக்கத்தைப்பார்த்து சுவாமி தங்களை வலுவிலேயே என்னி டம்சேர்ப்பித்தார், சௌக்கியமா? சாரதாம்பாள் க்ஷேமமாய்

இருக்கிறாளா ? என்று கேட்டார். சுப்பிரமணியப் பிள்ளை, க்ஷேமந்தான் சாரதாம்பாள் இதோ வண்டியில் இருக்கிறாள் என்று சொல்வதற்கு முந்தி கோபாலபிள்ளை வண்டியினிடம் ஓடி சாரதாம்பாளைப்பார்த்து, இத்தனைநாளாய் நீ எங்கேயோ போய் இறந்துவிட்டாய் என்று எண்ணியிருந்தோமென்று சொல்லிக்கொண்டே கோ என்று அலறினார். சாரதாம்பாளும் தன் தமையனைக் கண்டதும் கண்ணில் ஜலம் தாரை தாரையாய்ப் பெருக அழுதாள். இதற்குள் சுப்பிரமணியப்பிள்ளை ஓடிவந்து இருவரையும் சமாதானப்படுத்தி கோபாலபிள்ளையின் பெட்டி உடுப்பு எல்லாவற்றையும் அவர் வைத்துக் கொண்டிருந்த ஜாகாவிலிருந்து எடுப்பித்துவந்து அவரைத் தன் வண்டியோடே தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றார்.

இவர்கள் வீடு போனதும் அஸ்தமனம் ஆகிவிட்டது, அவரவர்கள் விஷயங்களைப்பற்றி பேசிக்கொண்டிருந்தார்கள், சாரதா சுப்பிரமணியப்பிள்ளை சங்கதிகளை ஆதியோடந்தமாய் கோபாலபிள்ளை கேட்டு, மிகுந்த துக்கத்தை அடைந்தார். பக்ஷிராஜபுரத்தில் ஜமீன்கலியாணவைபவத்தைக்கேட்டு எல்லோரும் சிரித்தார்கள். இப்படியாக, அன்று இரவு கழித்தார்கள். மறுநாள் கோபாலபிள்ளைக்கு வேலைக்கு உத்திரவு வந்து விட்டதால் கோபாலபிள்ளை நானும் இந்த ஊரிலேயே இருந்து விடுகிறேன் இனி ஊர் திரும்புகிறதில்லை என்றார். மறுநாள் உத்திரவோடு கோபால பிள்ளை கச்சேரிக்குப் போய்த் தனக்கு ஏற்படுத்தியிருந்த வேலையில் அமர்ந்தார்.

இப்படியாக, சாமுண்டிபட்டணத்தில், கோபாலபிள்ளை, சுப்பிரமணியப்பிள்ளை, சாரதாம்பாள் மூவரும், வேலைக்காரி இவர்களுக்கு சமையல்செய்துபோட ஆனந்தமாய்வாழ்ந்துக் கொண்டிருக்கையில், ஒருநாள், கோபாலபிள்ளை சுப்பிரமணியப்பிள்ளையைப்பார்த்து தாங்கள் விவாகம் இல்லாமல் இருப்பது சரியல்ல, கையில் வெண்ணையை வைத்துக் கொண்டு

றெய்க்கு அழுவதை ஒப்பாய் இருக்கிறது. நாமெல்லோரும் ஊருக்குப்போய், விவாகத்தை முடித்துக் கொண்டு பிறகு வேலைக்கு வந்து விடுவோம்; இவ்விடத்தில் விவாகத்தை முடிக்க எத்தனித்தால் கலியாணசம்மந்தமான சம்ப்ரதாயம் நமக்கு ஒன்றும் தெரியாது, நாம் ஒருமாதத்திற்கு லீவுவாங்கிக்கொண்டால் போதும் என்று சொல்ல, சுப்பிரமணியப் பிள்ளை சரியென்றார். சாரதாம்பாள் இன்று தினமே ஊருக்கு கிளம்பி விடுவோமா என்றாள். கோபாலபிள்ளை இன்று கிளம்ப முடியாது, நாளைய தினம் லீவுக்குமனுக்கொடுத்தால் மறுநாள் உத்திரவாகும், உடனே புறப்பட்டு விடலாம் என்றார். ஊருக்குப்போக வேண்டிய எத்தனங்கள் ஆய்விட்டது. இவர்கள் மறுநாள் மனுக்கொடுத்தார்கள், ஒருமாதம் லீவுக்கும் உத்தரவு ஆயிற்று, இவர்கள் குறித்த தினத்தன்று சாயரக்ஷை, தனது ஊரில் இல்லாத அபூர்வமான சாமான்களும் பழ வகைகளும் வாங்கிக்கொண்டு சாயரக்ஷை ரயிலுக்கு புறப்பட்டுப்போய் கூடலூர்ஸ்டேஷனுக்கு டிக்கட்டுவாங்கிக் கொண்டு ரயிலில் ஏறிவிட்டார்கள். ராத்திரி 9-மணிக்குரயில் கிளம்ப, சூரிய உதயத்திற்கு சென்னைத்துப்பட்டி ஸ்டேஷன் வண்டி வந்தது, அந்த ஸ்டேஷன் ஜங்க்ஷன் ஆனதாலும் வெகுதூரம வந்த பிரயாணிகள் கொஞ்சம் ஆகாரம் செய்து கொள்ளவேண்டியதற்காகவும், இஞ்சின் மாற்ற வேண்டியதற்காகவும் அவ்விடத்தில் வண்டி ஒரு மணி தேசகாலம் நிற்கும். வண்டியிலுள்ள பிரயாணிகள் எல்லோரும் தங்கள் மூட்டைக்கு ஒருவரைக் காவல் வைத்து விட்டு தாங்கள் வெளியேபோய்விட்டுவந்து மறுபடி அவரைப்போகச்சொல்வது வழக்கம்; அப்படியே, சாரதாம்பாளை வண்டியில் சாமான்களைப் பார்த்துக்கொண்டு இருக்கச் செய்து சுப்பிரமணியப் பிள்ளையும் கோபாலபிள்ளையும், பக்கத்துக் குளத்திற்கு கால் கை சுத்திசெய்துகொண்டு வரப்போனார்கள். இவர்கள்போன

10-நிமிஷத்திற்கெல்லாம் வயதுசென்ற ஒருவன் இந்தவண்டி கிட்ட ஓடிவந்து அம்மா? தங்களுக்குப் பக்ஷிராஜபுரமோ என்றான். ஆம் என சாரதா, கிழவன் நான் என்னசொல்லப் போகிறேன், இரண்டுபேர் சிறுவர்கள் அதிகபலமுடையவர் களாய் இருக்கிறார்கள் அவர்கள் எங்கேயோ திருட்டுகேசில் சம்மந்தப்பட்டதாக போலீஸ்காரர்கள் பிடித்துக்கொண்டு போனார்கள்; என்னைக்கூப்பிட்டு, பக்ஷிராஜபுரம்ஒருஅம்மாள் வண்டியில் உட்கார்ந்திருக்கிறாள் அவளிடம் போய் சொல்லி சாமுண்டிபட்டணம்போகிற இந்தமெயிலிலேயேஏறிபோய் அந்தப் பட்டணம் இறங்கி, அவர்களுடைய ஆபீசு பெரிய துரையினிடம் சங்கதிகளைச் சொல்லி, அவரைக்கொண்டு இந்த ஊர்போலீஸ் இனிஸ்பெக்டருக்கு நன்நடத்தைக்காக லெட்டர் எழுதச்சொல்லு என்று சொன்னார் எனவே, சார தாம்பாள் திடீரென்று திடுக்கிட்டு இந்த ஆபத்திற்குநான் என்ன செய்வேன், அடுத்த வண்டியில் எப்படி ஏறுவேன், ஜகதீசா என்னை இப்படி அவஸ்தைப்படுத்த எத்தனை நாள் காத்து இருந்தாயோ எனக்குத்துணை ஒருவரும் இல்லையே என்று அழவே, கிழவன் அழாதே அம்மா நான்சாமுண்டிப் பட்டணம்தான் போகிறேன், டிக்கட்டு வாங்கிக்கொண்டு வருகிறேன் பயப்படாதேயுங்கள் எழுந்திருங்கள் என்று சொல்லி, மூட்டைகளோடு, அடுத்த வண்டியில் சாரதாம் பாளை உட்காரச்சொல்லி, தானும் உட்கார்ந்தான். டிக்கட்டு எங்கே என்று சாரதாகேட்க, இதோ முன்னமேயே அந்த பிரபு என்னை வாங்கிக் கொண்டு போகச்சொல்லி பணம் கொடுத்தார் நான் உங்களிடம் வரும்பொழுதே வாங்கிக் கொண்டு வந்து விட்டேன் என்றான். இவர்கள் வண்டியில் உட்கார்ந்த இரண்டு நிமிஷத்திற்கெல்லாம் அந்தரயில்கிளம்பி விட்டது, போகும்பொழுது சாரதாம்பாள் அதிக வியசன முற்றவளாய் இருந்தாள். ஆனால் கிழவன் அவளுக்கு தேறு தல் சொல்லிக்கொண்டு பயப்படாதே அம்மா, அந்தப்பட்ட

ணத்தில், பெரிய சவுக்கார் இருக்கிறார், அவரிடம் தங்கள் சமாசாரங்களைச்சொல்லி, துரைகளுக்கு சிபார்சு செய்து, தக்ஷணமே, உங்கள் மனுஷியாளை விடுதலை செய்விக்கிறேன் யோசிக்கவேண்டாம், ஏதோ காலவித்தியாசம் தங்களுக்கு இந்தமாதிரி நேர்ந்தது, சீக்கிரத்தில் தங்கள் விபத்துகள் நீங்கி வெகு சௌக்கியமாய் வாழப் போகிறீர்கள், சாவுக்கார் சாமான்னியமானவரல்ல வெகு கெட்டிக்காரர், தவிர அந்த பட்டணத்திற்கு கோடீசுவரர். ஒரு சமயம் அந்தப் பட்டணத்தை ஆளும் ராஜனுக்குப்பணம் வேண்டுமென்றாலும் இவர் தான் கடன் கொடுக்கிறது, அவர்பெயர் கங்காதரசவுக்கார் என்றான். சாரதாம்பாள், யோசித்துப்பார்த்து நாங்கள் குடியிருந்த வீட்டிற்குப் பக்கத்து மெத்தை வீட்டில் இருக்கிறாரோ அவரா ? என்று கேட்க, ஆம், அம்மா என்றான். அவருடைய கொள்ளைகள் யாவும் எனக்கு தெரியவை உண்டு அவரைமட்டும் நான்பார்த்ததில்லை ஆகிலும், அவர்வீட்டிற்கு நான் வரமாட்டேன், எங்கள் வீடுபோய் என் புருஷர் சொல்லியபடியேதான் நான் செய்யவேண்டும் என்று மனவருத்தத்தோடு சொல்லி வழி நெடுக அழுது கொண்டே தாகத்திற்கு தண்ணியும் குடிக்காமல் பட்டினியோடு, அன்று இரவு 7-மணி சுமாருக்கு சாமுண்டி பட்டணம் வண்டி வந்து சேர வண்டியிலிருந்து கீழே இறங்கினாள். தன் சாமான்களைப்பற்றி கொஞ்சம் கூட கவனிக்கவில்லை, பட்டினியாய் இருந்தவளானதால் கண் இருட்டிப் போய் நிற்கவும், திடனற்று கண்ணீர் சொரிய நடக்க மாட்டாமல் தள்ளாடிக் கொண்டு தான் என்ன செய்வது என்ற ஏக்கத்துடன் திகைத்துப்போய் நின்றாள், கிழவன் சாமான்களை இறக்க அங்கு நின்ற வேலைக்காரர்களைக் கொண்டு மூட்டையை எடுத்துக்கொண்டு, சாரதாம்பாளை அழைத்துக் கொண்டு டிக்கட்டைக் கொடுத்துவிட்டு, அங்குநின்ற கோச்சில் ஏறி சாரதாம்பாளை உட்காரச் சொல்ல, வாடகை வண்டி

யாய இருக்கலாம் என்று நினைத்து சாரதாம்பாள் உட்கார்ந்தாள். கிழவன் தானும் வண்டியில் உட்கார்ந்துக்கொண்டு வண்டிக்காரனை ஓட்டச்சொல்ல, அவன் 5-நிமிஷத்தில் சாமுண்டி பட்டணத்திற்கு வெளியே, மலையடி வாரத்தில் இருக்கிற சாவுகார் பங்களாவிற்கு கொண்டுபோய்ச் சேர்த்தான். வண்டி நின்றதும் சாவுக்கார் வெளியே ஓடிவந்து பார்க்க, சாரதாம்பாள் வந்து விட்டாள் என்று தெரிந்து சந்தோஷமடைந்து, கோச்சின் பக்கத்தில் ஓடிவந்து கதவைத்திறந்து தாயே, மெதுவாய் இறங்கு என்றான். சாரதாம்பாள் இவன் செய்கிற உபசாரத்தைப் பார்த்து ஏதோ நம்மை மானபங்கப்படுத்த உத்தேசித்து, இவன் வேலைக்காரனைக் கொண்டே நம்மை மோசடிசெய்து அழைத்து வரச் செய்திருக்கிறான். இதைக்கொண்டு என் அன்பர்களுக்கு ஒருவித உபத்திரவம் உண்டாகி இராது என்னைத் தேடிக்கொண்டு நாளைக்கே இங்கு வந்துவிடுவார்கள், ஆனால் அவர்கள் வந்து என்னை மீட்டுக்கொண்டு போகும்வரையில் எனது கற்பைக் காப்பாற்றிக் கொள்ள வேணுமே, அதற்கு நான் என்னசெய்வேன் எல்லா வற்றிற்கும் கடவுள் தான் துணை, என்று தான் தைரியம் விடாமல் தன் வியசனத்தை விட்டுவிட்டு, சந்தோஷக் குறிப்போடு உடம்பு முழுவதும் அழுக்காய் இருப்பதால் ஸ்நானம் பண்ணிப்போட்டு பிறகு சாவகாசமாய் பேசிக்கொள்வோமே என்றாள். சவுக்கார் தன்னை அறியாத மகிழ்ச்சியுடன், வென்னீர் கொண்டு வரச் சொன்னான், சாரதாம்பாள் ஸ்நானம் பண்ணிப்போட்டு வேறு புடவையைக் கட்டிக்கொண்டாள். இவள் ஸ்நானம் பண்ணுவதற்குள் சவுக்கார் முதலாக எல்லா வேலைக்காரர்களும் வேண்டிய சிசுருஷை செய்தார்கள். உடனே சாப்பாடு தயாராய் இருந்தது, சாரதாம்பாளை சாப்பிட உபசாரம்பண்ண, இவள்தான் 6-மாதமாய் சமையல் செய்து சாப்பிடுவதே ஒழிய அன்னியர் சமைத்து சாப்பிடுகிற

தில்லை என்றார், இப்பொழுது சமையல் செய்யவும் சக்தியில்லை யென்றார், தயவுபுரிந்துகொஞ்சம் பால்தருவித்துக் கொடுக்க லாமென்றும்சொல்லினள். சவுக்கார் என்ன உபசாரம்பண்ணி யும் சாரதாம்பாள் கேட்காததால், 10-சேர் பாலைவைத்துகல் கண்டு திராக்ஷைப்பழம் முதலியதுபோட்டு ஒருசேராக காய்ச் சிக்கொண்டு வந்து சாரதாம்பாளிடம் கொடுக்க அதை சாப் பிட்டு சற்று நின்று கொண்டிருக்கையில், சவுக்கார் அம்மா? நிற்கவேண்டாம் உப்பரிகைக்குப் போவோம் வாருங்கள். அங்கே நல்ல படுக்கைகள் இருக்கிறது படுத்துக் கொள்ள லாம் எனவே சாரதாம்பாள், உயர்ந்த படுக்கையில் இப் பொழுது படுத்துக்கொள்ள இஷ்டமில்லை எனக்கு உடம்பு ரொம்ப அசௌகரியமாய் இருக்கிறது, தங்களுக்கு என்னைப் பார்த்ததும் தெரியவில்லையா, இப்படியே ஒரு அறையைக் காண்பித்தீர்களானால் படுத்துக் கொள்கிறேன், காலமே தங் களிடம் பேச எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன என் றாள். சவுக்கார் அதிகமாய் நிர்பந்திக்கக் கூடாது என்று ஒரு அறையைக் காட்டி அதில் படுத்துக்கொள்ளச் சொன்னான். அப்படியே சாரதாம்பாள் அந்த அறையில்போய் தரையில் படுத்துக்கொண்டு தன் நிர்பாக்கிய திசையை யோசித்து அழுது கொண்டே தூங்கிப்போய் விட்டாள்.

சவுக்கார் தான் வெகுநாளாய் சாரதாம்பாளிடம் லக்ஷி யம் வைத்துக் கொண்டிருந்தான். பட்டணத்தி லிருக்கிற இவன் வீட்டிற்குப் பக்கத்து வீட்டில் சாரதா இருந்ததால் ஓயாது, மெத்தையின்மேல் ஏறி நின்று கொண்டு அடுத்த வீட்டு முற்றத்தில் எப்பொழுதாவது நிற்கும் சாரதாவைப் பார்ப்பான். சாரதாம்பாள் ஒருநாளும், இவனையாவது வேறு யாரையாவது தலை நிமிர்ந்து பார்த்ததில்லை, எப்படி யாவது சாரதாவை கொண்டுவந்துவிட ஆன பிரயத்தனப் பட்டும் முடியவில்லை. தன் புருஷன் சுப்பிரமணியப்பிள்ளை

இருந்தால் வீட்டில் முன் கட்டில் வருவாள், அவர் இல்லாமல் கச்சேரிக்கு போயிருக்கும் சமயங்களில் வாசல் கதவை தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு உள்ளேயே இருப்பாள். தான் ஒரு நாளும் தனியே, வீட்டின் வாசல்படிக்கு கூட வந்ததில்லை. இப்படிப்பட்ட நிலைமையில் சவுக்கார் சாரதாவை எப்படி கைப்பற்ற முடியுமென்று சமயம் பார்த்துக்கொண்டே இருந்தான், இவர்கள் ஊருக்குப் புறப்படும் பொழுது, சவுக்கார் தன்னிடம் வெகுநாளாய் டாபர் உத்தியோகம் செய்துகொண்டிருந்த கிழவனைக் கூப்பிட்டு சங்கதிகளைச் சொல்ல அவன் இது ஒரு பிரமாதமா, நாளைய ராத்திரி அந்தப்பெண்ணை நம்முடைய பங்களாவிற்கு கொண்டுவந்து விடுகிறேன் நானும் அவர்களோடு ரயிலுக்குப் போகவேண்டும் செலவுக்கு பணம் கொடுங்கள் என்று கேட்க சவுக்கார் ரூ. 100-அக்கிழவனிடம் கொடுத்தனுப்பினான். இவர்கள் ரயில் ஏறும்பொழுது அவனும் கூடவேறிவிட்டான். அவன் சொன்னபடியே தந்திரம் பண்ணிக்கொண்டுவந்து சேர்ப்பித்துவிட்டான். சவுக்கார் கிழவனைப் பார்த்து எப்படிக் கொண்டுவந்தாய் என்று கேட்க கிழவன் சென்னைத்துப்பட்டி ஸ்டேஷனில் வண்டி நிற்கிறது, அங்கே அந்தப்பயல்கள் வெளியேபோக இறங்கி விட்டார்கள், எனக்கும் அந்த லக்குத்தவிர வேறுகிடையாது, அவர்கள் இறங்கி, கொஞ்ச தூரம் போனதும், இந்த அம்மாளிடம் வந்து சரியானபடி ஒரு பொடிவைத்து அடுத்த வண்டியில் மாற்றி உட்காரவைத்தேன், வண்டி உடனே விட்டுவிட்டான், வரும்பொழுது வண்டியில் அழுத அழுகை, கண் சிவந்துபோய் விட்டது. தங்கள் சமாசாரம் சொல்லச்சொல்ல தைரியமாய் இருந்தாள், பட்டணம் ஸ்டேஷனில் இறங்கினோம், தங்கள் கோச்சு வந்திருந்தது, ஏறிக்கொண்டுவந்து தங்களிடம் பெண்ணை சேர்ப்பித்து விட்டேன், இனி வெகு ஜாக்கிறதையாய் இருக்க

வேண்டும், இது முதல் ஒருவருஷம் வரையில் அந்தப் பெண் இருக்கிறது ஒரு பிராணிக்குந் தெரியக் கூடாது என்று கிழவன் சொல்ல, சவுக்கார் ஒரு சமயம் பட்டணத்தில் இருந்தாலும் வெளிக்குத் தெரிந்து விடும் பங்களாவில் ஒரு ஈக்கு கூட நுழைய இடமிராத இவ்விடத்தில் யார் வருவார்கள். எவர்களுக்குத் தெரியும் என்றான். சவுக்கார் அன்று இரவு முழுவதும் தூக்கமில்லாமல் பிதற்றிக் கொண்டே இருந்தான். மறுநாள் பொழுது விடிந்ததும், தனது மகள் ராதாபாய் அம்மாளைக் கூப்பிட்டு இப்பொழுது வந்திருக்கிறாளே இந்தப்பெண், இவளோடு கூடவே இரு, அவளுக்கு வேண்டிய காரியங்களை வேலைக்காரர்களை விட்டு செய்யச்சொல்லு உஷார், நான் அரண்மனை போகவேண்டியதாய் இருக்கிறது, போய்விட்டு, 10-மணிக்குவந்துசேர்ந்து விடுகிறேன் என்று சொல்லி, காவல்காரர்களுக்கும் உத்திரவு கொடுத்து விட்டுப்போய் விட்டான். ராதாபாய் சவுக்காருடைய ஒரே பெண், தாயார் இறந்து மூன்று வருஷம் ஆயிற்று, இவர்களுக்கு புனாதேசத்தில் பந்துக்கள் இருக்கிறார்களே தவிர இந்தப்பட்டணத்தில் ஒரு பிராணியும் சொந்தமில்லை, வியாபார நிமித்தம் 30-வருஷங்களுக்கு முன்சவுக்கார் இந்த பட்டணம் வந்து ஏராளமான பணம் சம்பாதித்து, வீடு, பங்களா முதலியது வாங்கிக்கொண்டு இங்கேயே நிலைத்து விட்டான். ராதாபாய் மகாபுத்திசாலி, மிகுந்த அழகுவாய்ந்தவள், தன் தகப்பன் வீட்டில் வேலைசெய்கிற இரண்டொரு வேலை ஆள்கள் நீங்கலாக வேறு புருஷர்களை பார்த்ததே யில்லை தான் ருதுவாகி 2-வருஷம் ஆகியும் தன்னைவிவாகம் செய்து கொடுக்காமல் வைத்திருக்கிறாரே என்று தானே ஒருவரிடமும் சொல்லாமல் வியாகூலப் படுவாள், சவுக்காருக்கு எப்பொழுதாவது சந்தோஷம் வந்தால், ராதாபாய் நாம் இன்னம் 4-தினத்திற்கெல்லாம் புனாபோவோம், அங்கே உனக்கு

கலியாணம் செய்து கொடுத்துவிட்டு, உன் மாமன் வசம் உன்னை விட்டுவிட்டு வருகிறேன் என்பான். கடைசியாய் போகிறது மட்டும் இல்லை. எப்பொழுதாவது, ராதா, புறு போவோமா என்றாலோ எனக்கு வேலை இருக்கிறது, வரு கிற வருஷம் பார்த்துக்கொள்வோம் என்பான். இப்படியாக சொல்லிக் கொண்டே, அவன் மகளை கவனிக்காமல் தன் சுய நன்மையைப் பாராட்டிக் கொண்டு அன்னிய ஸ்திரீ பழக்கத்தில் ஆழ்ந்து இருந்தான்.

சாரதாம்பாள், ராதா பாயின் உதவியின் பேரில் அன்று காலமே ஸ்நானம் செய்து விட்டு தனக்கு மட்டும் கொஞ்சம் சமையல் செய்துகொண்டு சாப்பிட்டாள். ராதா பாய் இவளிடம் காட்டின அன்பிற்குமெச்சி, சவுக்காரின் நடவடிக்கைகளை விசாரிக்கையில், ராதாபாய் தன் தாயார் இறந்த பிற்பாடு தான் படும் துன்பங்களை சாரதாம்பாளிடம் சொல்ல, சாரதா கேட்டு துக்கித்து தன்னுடைய நிர்பாக்கிய நிலைமையை உத்தேசித்து நான் வியாகூலப்படும் இந்நிலை மையில், உன் விஷயங்களைக்கேட்கும் பொழுது என்னுடைய வியாகூலங்கள் நீங்கிப்போயிற்று என்று மனவருத்தப்பட் டாள். ராதாபாய் சாரதாப்பாளைப் பார்த்து, நீ எப்படி இந்த கொடியவன் கையில் அகப்பட்டுக்கொண்டாய் என்றுகேட்க, தன்னுடைய விர்த்தாந்தங்கள் யாவும் ஆதியோடந்தமாய் சொன்னாள், ராதாபாய் இந்த அல்ப காரியங்களுக்கு நான் வருத்தப் படுகிறேன், உன்னுடைய காரியங்களை கேட்கும் பொழுதே எனக்கு படபடக்கிறது. அல்பமா, நீ மகா நல்ல வள் மாதிரி காண்கிறது. என் தகப்பன் வந்த உடன் அவரு டன் சிற்சில வார்த்தைகளாடி அவனை சந்தோஷிப்பிக்கச் செய்து, நான் தங்களைக் கலியாணம் செய்துக் கொள்வதில் சந்தேகமில்லை, நல்ல வம்சத்துப் பெண் ஆனதாலும், இது வரையில் கலியாணம் இல்லாமல் கன்னிகையாய் இருப்பதா

லும் தாங்கள் என்னை அக்கினிசாக்ஷியாய் விவாகம் செய்து கொள்ள வேண்டியது இல்லாத வரையில் தாங்கள் கொலை செய்தாலும் சரி மற்ற விவகாரங்களுக்கு உடன் படேன் என்று சொல்; சரிதான் என்று ஒப்புக்கொள்வார், இந்த மாதம் அடுத்தமாதம் இரண்டும் சூனியமாதமாதலால், இந்த மாதங்கள் கழித்துதான் விவாகம் செய்யப்பிரயத்தனப் படுவான். அதற்குள் நாம் வேண்டிய காரியங்களைச் செய்து வெளியேபோய்விட ஏற்பாடுசெய்து கொள்வோம், நீ இருக்கும்வரையில் தான் இங்கே நானும் இருப்பேன் பிறகு தனியே தங்கமாட்டேன், உன்னுடன் நானும் வந்துவிடு றேன் என்றாள். சாரதாம்பாள் ராதாபாயின் மேன்மையான குணத்திற்கு மெச்சி அப்படியே செய்கிறது என்றாள். அந்த வார்த்தையைக் கேட்டுக்கொண்டே சவுக்கார் உள்ளே வந்தார், சாரதா, ராதா இருவரும் மறைந்து கொண்டார்கள். சவுக்கார் உள்ளேபோய் ஆகாரம் பண்ணிப்போட்டு வெளியேவந்து நாற்காலியில் உட்கார்ந்ததும், சாரதாம்பாளைக் கூப்பிட்டார், சிரித்த முகத்தோடு சாரதாம்பாள் சவுக்கார் முன்னிலையில் போய் நிற்க சவுக்கார் என்னசந்தோஷம், சிரித்துக்கொண்டே வருகிறாயே என சாரதா, எனக்கு இன்னம் விவாகம் ஆகவில்லை, மகாபாதகன் சுப்பிரமணியபிள்ளையிடம் அகப்பட்டுக் கொண்டேன் அவனுக்கு என்னை கலியாணம் செய்துகொள்ள சக்தியில்லாமல் வெறுமையே வைத்துக் கொண்டிருந்தான்: பரம ஏழையாகிய என்னை புண்ணிய புருஷராகியதம்மிடம் தெய்வம் கொண்டுவந்து சேர்த்ததே என்று சந்தோஷமடைந்தேன், இன்று காலையில் தங்கள் புத்திரியோடு கலியாண விஷயமாய்ப் பேசிக்கொண்டிருக்கையில் இந்த இரண்டுமாதமும் சூனியமாதங்கள், இதுகழித்துத்தான் கலியாணம் பண்ணவேண்டு மென்றாள். மகாபாக்கியசாலியான தங்களிடம் சேர்ந்தும் இரண்டுமாதப்பொழுது வியர்த்தமாய் எப்படி கழிப்பேன் என்ற வியாகூலம் உண்டாயிற்று

தாங்கள் கூப்பிடும் பொழுது புருஷனிடம் ஸ்திரீ வருவது போல நினைத்துக் கொண்டேன், கலியாணம் நடப்பதற்கு முந்தி பாவனை பண்ணிக்கொண்டேனே என்று சிரிப்பு உண்டாயிற்று என்றாள். சாரதாம்பாளை சவுக்கார் கேட்பதற்கு முந்தி எல்லா விஷயங்களைமுடிவாய்ச் சொன்னதைகொண்டு சவுக்கார் திருப்தியோடு இரண்டுமாதம் இரண்டு நாளாய்ப் போய்விடுகிறது. அதற்கு விசாரப்படுவானேன் என்றான். அதற்குள் ராதாபாய் நான் என்னசொல்லியும் கேழ்க்கமாட்டேன் என்கிறாள் என, அப்படியே ஆகட்டும என்று சொல்லிவிட்டு தன் வேலையை கவனித்துக் கொண்டிருந்தான.

சென்னைக்குப் பட்டி ஸ்டேஷனில் இறங்கி கால் கை அலம்பப் போன சுப்பிரமணியப்பிள்ளை கோபாலபிள்ளை இருவரும திரும்பிவந்து வண்டியைப்பார்க்க வண்டியில்சாரதாம்பாளைக் காணாததால் அதிக வியாகூலப்பட்டுக் கொண்டு விசாரிக்கையில் ஒருபெண் அழுதுகொண்டு அந்த வண்டியில் ஒருகிழவன் உதவியின்பேரில ஏறிக்கொண்டு போய்விட்டாள என்று நிறம, குறி அடையாளத்தோடு ஒருவன்சொல்ல என்னவோ மோசம் வந்துவிட்டது என்று அலறிக்கொண்டு நமமைப் பார்க்கிலும நிர்பாக்கியஸ்தன் உலகில் ஒருவரும் இல்லை, எனக்குஅப்படி யப்பட்டஆபத்துவந்தாலும்பெரிதல்ல கேவலம ஸ்திரீ மகாநல்லவள் இவளுக்கு இந்தமாதிரி சம்பவித்ததே என்று ஒருவருக்கொருவர் விசனித்துக் கொண்டு பகல 1-மணிவரைக்கும அந்த ஸ்டேஷனிலேயே காத்துக்கொண்டிருந்து, அப்பொழுது வரும் வண்டியில் ஏறிக் கொண்டு, ராத்திரி 1-மணிக்கு சாமூண்டி பட்டணம்போய்ச் சேர்ந்தார்கள். அவ்விடம் தங்கள் வீட்டிற்குப போனதும் வீட்டில் காவல் வைத்திருந்த வேலைக்காரன் கதவைத் திறந்ததும் அவனைப்பார்த்துசாரதாம்பாள்இங்கு வந்தாளோ என்று கேட்க இல்லையெனவே காலையில் தான் விசாரிக்க வேண்டுமென்று உள்ளேபோய்கொஞ்சம் ஆகாரம பண்ணியபோட்டு